# சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி) கலிமா

## முதலாம் கலிமா தய்யிப் : اَوَّلْ كَلِمَةْ طَيِّبْ

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ 'லா இலாஹ இல்லல்லாஹு"

வணக்கத்துக்கு பாத்திரவான் யாருமில்லை. அல்லாஹு தஆலாவைத் தவிர.

مُحَمَّدٌ رَّسُوْلُ اللّٰهِ "முஹம்மதுர்ரசூலுல்லாஹ்"

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹுத்தஆலா வுடைய திருத்தூதராயிருக்கும்.

இதன் விபரமாவது... அல்லாஹு தஆலாவைத்தவிர ஆலமென்னும் நாம் முதல் சகல வஸ்தும் இல்லாமலிருந்து உண்டாயிருக்கிறது. இல்லாமையில் நின்டும் அதை உண்டெங்கிறதளவில் வெளிப்படுத்திய நாயன் அல்லாஹு தஆலா உண்டென்கிறதின் பேரில் எந்த ஒரு சந்தேகமுமின்றி துலாம்பரமாய் திடனாக ஷாஹித் (சாட்சி) சொல்வது கொண்டு வணக்கத்துக்கு அவனே பாத்திபமல்லாது ஆலமோ, ஆலத்துடைய ஜுஸ்உ (படைப்பு)களில் யாதொரு ஜுஸ்வும் பாத்திபமல்லவென்று தெளிவாக அறிந்து நின்னயங்கொண்டு விண்ணப்பம் செய்கிறேன். அவனையே வணங்குவேன். அவனைக் கொண்டே உதவி தேடுவேன். அவன் ஆலத்துக்கு (படைப்புகள் யாவற்றிற்கும்) ஒவ்வா வண்ணமானவன் (ஒப்புவமை இல்லாதவன்) ஒருவன்,

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

ஹயாத்து(ஜீவியம்), நாட்டம், அறிவு, சத்துவம்(ஆற்றல்), கேள்வி, பார்வை, திருவசனம் (பேச்சு) உள்ளவன். சகலத்தையும் உண்டாக்குகிறவன். அவன் தன்னைக் கொண்டு நிலைபாடானவன். ஆலம் அவனைக் கொண்டு நிலைபாடாயிருக்கிறது. ஆலத்தில் எந்த வஸ்தும் அவனது அறிவு, நாட்டம், சத்துவத்தை விட்டும் புறப்படாது (வெளியேறிவிட முடியாது). ஆனதால் தேட்டமும், நாட்டமும் அவனாகவே இருக்க வேண்டும்.

நம்முடைய நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும், மற்ற நபிமார்களும் ஈமான், வணக்கம், மார்க்கமென்றால் இதுதான் என்றும், நற்குணங்கள் இதுதானென்றும் அறிவிக்கிறதற்காக அனுப்பப்பட்ட மனித குல மாணிக்கங்கள். நம்பிக்கைக்குரிய விசுவாசர்கள். அவர்களில் முந்தினவர்கள் ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் பிந்தினவர்கள் நம்முடைய நைனார் (தலைவர்) முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமாயிருக்கும். அவர்கள் தான் எல்லோரைக் காட்டிலும் வரிசையானவர்கள் (உயர்ந்த அந்தஸ்தும், சிறப்புமுடையவர்கள்) அவர்களது நுபுவ்வத் (நபித்துவம் அகிலம்) எங்கும் அடைய வளைந்ததாயிருக்கும். அவர்களது சொல், செயல், ஏவல், விலக்கல் அவர்கள் அறிவித்த அனனத்து விஷயத்திலும் அவர்களை உண்மையாக்கி வைத்து அவர்களைத் தொடர்ந்தேன் (பின்பற்றினேன்). உள்ரங்கம், வெளிரங்கத்திலும் அவர்களது உத்தரவுக்கு தலை சாய்க்கிறதும், அவர்களை உவக்கிறதும்,

(நேசிக்கிறதும்) அவர்களை சங்கை அதபோடு (ஒழுக்கத்தோடு) திக்ர் செய்யுறதும்(நினைவு கூர்வதும்) ஃபர்ள் (கட்டாயக் கடமை) ஆகும். உங்களில் ஒருவரும் அவரலவில் அல்லாஹ், ரசூல் இருவரும் பிள்ளை, பெற்றோர், மற்ற அனைவரைக் காட்டிலும் உவப்பாகிற வரையில் ஈமான் கொண்டவராக மாட்டார் என ஹதீஸ் வந்துள்ளது. ஆக அல்லாஹ்வும் அல்லாஹ்வுடைய ரசூலும் மற்ற அனைவரையும், மற்ற அனைத்தையும் விட விருப்பமாயிருக்கிறதே ஈமானாகும். அறிவீர்! ஈமானுடைய அகீதா (கொள்கை)கள் அடங்களும் (யாவும்) லா இலாஹ இல்லல்லாஹ் எனும் சிறப்பாகிய கலிமாவுக்கு கீழே புகுந்துள்ளது. ஆகவே யாதொரு அறிவுள்ளவன் பாலிகான வுடன் (பருவ வயதை அடைந்தவுடன்) முந்தி " லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்" எனும் சிறப்பாகிய கலிமாவைப் படித்து அதன் பொருளை விளங்குகிறது ஃபர்ளு. அதை மிகுந்து திக்ர் செய்வது ஈமானை பலப்படுத்தும். கல்புகளை (இதயங்களை) பிரகாசிக்கச் செய்யும்.

## 2-ம் கலிமா ஷஹாதத் : شَهَادَةٌ

أَشْهَدُ "அஷ்ஹது" பிசகற (தெளிவாக) அறிந்து விண்ணப்பம் (சாட்சி) செய்கிறேன்.

أَنْ لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ "அல்லாஇலாஹ இல்லல்லாஹ்" உண்மையாக வணக்கத்துக்கு பாத்திரவான் அல்லாஹு

தஆலாவைத் தவிர யாருமில்லை. وَحْدَهُ "வஹ்தஹு" அவன் தனித்தவன். لَا شَرِيْكَ لَهُ "லாஷரீகலஹு" அவனுக்கு யாதொரு இணையுமில்லை. وَاَشْهَدُ "வ அஷ்ஹது" இன்னும் பிசகற அறிந்து விண்ணப்பம் செய்கிறேன். اَنَّ مُحَمَّدًا "அன்னமுஹம்மதன்" உண்மையாக முஹம்மத் அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம். عَبْدُهُ "அப்துஹு" அவனுடைய உரிய (விசேஷ) அடியாருமாய், وَرَسُوْلُهُ "வரசூலுஹு" உண்மை தூதருமாயிருக்கும்.

## 3-ம் கலிமா தம்ஜீது : تَمْجِيْد

سُبْحَانَ اللّٰهِ "சுப்ஹானல்லாஹி" அல்லாஹு தஆலா தூயவன். وَالْحَمْدُ لِلّٰهِ "வல்ஹம்துலில்லாஹி" எல்லா புகழும் அல்லாஹு தஆலாவுக்காயிருக்கும்.

وَلَا اِلٰهَ اِلَّا اللّٰهُ "வலா இலாஹ இல்லல்லாஹு" வணக்கத்துககு பாத்திரவான் அல்லாஹு தஆலாவைத் தவிர (வேறு) யாருமில்லை (எதுவுமில்லை).

وَاللّٰهُ اَكْبَرُ "வல்லாஹு அக்பர்" அல்லாஹு தஆலா ரொம்பவும் பெரியவன்.

وَلَاحَوْلَ ‘வலாஹவ்ல‘‘ யாதொரு பாவத்தை விட்டும் திரும்புதலுமில்லை. وَلَاقُوَّةَ ‘‘வலாகுவ்வத்த‘‘ யாதொரு இபாதத்தின் (நன்மையின்) பேரில் பலமுமில்லை.

إِلَّا بِاللّٰهِ الْعَلِيِّ الْعَظِيْمِ

‘‘ இல்லாபில்லாஹில் அலிய்யில் அளீம்‘‘

வலுப்பமாகிய, உயர்த்தியாகிய அல்லாஹு தஆலாவின் உதவி கொண்டே தவிர.

4-ம் கலிமா தவ்ஹீது : تَوْحِيْد

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ ‘‘லா இலாஹ இல்லல்லாஹு‘‘ வணக்கத்துக்கு பாத்திரவான் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை.

وَحْدَهُ ‘‘வஹ்தஹு‘‘ அவன் தனித்தவன் لَاشَرِيْكَ لَهُ ‘‘லாஷரீகலஹு‘‘ அவனுக்கு யாதொரு இணையுமில்லை.

لَهُ الْمُلْكُ ‘‘லஹுல்முல்கு‘‘ அவனுக்குடையதாய் இருக்கும் ராஜாங்கம். وَلَهُ الْحَمْدُ ‘‘வலஹுல்ஹம்து‘‘ அவனுக்குடையதாயிருக்கும் எல்லா புகழும் يُحْيِيْ ‘‘யுஹ்யீ‘‘ மவ்த்தானவர்களை ஹயாத்தாக்குவான்.

وَيُمِيْتُ ‘‘வயுமீத்து‘‘ ஹயாத்தானவர்களை

மவ்த்தாக்குவான். بِيَدِهِ الْخَيْرُ "பியதிஹில் கைர்" அவன் வசமாயிருக்கும் நல்வடங்களும்

وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ "வஹுவ அலா குல்லி ஷைஇன் கதீர்" அவன் வஸ்துக்கள் அனைத்தின் மீதும் திராணி (ஆற்றல்) மிக்கவன்.

5-ம் கலிமா ரத்து கு.்.ப்ர்: رَدُّ كُفْرٍ

اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنْ اَنْ اُشْرِكَ بِكَ شَيْئًا وَّ اَنَا اَعْلَمُ

"அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மின்அன் உஷ்ரிக பிக ஷைஅவ்வ அன அ.்.லமு" நான் அறிந்தவனாக அறவே உன்னைக் கொண்டு இணைவைக்கிறதை விட்டும் உண்மையாக நான் உன்னைக்கொண்டு காவல் தேடுகிறேன்.

وَ اَسْتَغْفِرُكَ لِمَا لَا اَعْلَمُ

"வ அஸ்த.்.பிருக லிமாலா அ.்.லமு" நான் அறியாததற்கு உன்னிடம் பிழை பொறுக்கத் தேடுகிறேன்.

اِنَّكَ اَنْتَ عَلَّامُ الْغُيُوْبِ

"இன்னக அன்த அல்லாமுல் குயூப்"

நீ கைபு (மறைந்தவை)களை மிக அறிந்தவன்.

تُبْتُ عَنْهُ "துப்து அன்ஹு" ஷிர்கை விட்டும் தவ்பா செய்து மீண்டேன்.

وَتَبَرَّأْتُ عَنْ كُلِّ دِيْنٍ سِوٰى دِيْنِ الْإِسْلَامِ

"வதபர்ர.்.து அன்குல்லி தீனின் ஸிவா தீனில் இஸ்லாம்" தீனுல் இஸ்லாமைத் தவிர மற்ற தீன் அனைத்தையும் விட்டும் நீங்கி விட்டேன்.

وَأَسْلَمْتُ وَأَقُوْلُ "வ அஸ்லம்(த்)து வ அகூலு" நான் இஸ்லாமாகி சொல்கிறேன்.

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ مُحَمَّدٌ رَّسُوْلُ اللّٰهِ

"லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்".

குறிப்பு: இதை அந்தியும், சந்தியும் (காலை, மாலை) ஓதி வருவது கு.்.ப்ரை விட்டும் நீங்குரதுக்கு சபப் (காரணம்) ஆகும்.

## இஸ்தி.்.பார்களுக்கு தலையான

سَيِّدُ الْإِسْتِغْفَارِ 'சய்யிதுல் இஸ்தி.்.பார்'

اَللّٰهُمَّ "அல்லாஹும்ம" யா அல்லாஹ்! أَنْتَ رَبِّيْ "அன்த ரப்பீ" நீ என் ரப்பு.

لَا إِلٰهَ إِلَّا أَنْتَ "லாஇலாஹ இல்லா அன்த"

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

வணக்கத்துக்கு பாத்திரவான் உனையன்றி யாருமில்லை.

خَلَقْتَنِي 'கலக்தனீ' எனை நீ படைத்தாய்.

وَ أَنَا عَبْدُكَ "வ அன அப்துக" நான் உன் அடிமை

وَ أَنَا عَلَىٰ عَهْدِكَ وَ وَعْدِكَ مَا اسْتَطَعْتُ

"வஅனஅலா அஹ்திக வ வ.'.திக மஸ்தத.'.து" நான் என்னால் முடிந்தளவு உடன்படிக்கை, வாக்குறுதிக்கு கட்டுப்பட்டுள்ளேன்.

أَعُوذُبِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ

"அஊது பிக மின்ஷ்ர்ரி மா சன.'.(த்)து" நான் செய்த செயலின் தீங்கை விட்டும் உன்னைக் கொண்டு காவல் தேடுகிறேன்.

أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ

"அபூ உலக பிநி.'.ம(த்)திக அலய்ய" நீ என்மீது செய்த அருளைக்கொண்டும் உனக்கு விண்ணப்பம் செய்கிறேன்.

وَ أَبُوءُ بِذَنْبِي "வ அபூஉ பிதம்பீ"

என் பாவத்தைக் கொண்டும் விண்ணப்பம் செய்கிறேன்.

فَاغْفِرْلِي '.'.பங்.'.பிர்லீ' ஆகவே என்னை மன்னித்தருள்.

فَاِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ اِلَّا اَنْتَ

“.·.ப இன்னஹு லா ய.·.பிருத்துனூப இல்லா அன்த“ ஏனெனில் திட்டமாக உனையன்றி யாரும் பிழை பொறுக்கார்.

குறிப்பு: இந்த இஸ்தி.·.பாரின் பொருளை உணர்ந்து உறுதி கொண்டவனாக பகலில் ஓதி மவ்த் வந்து விட்டால் அவர் சொர்க்கவாசி. இரவில் ஓதி மவ்த் வந்து விட்டாலும் அவர் சொர்க்கவாசி.

## சலவாத் விளக்கம்

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ سَيِّدِنَا مُحَمَّدٍ وَّبَارِكْ وَسَلِّمْ

“அல்லாஹும்ம சல்லி அலா சய்யிதினா முஹம்மதிவ் வஅலா ஆலி சய்யிதினா முஹம்மதிவ் வபாரிக் வசல்லிம்“,

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ النَّبِيِّ الْاُمِّيِّ وَاَزْوَاجِهِ اُمَّهَاتِ الْمُؤْمِنِيْنَ وَذُرِّيَّتِهِ وَاَهْلِ بَيْتِهِ كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

“அல்லாஹும்ம சல்லி அலா சய்யிதினா முஹம்மதினின் நபிய்யில் உம்மிய்யி வ அஜ்வாஜிஹி உம்மஹா(த்)தில் மு.·.மினீன வ துர்ரிய்ய(த்)திஹி வ அஹ்லி பை(த்)திஹி

கமா சல்லை(த்)த அலா இப்ராஹீம வ அலா ஆலி இப்ராஹீம இன்ன(க்)க ஹமீதும் மஜீத்". "சல்லல்லாஹு அலா முஹம்மத் சல்லல்லாஹு அலைஹி வசல்லம்" இதுபோல சலவாத் பல வகை உண்டு.

சிறப்பான கலிமா ஷஹாதாவைப்போல் வயசில் (வாழ்நாளில்) ஒரு விடுத்தம் சலவாத் சொல்ல வேண்டியது ஃபர்ளு. இடம்பாடான வக்துகளெல்லாம் சொல்வது முஸ்தஹப். அதை மிகுதமாய் சொல்வது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமுடைய ஷஃபாஅத்தையும், சொர்க்கத்தில் அவர்களுக்கு சஹாபியாயிருக்கிறதையும் வருத்தி வைக்கும் (நஸீபாக்கும்). குறிப்பாக வெள்ளிக்கிழமை இரவு, பகலில் அதிகம் சலவாத் ஓத வேண்டும்.

அல்லாஹ்வின் திருநாமத்தை திக்ர் செய்யப்படும் போதெல்லாம் سُبْحَانَ اللهِ "சுப்ஹானல்லாஹ்" அல்லது جَلَّ جَلَالُهُ "ஜல்ல ஜலாலுஹு" அல்லது تَبَارَكَ اللهُ "தபாரகல்லாஹ்" அல்லது عَزَّ وَجَلَّ "அஜ்ஜ வஜல்ல" என்று புகழ்வது வாஜிப். இதுபோல நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய திருப்பெயரை கூறப்படும் போதெல்லாம் அவர்கள் பேரில் சலவாத் சொல்வது வாஜிப்(கட்டாயம்).

அறிவீர்! பிள்ளைகள் பருவமடையும் முன்பே தாய், தகப்பனைத் தொடர்ந்து இஸ்லாமாயிருந்த போதிலும்

பாலிகானவுடனே துவக்கமாக முஜ்மலைக் கொண்டு ஈமான் கொள்வது வாஜிப். பின்பு மு.ஃ.பஸ்ஸலைக் கொண்டு ஈமான் கொள்வதும், ஷரீஅத்திலுள்ள சட்டங்களை கபூல் செய்வதும் வாஜிப்.

சிறப்பாகிய ''கலிமா ஷஹாதா'' முஜ்மலில் நின்டுமுள்ளதாயிருக்கும். இருந்த போதும் புலூகுக்கு (பருவ வயது) முன்பே ஈமான், இஸ்லாமுடைய இல்மைப் படிக்கிறதும், பின்பு வுளூ, முழுக்கு, தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் மற்றும் பர்ளான இல்முகளைப் படிக்க வேண்டும்.

## ஈமான், இஸ்லாமுடைய விளக்கம்

ஈமானாகிறது..

تَصْدِيقٌ بِالْقَلْبِ وَ اِقْرَارٌ بِاللِّسَانِ

''தஸ்தீகும் பில் கல்ப் வஇக்ராரும் பில்லிஸான்'' கல்பால் உண்மையாக்கி நாவால் விண்ணப்பம் செய்வதாகும் (மொழிவதாகும்). நம்மிடம் ஈமானுடைய ஃபர்ளு இரண்டு. அது **முஜ்மல்**, **மு.ஃ.பஸ்ஸல்** என இரண்டு வகை.

**ஈமான் முஜ்மலாவது:**

اٰمَنْتُ بِاللّٰهِ "ஆமன்(த்)து பில்லாஹி" அல்லாஹு தஆலாவைக் கொண்டு ஈமான் கொண்டேன்.

كَمَا هُوَ بِاَسْمَائِهٖ وَصِفَاتِهٖ "கமா ஹுவ பி அஸ்மாயிஹி

வசி.ஃ.பா(த்)திஹி“ அவன் அவனது திருநாமங்களைக் கொண்டும், சி.ஃ.பத்துகளைக் கொண்டும் இருப்பதைப் போல

وَقَبِلْتُ جَمِيعَ أَحْكَامِهِ وَأَحْكَامِ رَسُولِهِ

“வகபில(த்)து ஜமீஅ அஹ்காமிஹி வ அஹ்காமி ரசூலிஹி“ அவனது உத்தரவுகள் அனைத்தையும் அவன் ரசூலுடைய உத்தரவுகள் அனைத்தையும் கபூல் செய்தேன் (ஏற்றுக்கொண்டேன்)

## ஈமான் மு.ஃ.பஸ்ஸலாவது:

آمَنْتُ بِاللّٰهِ “ஆமன்(த்)து பில்லாஹி“ திடனாக அல்லாஹு தஆலா ஒருவன், நிகரிலான், துவக்கமும், முடிவுமில்லாதவன், தன்னைக் கொண்டே (சுயமாக) நிலைபாடானவன். யாதொரு வஸ்தளவிலும் ஹாஜ(த்)தாகான், அவன் ஹயாத் (நித்திய ஜீவன்) உள்ளவன், அறிவுள்ளவன், தத்துவமுள்ளவன், கேள்வியுள்ளவன், பார்வையுள்ளவன், நாட்டமுள்ளவன், திருவசனமுள்ளவன் (அனைத்தையும் படைத்து) உண்டாக்கக் கூடியவன், அவன் ‘‘அணு‘‘ எனும் ஜவ்ஹருமல்ல, பல ஜவ்ஹர் சேர்ந்த சடலமுமல்ல. யாதொரு ஆதாரத்தில் நிலைப்பட்ட அரளுமல்ல. அவன் பெறவுமில்லை. அவனையும் எவரும் பெற்றெடுக்கவுமில்லை. அவனுக்கு எந்த ஒரு ஒப்புவமையுமில்லை என்று ஈமான் கொண்டேன்.

وَمَلَائِكَتِهِ "வமலாயிகதிஹி" திடனாக மலக்குகள் யாவரும் அல்லாஹ்வின் சங்கைமிக்க அடியார்கள். ஒளியால் படைக்கப்பட்டவர்கள். பாவங்களை விட்டும் காக்கப்பட்டவர்கள். அவர்கள் ஆணுமல்ல, பெண்ணுமல்ல. அவர்களுக்கு தாயுமில்லை, தந்தையுமில்லை. உணவோ, குடிப்போ, இச்சையோ, கோபமோ இல்லை. பலபல வணக்கமும், பலபல கோலமுமுள்ளவர்கள். மற்ற படைப்புகள் போல உருவம் எடுக்க சக்தி பெற்றோர். ஏவியதை அப்படியே செய்வார்கள் மாறு செய்ய மாட்டார்கள் என்று ஈமான் கொண்டேன்.

وَكُتُبِهِ "வகுதுபிஹி" திடனாக வேதங்கள், சுஹுஃபுகள் அனைத்தும் அல்லாஹு தஆலா உடைய திருவசனம். அவனால் (நபிமார்களுக்கு) இறக்கி வைக்கப்பட்டது. அவை படைக்கப்படாதது. (அல்லாஹ்வின்) தாத்தோடு நிலை நிற்கிறது (சிஃபாத்தாகும்) அதில் மிக்க சிறப்புடையது குர்ஆன். குர்ஆனைக் கொண்டு முன்னுள்ள வேதங்கள், சுஹுஃபுகள் யாவும் மாற்றப்பட்டது (அதாவது முந்தைய வேதங்கள், சுஹுஃபுகளின் சட்டங்கள் இப்போது இல்லை) கியாமநாள் வரை குர்ஆன் படியே அமல் செய்யப்படும். குர்ஆனை மாற்றப்படாது என்று ஈமான் கொண்டேன்.

وَرُسُلِهِ "வருசூலிஹி" திடனாக நபிமார்கள், ரசூல்மார்கள் அடங்கலும் அல்லாஹுத் தஆலாவைத் தொட்டும்

விஷயங்களை அறிவிக்கிறவர்கள் தூதை எத்தி வைப்போர். (நம்பிக்கைக்குரிய) விசுவாசர்கள். நிஜம் கூறுவோர், பாவங்களை விட்டும் காக்கப்பட்டவர்கள். அவர்கள் யாவரும் ஹக்கான (சத்தியமான) மார்க்கம் கொண்டு அனுப்பப்பட்ட மனிதகுல மாணிக்கங்கள். அவர்களில் முந்தியவர்கள் ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் பிந்தியவர்கள் நமது நைனார் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குப்பின் எந்த ஒரு நபியுமில்லை. அவர்கள் தான் நபிமார்களிலேயே உயர்ந்த அந்தஸ்துடையவர்கள். முத்திரையானவர்கள், அவர்களது நுபுவ்வத் எங்கும் (எல்லா இடத்திற்கும், காலத்திற்கும்) அடைய வளைந்ததாயிருக்கும். அவர்கள் அறிவித்த யாவும் ஹக்கென்று ஈமான் கொண்டேன்.

وَالْيَوْمِ الْآخِرِ "வல்யவ்மில் ஆகிரி"

துடனாக ஒடுக்கம் (கடைசி) கியாமநாள் என ஒரு நாளுண்டு. அந்த நாளில் ம்வ்தானவர்களின் இறந்துபோன அசல் உறுப்புகளை எலும்பாகவும், சதையாகவும் சேகரித்து அதளவில் ரூஹை மீளவைத்து, கப்ரிலிருந்து எழுப்பி, கேள்வி கணக்கு கேட்டு, மு.்.மினானவர்களை தன்னுடைய வரிசை (அருள்) கொண்டு சொர்க்கம் புகுத்தி வைப்பான். கா.்.பிர்களை தன் நீதம் கொண்டு நரகில் புகுத்தி அதாபு செய்வான். பாவியாகிய மு.்.மின்களில் அவன் நாடியபேர்களை அதாபில்லாமல் (வேதனையில்லாமல்) பிழைபொறுத்து சொர்க்கம் புகுத்தி வைப்பான். அவன் நாடிய பேர்களை நரகம் புகுத்தி அதாபு

செய்து பின் அவர்களை தன் அருளை கொண்டு சொர்க்கம் புகுத்தி வைப்பான் என ஈமான் கொண்டேன்.

وَالْقَدْرِ خَيْرِهٖ وَشَرِّهٖ مِنَ اللّٰهِ تَعَالٰى

“வல்கத்ரி கைரிஹி வஷர்ரிஹி மினல்லாஹி தஆலா“ திடனாக அடியார்களின் செயல்களான நன்மை, தீமை, ஈமான், குஃப்ர், தங்கடம், பிரயோஜனம், உசும்புதல், ஒடுங்குதல் அடங்களும் (யாவும்) அல்லாஹ் சுப்ஹானஹு வதஆலா படைத்ததாகும். அந்த செயல்களில் அடியாருக்கு தேர்வு செய்யும் அறிவையும், (செய்வதற்கான) சக்தியையும் படைத்தான். ஆனதால் நலவு செய்தால் சவாபு (நன்மை) கொடுக்கப்படும். தீங்கு செய்தால் அதாபு (வேதனை) செய்யப்படும். அல்லாஹு தஆலாவுடைய பொறுத்தமும், ஏவலும், மஹப்பத்தும் (பிரியமும்) நன்மைகளைக் கொண்டாயிருக்கும். தீமைகளைக் கொண்டில்லை என்று ஈமான் கொண்டேன். ஆக ஈமானுடைய ஷர்த்துகள் (இந்த) ஆறாகும்.

## இஸ்லாமாகிறது:

اَلْاِنْقِيَادُ لِاَوَامِرِ اللّٰهِ تَعَالٰى وَالْاِجْتِنَابُ عَنْ نَوَاهِيْهِ

“அல் இன்கியாது லி அவாமிரில்லாஹி தஆலா வல் இஜ்தினாபு அன் நவாஹீஹி“ அல்லாஹு தஆலாவுடைய ஏவல்களுக்கு வழிப்பட்டு விலக்கல்களை விட்டு தவிர்வதாகும். அதன் ஷர்த்துகள் 5. ஹதீஸில் வந்துள்ளது:...

بُنِيَ الْإِسْلَامُ عَلٰى خَمْسٍ "புனியல் இஸ்லாமு அலாகம்ஸ்" இஸ்லாத்தை 5 காரியத்தின் பேரில் எடுக்கப்பட்டது.

شَهَادَةُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّا اللهُ وَاَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللهِ

"ஷஹாத(த்)து அல்லா இலாஹ இல்லல்லாஹ் வ அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்".

**(ஒன்றாவது)** உண்மையாக வணக்கத்துக்கு பாத்திரவான் அல்லாஹ்வைத் தவிர யாருமில்லை என்றும், உண்மையாக முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹ்வின் திருத்தூதரென்றும் பிசகற அறிந்து விண்ணப்பம் செய்வது

وَاِقَامُ الصَّلٰوةِ " வ இகாமுஸ்ஸலாஹ்".

**(இரண்டாவது)** தொழுகையை நிலை படாக கொண்டு வருவ்து وَاِيْتَاءُ الزَّكٰوةِ "வ ஈ(த்)தா உஜ்ஜகாஹ்"

**(மூன்றாவது)** ஜகாத் கொடுப்பது

وَصَوْمُ رَمَضَانَ " வ சவ்மு ரமழான்"

**(நான்காவது)** ரமழான் மாதம் நோன்பு பிடிப்பது

وَحَجُّ الْبَيْتِ اِنِ اسْتَطَعْتَ اِلَيْهِ سَبِيْلًا

"வஹ்ஜ்ஜுல்பை(த்)தி இனிஸ்த்த(த்)த.்.த இலைஹி சபீலா"

**(ஐந்தாவது)** க.்.பத்துல்லாஹ்விற்குப் போய் ஹஜ்ஜு செய்வது (அங்கு) செல்ல திரணி பெற்றால்.

ஆனபோதே ஈமான், இஸ்லாத்தின் பதினொரு காரியத்தையும் அறிய வேண்டியது அவசியம்.

பின்னர் ஈமான் என்பது உள்ரங்கமாகிய (மனதில்) வழிப்படுதலாயிருக்கும். இஸ்லாமென்பது ஏவல்களுக்கு உள்ரங்கத்திலும் தலை சாய்த்து, வெளிரங்கத்தில் வழிப்படுதலாயிருக்கும். உள்ரங்க வழிப்படுதலின்றி வெளிரங்க வழிப்படுதல் திட்டமாகாது (அது ஏற்கப்படாது). அது போலே வெளிரங்க வழிப்படுதலின்றி உள்ரங்க வழிப்படுதலும் திட்டமாகாது ஆனதால் ஹகீகத்தில் (சரியாகச் சொன்னால்) ஈமான், இஸ்லாம் இரண்டும் ஒன்றே.

**அறிவீர்!** இஸ்லாத்தின் முதலாம் ஷரத்தான கலிமா ஷஹாதா ஈமானாகும். மற்ற 4 ஷரத்தும் அமலாகும். யாதொருவர் தொழுகை நோன்பு, ஜகாத், ஹஜ்ஜை ஃபர்ளென்று உறுதி கொண்டு வாயினாலும் விண்ணப்பம் செய்தபின் (மொழிந்தபின்) சோம்பலால் அதைச் செய்யாவிட்டால் ஃபாஸிக் (பாவி) ஆகி விடுவார்.

நம்மிடத்தில் (ஷரீஅத் சட்டப்படி) சோம்பலால் தொழுகையை விட்டவரை இரத்தம் வழிய கடினமாக அடித்து, அவர் தொழும்வரை சிறையில் அடைக்கப்படும். ஆகிரத்தில் (மறுமையில்) அவருக்கு கடினமான, நீண்ட அதாபுண்டு. ஹதீஸில் வந்துள்ளது.. தொழுகையை வேண்டுமென்றே விட்டவன் காஃபிராகி விட்டான். அதாவது குஃப்ரை நெருங்கி விட்டான் என.



 

# இஸ்தின்ஜா விளக்கம்

சிறுநீருக்குப் போகும் முன் நீரை உறிஞ்சும் துப்புறவான மண்கட்டி (அல்லது அது போன்ற) மற்றதை எடுத்துக்கொண்டுபோய் சிறுநீர் கழித்த பின் மர்மஸ்தானத்தை அடியிலிருந்து மெதுவாய் பிடித்து விட்டு முற்றிலும் நீர் வடிந்த பின் எழுந்து இஸ்திப்ரா செய்து அதாவது மர்மஸ்தானத்தைப் பிடித்தோ, கணைத்தோ, இடது காலை வலது காலில் சேர்த்தோ நன்றாக சிறுநீர் முற்றிலும் வடிந்துவிட்டதை மனம் உணர்ந்த பின் தான் உறிஞ்சும் மண்கட்டி போன்றதால் சிறுநீர் துவாரத்திலுள்ள ஈரத்தை உறிஞ்சி எடுத்து பின் நீரால் கழுவ வேண்டும்.

(இது இஸ்தின்ஜாவின் பரிபூரணமான முறை. வெறும் தண்ணீரால் கழுவினாலும் போதும். தண்ணீர் இல்லாதபட்சத்தில் மண்கட்டி போன்றதால் ஈரத்தை உறிஞ்சி துப்புரவாக்கினாலும் போதும்) கழுவிய பின்

اَللّٰهُمَّ حَصِّنْ فَرْجِيْ وَيَسِّرْ اَمْرِيْ "அல்லாஹும்ம ஹஸ்ஸின் ஃபர்ஜீ வயஸ்ஸிர் அம்ரீ " என்று துஆ செய்வார்.

மல ஜலம் கழிக்கும் போது கிப்லாவை (மேற்கு திசையை) முன்னோக்குவதோ, பின்னோக்குவதோ கூடாது. மக்ரூஹ் தஹ்ரீம். எலும்பு, உணவுப்பண்டம், பளிங்கு, கண்ணாடி போன்ற பொருட்களால் இஸ்தின்ஜா செய்வதோ, மர்மஸ்தானத்தை வலது கையால் தொட்டு கழுவுவதோ மக்ரூஹ் தஹ்ரீம்.

மல, ஜலம் கழிக்க அடுத்தவருக்குச் சொந்தமான கற்களை (அனுமதியின்றி) எடுத்துச் செல்லக் கூடாது. கழிப்பிடம் நுழையும் போது

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُبِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ

"பிஸ்மில்லஹி அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மினல் குப்ஸி வல்கபாயிசி" என்று ஓதி இடது காலை உள்ளே வைத்து புக வேண்டும்.

கழிப்பறைக்குள் பேசக் கூடாது. உட்காரும்போது சளியைத் துப்பவோ, கணைக்கவோ, தேவையில்லாமல் பின்னால் திரும்பிப் பார்க்கவோ உட்காரும் முன் ஆடையை உயர்த்தவோ, அங்கு அதிக நேரம் இருக்கவோ, அவ்ரத்தைப் பார்க்கவோ, மல, ஜலம் கழித்த பின் கூடாது. மர்மஸ்தானத்தை அடியிலிருந்து பிடித்து நீரை முற்றிலும் வெளியாக்கிவிட வேண்டும். பின் 3கல்லால் தேவைப்பட்டால் கூடுதலாகக் கொண்டு மல, ஜலத்தை துப்புரவு செய்ய வேண்டும். (தண்ணீர் இருந்தால் நீராலும் சுத்தம் செய்ய வேண்டும்) பின் அவ்ரத்தை மறைத்தவாறு எழுந்து, வலது காலை வெளியே வைத்து

غُفْرَانَكَ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَذْهَبَ عَنِّيْ مَا يُؤْذِيْنِيْ وَاَمْسَكَ عَلَيَّ مَا يَنْفَعُنِيْ

"ஃகுப்ரானக அல்ஹம்துலில்லாஹில்லதீஅத்ஹப அன்னீ மாயூதீனீ வ அம்ஸக அலய்ய மா யன்ஃபஉனீ" என்று ஓதி வெளியே

வர வேண்டும். (இஸ்திப்ரா செய்ய வேண்டியது பற்றி முன்பே கூறப்பட்டுள்ளது). கழுவும்போது நன்றாக சுத்தமாகி விட்டதாக பிசுபிசுப்பு போய் விட்டதாக மனம் உணரும் வரை நன்றாக தேய்த்துக் கழுவ வேண்டும். பின் சோப்பு அல்லது மண்ணால் கைகளை நன்றாக கழுவிட வேண்டும். இஸ்திப்ரா ஆணுக்கே பெண்ணுக்கல்ல.

## வுளு விளக்கம்

**அதன் ஃபர்ளு எனும் கட்டாயக் கடமை 4.**

1. முகம் கழுவுவது. 2. இரண்டு கைகயையும் முழங்கைகள் உட்பட கழுவுவது. 3. தலையில் 4ல் 1பங்கு மஸஹ் செய்வது. 4. கரண்டை வரை இரு கால்களையும் கழுவுவது.

## வுளுவின் சுன்னத்துக்கள்

மொத்தம் 13.

نَوَيْتُ اَنْ اَتَوَضَّاَ لِرَفْعِ الْحَدَثِ اِمْتِثَالًا لِاَمْرِاللهِ تَعَالٰى

1.நிய்யத்- "நவை(த்)து அன் அதவழ்ழஅ லிரஃப்இல் ஹதஸி இம்திஸாலல் லி அம்ரில்லாஹி தஆலா" அல்லாஹ்வின் ஏவலுக்கு வழிப்பட்டு (சிறு) துடக்கை நீக்குவதற்காக வுளு செய்ய நிய்யத் செய்தேன் என்று குறிப்பிடுவது.

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ بِسْمِ اللهِ الْعَظِيْمِ
وَالْحَمْدُ لِلّٰهِ عَلٰى دِيْنِ الْاِسْلَامِ

2. பஸ்மலா சொல்வது- "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம், பிஸ்மில்லாஹில் அளீம். வல்ஹம்து லில்லாஹி அலா

தீனில் இஸ்லாம்“என்று கூறுவது.

3. இரு கைகளையும் மணிக்கட்டு வரை கழுவுவது.

4. மிஸ்வாக் செய்வது. மிஸ்வாக் குச்சி நாருள்ள மரக்குச்சியாகும். அதில் சிறந்தது உகா என்ற மரக்குச்சி. அடுத்து ஜைத்தூன் மரக்குச்சி (வேப்பங்குச்சி போன்றதையும் பயன்படுத்தலாம்) மிஸ்வாக் கொண்டு பற்களின் உட்புறம், வெளிப்புறம், வேர்ப்பகுதியான ஈர்கள் மற்றும் முரசுகளிலும் தேய்ப்பது. அதன் பலன்கள் பல உண்டு. அதிலொன்று தொழுகையின் நன்மை 70 மடங்குகள் கூடக்கிடைப்பது.

5. 3முறை வாய் கொப்பளிப்பது.

6. 3முறை நாசிக்கு (மூக்குக்குள்) நீர் செலுத்துவது.

7. அடர்த்தியான தாடியை கோதுவது.

8. கை, கால் விரல்களை கோதுவது.

9. கழுவ வேண்டியதை 3முறை அடைய வளைந்து கழுவுவது.

10. தலை முழுவதையும் அடைய வளைந்து ஒரு முறை மஸஹ் செய்வது.

11. தலைக்கு மஸஹ் செய்த அதே ஈரக்கைகளால் இரு காதுகளையும் மஸஹ் செய்வது.

12. குர்ஆன் ஹதீஸில் வந்துள்ளபடி தர்தீபாக (வரிசையாக) வுளு செய்வது.

13. இடை(யில் காய)விடாது தொடர்ந்து வுளு செய்வது.

குறிப்பு: மஸஹ் என்பது ஈரக்கைகளால் தடவுவதாகும்.

## வுளுவின் முஸ்தஹப்புகள்-2

1. வலது புறமிருந்து துவங்குவது.
2. கையின் முதுகை (பின்புறத்தை)க் கொண்டு பிடரிக்கு மஸஹ் செய்வது.

பின் கிப்லா நோக்கி வானத்தைப் பார்த்தவாறு

سُبْحٰنَكَ اللّٰهُمَّ
وَبِحَمْدِكَ اَشْهَدُ اَنْ لَّآ اِلٰهَ اِلَّآ اَنْتَ اَسْتَغْفِرُكَ
وَاَتُوْبُ اِلَيْكَ، وَاَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُكَ
وَرَسُوْلُكَ اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ التَّوَّابِيْنَ،
وَاجْعَلْنِيْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ، وَاجْعَلْنِيْ مِنْ
عِبَادِكَ الصَّالِحِيْنَ، وَاجْعَلْنِيْ مِنَ الَّذِيْنَ
لَاخَوْفٌ عَلَيْهِمْ وَلَاهُمْ يَحْزَنُوْنَ،

‘‘சுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக அஷ்ஹது அல்லாஇலாஹ இல்லா அன்(த்)த அஸ்த.'.Fபிருக வ அதூபு இலைக. வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துக வரசூலுக. அல்லாஹும்மஜ்அல்னீ மினத் தவ்வாபீன் வஜ்அல்னீ மினல் மு(த்)த தஹ்ஹிரீன். வஜ்அல்னீ மின்

இபாதிகஸ்ஸாலிஹீன். வஜ்அல்னீ மினல்லதீன லா கவ்.:. புன் அலைஹிம் வலாஹும் யஹ்ஜனூன்" என்று ஓதி பின் வுளு செய்து மிஞ்சிய நீரை நின்றோ, அமர்ந்தோ கிப்லா நோக்கியவாறு குடிப்பது.

பின் இன்னா அன்ஜல்னாஹு சூராவை 3 தடவை ஓதுவது. வுளு செய்யும் போது கிப்லாவை நோக்கி இருப்பது, தேவையின்றி மற்ற பேச்சுக்களை பேசாமலிருப்பதும், ஒவ்வொரு உறுப்பைக் கழுவும்போதும் பிஸ்மில்லா, கலிமா ஷஹாதா, சலவாத், துஆக்களை ஓதுவதும் அதபாகும்(ஒழுக்கமான வரவேற்கப்பட்ட விஷயங்களாகும்). மிஸ்வாக்கின்போது

اَللّٰهُمَّ اجْعَلْ تَسْوِيْكِيْ هٰذَا تَمْحِيْصًا لِذُنُوْبِيْ وَمَرْضَاةً لَكَ سَيِّدِيْ وَبَيِّضْ بِهٖ وَجْهِيْ كَمَا بَيَّضْتَ اَسْنَانِيْ

"அல்லாஹும்மஜ்அல் தஸ்வீ(க்)கீ ஹாதா தம்ஹீஸல் லிதுனூபீ வ மர்ழாதல்லக சய்யிதீ வ பய்யிழ் பிஹீ வஜ்ஹீ கமா பய்யழ்(த்)த அஸ்னானீ" என்றும், வாய் கொப்பளிக்கும்போது

اَللّٰهُمَّ اَعِنِّيْ عَلٰى تِلَاوَةِ الْقُرْاٰنِ وَذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

“அல்லாஹும்ம அ இன்னீ அலா திலாவ(த்)தில் குர்ஆனி வ திக்ரிக வ ஷுக்ரிக வஹுஸ்னி இபாத(த்)திக“ என்றும், நாசிக்கு நீர் செலுத்தும்போது

اَللّٰهُمَّ اَرِحْنِيْ رَائِحَةَ الْجَنَّةِ وَلَا تُرِحْنِيْ رَائِحَةَ النَّارِ

“அல்லாஹும்ம அரிஹ்னீ ராயிஹ(த்)தல் ஜன்ன(த்)தி வலா துரிஹ்னீராயிஹதன் நார்“ என்றும், முகம் கழுவும்போது..

اَللّٰهُمَّ بَيِّضْ وَجْهِيْ يَوْمَ تَبْيَضُّ وُجُوْهٌ وَتَسْوَدُّ وُجُوْهٌ

“அல்லாஹும்ம பய்யிழ் வஜ்ஹீயவ்ம தப்யழ்ழு வுஜூஹுவ் வதஸ்வத்து வுஜூஹ்“ என்றும், வலது கை கழுவும்போது..

اَللّٰهُمَّ اَعْطِنِيْ كِتَابِيْ بِيَمِيْنِيْ وَحَاسِبْنِيْ حِسَابًا يَّسِيْرًا

“அல்லாஹும்ம அ.:.(த்)தினீ கிதாபீ பியமீனீ வ ஹாஸிப்னீ ஹிஸாபய் யஸீரா என்றும் இடது கை கழுவும்போத்

اَللّٰهُمَّ لَا تُعْطِنِيْ كِتَابِيْ بِشِمَالِيْ وَلَا مِنْ وَّرَاءِ ظَهْرِيْ

அல்லாஹும்ம லாது.:.(த்)தினீ கிதாபீ பிஷிமாலீ வலா மின் வராஇளஹ்ரீ“ என்றும், தலைக்கு மஸஹ் செய்யும்போது..

اَللّٰهُمَّ اَظِلَّنِيْ تَحْتَ ظِلِّ عَرْشِكَ يَوْمَ لَا ظِلَّ اِلَّا ظِلُّ عَرْشِكَ

அல்லாஹும்ம அளில்லனீ தஹ்(த்)த ளில்லி அர்ஷிக யவ்ம லாளில்ல இல்லா ளில்லு அர்ஷிக" என்றும், காதுக்கு மஸஹ் செய்யும்போது..

اَللّٰهُمَّ اجْعَلْنِي مِنَ الَّذِيْنَ يَسْتَمِعُوْنَ الْقَوْلَ فَيَتَّبِعُوْنَ اَحْسَنَهٗ

"அல்லாஹும்மஜ் அல்னீ மினல்லதீன யஸ்(த்)தமி ஊனல் கவ்ல ஃப யத்தபிஊன அஹ்ஸனஹ்" என்றும், பிடரிக்கு மஸஹ் செய்யும்போது,."

اَللّٰهُمَّ اَعْتِقْ رَقَبَتِيْ مِنَ النَّارِ

அல்லாஹும்ம அஃ(த்)திக் ரகப(த்)தீ மினன்நார்" என்றும், வலதுகால்கழுவும்போது...

اَللّٰهُمَّ ثَبِّتْ قَدَمَيَّ عَلَى الصِّرَاطِ يَوْمَ تَزِلُّ الْاَقْدَامُ

"அல்லாஹும்ம சப்பித் கதமய்ய அலஸ் சிரா(த்)தி யவ்ம தஜில்லுல் அக்தாம்" என்றும் இடது காலைக் கழுவும்போது..

اَللّٰهُمَّ اجْعَلْ ذَنْبِيْ مَغْفُوْرًا وَّسَعْيِيْ مَشْكُوْرًا وَّتِجَارَتِيْ لَنْ تَبُوْرَ

"அல்லாஹும்மஜ்அல் தன்பீ மங்ஃபூரா வஸஃயீ மஷ்கூரா, வதிஜார(த்)தீ லன் தபூர் என்றும் ஓதுவது (நல்லது).

சுன்னத், முஸ்தஹப், அதபுகளைப் பேணி உள்ளச்சத்துடன் வுளு செய்வது சிறப்பு. யாதொருவர் உள்ளச்சத்தோடு,



 

நிரப்பமாக வுளு செய்கிறாரோ அவர் தொழுகையிலும் உள்ளச்சத்துடன் ஈடுபடுவார்.

அதுபோல் பள்ளிக்கு (தொழ) போகும்போதும் வீண் பேச்சு பேசாமல், விரல்களைக் கோர்க்காமல், துஆ செய்தவாறு, ஒழுங்குடன் போக வேண்டும்.

**வுளுவின் மக்ருஹ்:**

1. தண்ணீரை அடித்து கழுவுவது. 2. நீரை விரயம் செய்வது.

**வுளுவை முறிப்பவை:**

1. முன், பின் துவாரத்திலிருந்து ஏதாவதொன்று வெளியாவது. 2. உடலிலிருந்து ரத்தம், சீழ், சலம் ஏதாவது வெளியாகி வழிவது. 3. வாய் நிரம்ப வாந்தி எடுப்பது. 4. தூங்குவது. 5. பைத்தியம் பிடிப்பது. 6. போதையாவது.

7. ருகூஃ, சுஜூதுள்ள தொழுகையில் வெடிச்சிரிப்பு சிரிப்பது.

ஆனால் சிறு பிள்ளைகளின் வெடிச் சிரிப்பு வுளுவை முறிக்காது. தொழுகையை பாத்திலாக்கும்.

சிறு துடக்குள்ளவருக்கு (வுளு இல்லாதவருக்கு) 3 விஷயம் தடுக்கப்பட்டது. ஹராமாகும்.

1. தொழுவது 2. தவாஃப் செய்வது. 3. குர்ஆனை தொடுவது.

# முழுக்கு பற்றிய விளக்கம்

**குளிப்பின் ஃபர்ளு 3.** 1. வாய் கொப்பளித்தல். 2.நாசிக்கு தண்ணீர் செலுத்துவது. 3.சரீர மடங்களையும் அடைய வளைந்து ஒரு முறை கழுவுவது.

## அதன் சுன்னத்துகள் 7

نَوَيْتُ اَنْ اَغْتَسِلَ لِرَفْعِ الْجَنَابَةِ اِمْتِثَالًا لِاَمْرِ اللّٰهِ تَعَالٰى

1. நிய்யத்: "நவை(த்)து அன் அங்தஸில லிர.்.ப்இல் ஜனாப(த்)தி இம்திஸாலல் லிஅம்ரில்லாஹி தஆலா" அல்லாஹ்வுடைய ஏவலுக்கு வழிப்பட்டு ஜனாபத்தை (பெருந்துடக்கை) நீக்குவதற்காக குளிக்க நிய்யத் செய்தேன் (என்று கூறுவது). 2. பிஸ்மில்லாஹ் சொல்வது.
3. இரு கைகளையும் மணிக்கட்டு வரை கழுவுவது.
4. அபத்தை (மர்மஸ்தானத்தை) கழுவுவது. 5. உடலிலோ, ஆடையிலோ நஜீஸ் பட்டிருந்தால் அதைக் கழுவுவது.
6. தொழுகைக்கு வுளு செய்வது போல வுளு செய்வது.
7. தலையில் 3முறை, வலபுஜம் 3முறை, இடபுஜம் 3முறை, பின் உடல் முழுக்க 3முறை நீர் ஊற்றிக் குளிப்பது.

ஒருவர் வாய் கொப்பளித்து, நாசிக்கு நீர் செலுத்திவிட்டு, ஓடுகிற நீரிலோ அல்லது நிறைய நீருள்ள (குளம், ஏரி போன்ற)திலோ முங்கி குளிக்கிற அளவு (உடல் முழுக்க நன்றாக நனையுமளவு) இருந்தால் குளிப்பு நிறைவேறிவிடும். ஆனால் நீரை ஊற்றுதல் எனும் சுன்னத் நிறைவேற அதில் உடலை உலுக்க வேண்டும் அல்லது இடம்விட்டு இடம் மாறியவாறு குளிக்க வேண்டும்.

# குளிப்பை கடமையாக்குபவை

1. ஆணுக்காயினும், பெண்ணுக்காயினும் தூக்கத்திலோ அல்லது விழித்தவாறோ விந்து வெளிப்படுதல்,

2. ஆணுறுப்பும் பெண்ணுறுப்பும் சந்தித்தல்,

3. பெண் ஹைழ், நி∴பாஸிலிருந்து சுத்தமாகுதல்

மேலும் ஜும்ஆ நாளில், இரு பெருநாளில், அரபா நாளில் குளிப்பது சுன்னத்தாகும்.

**ஹைழ் என்பதாவது:** மாதவிடாய். அது கருப்பு, சிவப்பு, மஞ்சள், கலங்கல், பச்சை, மண்ணிறம் ஆகிய நிறத்தில் கர்ப்பப்பையிலிருந்து வெளியாகும். அது 9 வயது முதல் (சில பெண்களுக்கு தாமதமாகலாம்) 55வயது வரையிலாகும். மாதவிடாயின் குறைந்த அளவு 3நாள். அதிகபட்சமாக 10 நாள்.

**நி∴பாஸ் என்பது** பிரசவ விடாய். குழந்தை பிறந்த பின் தாய்க்கு ஏற்படும் நி∴பாஸ் அதிக பட்சமாக 40 நாட்கள் வரை நீடிக்கும்.

ஒரு பெண் (ஏதாவதொரு தொழுகைக்கான வக்தில்) கடைசி நேரத்தில் ஹைழ் கண்டாலும் (அந்த நேர) தொழுகையும் விழுந்து போகும் (கடமையாகாது). (அதே போல ஏதாவதொரு தொழுகைக்கான நேரத்தில்) கடைசி வக்தில் துப்புரவானாலும் (அந்நேர) தொழுகை விதியாகி விடும். நோன்புள்ள பெண் பகலின் கடைசி நேரத்தில் ஹைழானால் நோன்பு முறிந்து விடும். (அதே போல ஹைழுள்ள பெண் நோன்பு நாளின்) பகலில் துப்புரவாகி அன்று பகலில்

எதையும் உண்ணாமல் குடிக்காமல் இருந்தாலும் நோன்பாகாது.

குறிப்பு: பெண்பிள்ளை மாதவிடாய், பிரசவ விடாயிலிருந்து துப்புரவானதை ஞாபகமாய் பேணி எப்போது துப்புரவாகிறாளோ அப்போதே குளித்து தொழுகை, நோன்பை பிந்தாமல் பேணி வர வேண்டும். அவ்வாறு செய்யாமல் தொழுகை, நோன்பை பிற்படுத்துவது ஹறாம். மேலும் ஹைழ் கண்டிருக்கும்போது தொழுகை நேரம் வந்தால் வுளூ செய்து, முசல்லாவிலிருந்து தொழுமளவு நேரம் கலிமா, தஸ்பீஹ் சொல்லிக் கொண்டிருப்பது முஸ்தஹப்.

## ஜுனுபாளிக்கு ஹறாமானவை

1. தொழுவது. 2. பள்ளிவாசலுக்குள் நுழைவது. 3. தவா.்ப் செய்வது. 4. குர்ஆனை ஓதுவதும். 5. தொடுவதும் ஹைழ், நிபாசுள்ள பெண்ணுக்கு மேற்கண்ட ஐந்தோடு சேர்த்து. 6. நோன்பு வைப்பதும். 7. தொப்புளுக்கும், முழங்காலுக்குமிடைப்பட்ட பகுதியில் தீண்டலும்.
8. உடலுறவும் ஹறாமாகும்.

ஆனால் ஹைழ், நிபாசுடைய பெண் நோன்பை கழா செய்ய வேண்டும். தொழுகையை கழா செய்ய வேண்டியதில்லை.

## தண்ணீர் பற்றிய விளக்கம்

சிறுந்துடக்கு, பெருந்துடக்கு இரண்டையுமே (அதாவது வுளூவானாலும், குளிப்பானாலும்) பொதுவாக தண்ணீர் கொண்டு நீக்கப்படும். அவை.. மழை நீர், ஏரி நீர், கேணி நீர், கிணற்று நீர், கடல் நீர், ஆற்று நீர் ஆகியன.

மற்றபடி மருந்து நீர், பழச்சாறு, எண்ணை போன்ற அல்லது நீரில் ஏதேனும் கலந்து வேறு பொருளாக பெயர் பெற்றுவிட்ட திரவப் பொருளால் சுத்தம் செய்ய (வுளு செய்ய, குளிக்க) கூடாது. அதனால் சுத்தம் நிறைவேறாது.

மேலும் 10க்கு10 உள்ள தொட்டி, ஹவ்ழ், குளம் போன்றதின் நீராலும் வுளு, குளிப்பு கூடும். 10க்கு10 உள்ள ஹவ்ழ் போன்றதில் நஜீஸ் விழுந்து அதில் நஜீஸின் குணம் (அதன் வாடை, நிறம், தன்மை) தெரியாவிட்டால் அதில் சுத்தம் செய்யலாம். 10க்கு10ஐ விட குறைந்த நீர்த்தடாகத்தில் நஜீஸ் விழுந்து அதன் குணம் தெரியாவிட்டாலும் அதைக் கொண்டு சுத்தம் செய்யக் கூடாது.

ஓடுகிற நீரில் நஜீஸ் விழுந்து கீழே (அடிப்பகுதியில்) நஜீஸின் குணம் தெரியாவிட்டால் அதில் சுத்தம் செய்வது கூடும்.

10க்கு 10முழ நீள, அகலம் குறைந்த கிணற்றில் நஜீஸ் விழுந்தால் அது ஒரு துளியாக இருந்தாலும் சரி கிணற்று நீர் மொத்தத்தையும் இறைத்து சுத்தம் செய்து விட வேண்டும். அதில் எலி, சிட்டுக்குருவி, பல்லி போன்ற (மிகச்சிறிய)வை விழுந்து செத்தால் நடுத்தரமான வாளியால் இருபது முதல் 30 வாளி நீர் இறைத்து விட வேண்டும். புறா, கோழி, பூனை போன்ற (அதைவிட கொஞ்சம் பெரிய)வை (விழுந்து) செத்தால் 30 (வாளி) முதல் 50 வரை இறைக்கப்படும். நாய், ஆடு, மனிதன் (போன்றது)

செத்தால் முழு தண்ணீரையும் இறைக்கப்படும் (அன்றியும்), செத்தவை ஊதினாலோ, உடைந்தாலோ (அது) சிறிதாயினும், பெரிதாயினும் தண்ணீர் முழுவதும் இறைக்கப்படும்.

யாதொரு ஹயவான் (உயிரினம்) விழுந்ததை அறியப்பட்டால் அந்த நேரம் முதல் அந்தக் கிணறு நஜீஸென ஹுக்ம் செய்யப்படும். (மாறாக விழுந்த நேரத்தை) அறியப்படவில்லையானால் (விழுந்த செத்த அந்த ஹயவான் உடல்) ஊதவில்லையானால் ஒரு இரவு, பகல் தொடுத்து நஜீஸாகிடும். ஊதினாலும், உடைந்தாலும் 3 இரவு, பகல் தொடுத்து நஜீஸாகிடும். அதில் வுளு செய்து தொழுத தொழுகைகளை கழா செய்வார். அந்த தண்ணீர் பட்ட வஸ்துக்கள் அனைத்தையும் கழுவுவார்.

ஓடும் ரத்தமில்லாத வஸ்து தண்ணீரில் சாவது நீரை நஜீஸாகாது. தண்ணீரில் வாழும் மீன், நண்டு, தவளை போன்றது சாவதாலும் நீர் நஜீஸாகாது.

பத்துக்கு பத்து குறைந்த கிணற்றில் புறா, சிட்டுக் குருவி எச்சமிட்டாலும், ஐவாய் பறவை எச்சமிட்டாலும், எலியின் சிறுநீர் விழுந்தாலும் இறைக்க வேண்டியதில்லை. ஆடு, ஒட்டகையின் புழுக்கை கொஞ்சம் கிடந்தால் அது பற்றி பிரச்சினையில்லை. விட்டை, சாணி விழுந்தால் அதில் தங்கடம் பல்வை உண்டாயிருந்தால் நஜுஸாகாது. அப்படியில்லையானால் நஜுஸாகிடும். மனிதன் வாய்வைத்துக் குடித்த மிச்ச எச்சியும், திண்ணப்பட்டதின் உண்ண ஆகுமாக்கப்பட்ட பிராணிகளின் எச்சியும்

துப்புரவாயிருக்கும். நாய், பன்றியின் எச்சியும், ஐவாய் மிருகங்களின் எச்சியும் நஜீஸாகும்.

வீட்டுப்பூனை, அவிழ்த்து விட்டு மேய்கிற கோழி, ஐவாய்ப்பட்ட பறவைகளின் எச்சியும், பாம்பு, எலி போன்ற வீட்டில் குடியிருக்கிறதின் எச்சியும் மக்ரூஹ்.

சிறுந்துடக்கு, பெருந்துடக்கை நீக்குவதற்காக உபயோகிக்கப்பட்ட நீர் முஸ்த.்.மல் எனப்படும். அதன் மூலம் மறுமுறை துடக்கை நீக்கப்படாது. ஆனால் அது கொண்டு நஜுஸை நீக்கலாம்.

10க்கு 10 குறைந்த நீரில் சிறுந்துடக்குள்ளவரோ, பெருந்துடக்குள்ளவரோ வாஜிபாய் கழுவ வேண்டிய உறுப்புகளில் சிலதை கழுகினாலும், (குடம்) பானை போன்றதில் அவர் உள்ளே கை விட்டாலும் அந்த நீர் முஸ்த.்.மல் ஆகிவிடும். ஆனால் முழுமையாக ஒரு உறுப்பை நுழைத்தால் தான் இது. ஓரிரு விரலை நுழைப்பதால் முஸ்த.்.மலாகாது. எனினும் (மணிக்கட்டு வரை) (முன்கையை நுழைத்தால் முஸ்த.்.மலாகி விடும்.

# தயம்முமுடைய விளக்கம்

தண்ணீரை விட்டு ஒரு மைல் தொலைவில் தூரப்பட்டவர் அல்லது அதை பயன்படுத்த முடியாத நிலையிலுள்ளவர் தயம்மும் செய்வார். **அதன் ருக்ன் 2.**

1. இரண்டு விடுத்தம் அடிப்பது. 2. முகத்தையும், இரு கைகளையும் அடைய வளைந்து தடவுவது.

ஆக ஒரு அடியால் முகத்தை முழுவதும் தடவுவார். மறு அடியால் இரண்டு கைகளையும் முழங்கை உட்பட அடைய வளைந்து தடவுவார்.

**அதன் ஷரத்துகள் 6.**

نَوَيْتُ التَّيَمُّمَ لِلصَّلٰوةِ

1. நிய்யத்..“நவை(த்)துத் தயம்மும லிஸ்ஸலாத்தி“ தொழ தயம்மும் செய்ய நிய்யத் செய்தேன் (என்று கூறுவது)

2. இடைவிடாது அடைய வளைந்து தடவுவது.

3. மூன்று விரலால் அல்லது கூடுதல் விரல்கள் கொண்டு தடவுவது.

4. பூமியில் அடித்து அல்லது பூமியின் இனத்திலுள்ள வஸ்துவில் அடித்து தயம்மும் செய்வது.

5. அந்த மண் அல்லது மண் இனத்திலுள்ளது மற்றதை துப்புரவாக்குவதாக இருக்க வேண்டியது.

ஆக பூமியில் நஜீஸ்பட்டு உலர்ந்து அதன் குணம் போய் விட்டாலும் அதில் அடித்து தயம்மும் செய்யப்படாது. (ஏனெனில்) அது சுத்தமானது தான். ஆனால் மற்றதை சுத்தப்படுத்தக் கூடியதாக இல்லை.

6. நீரில்லாமல் அல்லது நீரை உபயோகிக்க முடியாமல் போவது.

இரு முன்கையில் உள்புறத்தால் அடிப்பதும், அவ்விரண்டையும் முன்னாலும், பின்னாலும் இழுப்பதும், அதை உதருவதும், விரல்களை விரித்துக் கொள்வதும், பிஸ்மில்லாஹ் சொல்வதும், தர்தீபாக (வரிசையாக)

செய்வதும், தொடர்ந்து செய்வதும் சுன்னத்தாகும். வுளுவை முறிப்பன(யா)வும் (அத்தோடு) நீரை உபயோகிக்க சக்தி பெறுவதும் தயம்முமை முறிக்கும்.

## தொழுகை - அதன் நேரங்களின் விளக்கம்

ஃபஜ்ர் 2 ரக்அத், ளுஹர் 4 ரக்அத், அசர் 4 ரக்அத், மங்ரிப் 3 ரக்அத், இஷா 4 ரக்அத் ஃபர்ளு.
இஷாவுக்குப்பின் வித்ர் 3 ரக்அத் வாஜிப்.

முஸாஃபிர் (பயணி) 4 ரத்அத் ஃபர்ளான தொழுகைகளை 2 ரக்அத்தாக சுருக்கி தொழுவார். அதாவது வழமையான ராஹத்களுடன்(ஓய்வெடுத்தவாறு) நடுத்தரமான நடையால் 3 நாள் (தூர) பயணத்தை நாடிய முஸாஃபிர் தன் ஊரின் எல்லையை விட்டு புறப்பட்டது முதல் (மீண்டும் தன் ஊரின் எல்லையை அடையும் வரை) 4 ரக்அத் தொழுகைகளை 2 ரக்அத்தாக தொழுவார்.

ஆனால் முஸாஃபிர் முகீமைத் துயர்ந்து தொழுதால் நிரப்பமாய் நான்காக தொழுவார். முகீம் முஸாஃபிரைத் துயர்ந்து தொழுதால் முஸாஃபிராகிய இமாம் 2 ரக்அத்தில் சலாம் சொல்லி விடுவார். முகீம் எழும்பி (மீதி) 2ரக்அத்தை தொழுது சலாம் சொல்வார். ஆனால் முகீம் இந்த 2 ரக்அத்திலும் (இமாமைப் பின்பற்றித் தொழுவது போலவே)

கிராஅத் ஓத மாட்டார். சஹ்வுக்கு சஜ்தா செய்ய மாட்டார். அன்றி முஸா.்.பிர் ஏதாவதொரு ஊரில் 15 நாளைக்கு தங்கிட எண்ணங்கொண்டால் அவர் (அந்த ஊரில்) முகீமாகி விடுவார்.

## சுன்னத் தொழுகை

.்.பஜ்ருக்கு முன் 2 ரக்அத், ளுஹருக்கு முன் 4 ரக்அத், பின் 2ரக்அத், ஜும்ஆ வுக்கு முந்தி 4 ரக்அத்தும், பிந்தி 4 ரக்அத்தும், மங்ரிபுக்குப்பின் 2 ரக்அத்தும் இஷாவுக்குப்பின் 2 ரக்அத்தும் சுன்னத். எல்லா சுன்னத்களிலும் மிக முக்கியமானது .்.பஜ்ருடைய சுன்னத்தாகும்.

அசருக்கு முன் 4 ரக்அத்தும், இஷாவுக்கு முந்தி 4 ரக்அத்தும், பிந்தி 4 ரக்அத்தும், ளுஹருக்குப் பிந்தி 4 ரக்அத்தும் , மக்ரிபுக்குப் பிந்தி 6 ரக்அத்தும் முஸ்தஹப்.

## தொழுகை காலங்கள்

### .்.பஜ்ர் தொழுகையின் வக்த்:

கிழக்கு வெளுத்தது முதல் பொழுது உதயமாகும் வரை (.்.பஜ்ர் பாங்கு சொன்னது முதல் சூரியன் உதிக்கும் நேரம் வரும் வரை கிட்டத்தட்ட 1 மணி நேரத்திற்கும் மேல்) .்.பஜ்ரை ஆண் நன்றாக வெளிச்சம் வந்தபின் (பாங்கு சொல்லி அரைமணி நேரத்திற்குப்பின்) தொழுவது முஸ்தஹப். பெண் இருளோடு (பாங்கு சொன்னதும்) தொழுவது ஏற்றம். ஆனால் மற்ற வக்துகளில் இமாம் ஜமாஅத் முடிந்தபின் பெண் தொழுவது ஏற்றம்.

## ளுஹரின் வக்த்:

மதியம் சருகியதிலிருந்து (சூரியன் உச்சியிலிருந்து சாய்ந்தது முதல்) ஒரு வஸ்து தன் அசல் நிழல் தாண்டி அதைப் போல் இரு மடங்கு நிழல் வரும்வரை (கிட்டத்தட்ட நேரம் வந்தது முதல் 31/2 மணி நேரதத்திற்கும் மேல்) எனினும் கோடை காலத்தில் ளுஹரை பிற்படுத்துவது முஸ்தஹப். எனினும் ஆரம்ப வக்திலேயே ஜமாஅத் தொழப்பட்டால் முஸ்தஹப்புக்காக ஜமாஅத்தை விடக் கூடாது. ஜும்ஆவுக்கு பிற்படுத்துவதை முஸ்தஹப் ஆக்கப்படாது. மழைக்காலத்திலும், பனிக்காலத்திலும் ளுஹரை ஆரம்ப வக்திலேயே தொழுவது முஸ்தஹப். தவிர மேக மூட்டமாக உள்ளபோது பிற்படுத்துவதே முஸ்தஹப்.

குறிப்பு: ளுஹரை வஸ்துவின் அசல் நிழல் தாண்டி இரு மடங்கு நிழல் வரும்வரை தொழலாம் என்றாலும் ஒரு மடங்கு நிழல் வரும் முன்பே தொழுதுவிட வேண்டும். தேவையில்லாமல் தாமதப்படுத்தக் கூடாது.

## அசர் வக்த்:

(வஸ்து அசல் நிழலை விட) இரு மடங்கு நிழலானது முதல் பொழுது முடியும் வரை (சூரியன் மறைவதற்கு முன்பு வரை. கிட்டத்தட்ட 11/2 மணி நேரத்திற்கு மேல்) பொதுவாக எல்லா காலத்திலும் அசரை பிற்படுத்துவது முஸ்தஹப். மேகமூட்டம் உள்ள காலத்தில் மட்டும் அசரை முற்படுத்துவது முஸ்தஹப்.

## மங்ரிபு வக்த்:

பொழுது அடைந்தது (சூரியன் மறைந்தது) முதல் (வானில்) சிவப்பு மறையும் வரை. எப்போதும் மங்ரிபை முற்படுத்துவது முஸ்தஹப். (கிட்டத்தட்ட சூரியன் மறைந்தது முதல் 11/4 மணி நேரம்).

## இஷா வக்த்:

செவ்வானம் மறைந்தது முதல் கிழக்கு வெளுக்கும் வரை. வித்ர் தொழுகைக்கும் அதுதான் வக்த் என்றாலும் வித்ரை இஷா தொழுத பின்பே தொழ வேண்டும் மழைக் காலத்தில் இஷாவை இரவில் மூன்றிலொரு பகுதி வரை (கிட்டத்தட்ட இரவு 10 மணி வரை) பிற்படுத்துவது முஸ்தஹப். கோடை காலத்தில் ஆரம்ப வக்திலேயே தொழுவது முஸ்தஹப். மேக மூட்டமாக உள்ள போதும் வக்த் வந்தது உறுதியான பின் ஆரம்ப வக்திலேயே தொழுவது முஸ்தஹப். வித்ரை கடைசி இரவு வரை பிற்படுத்துவது முஸ்தஹப் (தூங்கி) விழித்திட முடியுமென்றால். இல்லாவிட்டால் தூங்கும் முன் தொழுது விட வேண்டும்.

இஷாவுக்கு முன் தூங்குவதும், இஷாவுக்குப்பின உலக பேச்சுகளில் ஈடுபடுவதும், கிழக்கு வெளுத்தபின் ∴பஜ்ர் தொழும் முன் உலகப் பேச்சுக்களில் ஈடுபடுவதும் மக்ரூஹ். ∴பஜ்ர் தொழுத பின் பொழுது கிளம்பும் வரை திக்ரில் ஈடுபடுவதும், பொழுது ஒரு வல்லிய பரிமாணமான பின் இரண்டு ரக்அத் (இஷ்ராக்) தொழுவதும் முஸ்தஹப்.

# தொழ ஹராமான நேரங்கள்

1. பொழுது (சூரியன்) கிளம்பி ஒரு வல்லிய பரிமாணமாகும் வரை (இஷ்ராக் நேரம் வரும்வரை. சூர்யோதயம் முதல் 20 நிமிடங்கள்)

2. மதியம் (சூரியன் உச்சிக்கு வந்து சாயும் வரை. உச்சிக்கு வந்தது முதல் 15 நிமிடங்கள் வரை), பொழுது மஞ்சனித்து அடையும் வரை (சூரியன் மறையும் 5 நிமிடங்கள்). இந்த 3 நேரத்திலும் கழா தொழுகையோ, நபில் தொழுகையோ, சஜ்தா திலாவத்தோ எதுவும் கூடாது. ஆனால் அந்த நேரம் ஜனாஜா வந்தாலோ, சஜ்தா ஆயத்தை ஓதினாலோ ஜனாஜா தொழுகையை தொழலாம். சஜ்தா திலாவத் செய்யலாம். மக்ரூஹல்ல.

## மக்ரூஹான வக்த்:

ஃபஜ்ர் தொழுத பின்பும், அசர் தொழுத பின்பும், இந்த இரு வக்திலும் நபில் தொழுவது மக்ரூஹ். கழா தொழுகை, ஜனாஜா தொழுகை, சஜ்தா திலாவத் ஆகும். (மக்ரூஹ் ஆகாது).

# அதான்- பாங்கு- விளக்கம்

அதான் ஐவேளை தொழுகைகளுக்கும், ஜும்ஆவிற்கும் ஆணுக்கு சுன்னத் முஅக்கதா(வலியுறுத்தப்பட்ட சுன்னத்). அவ்வாறே இகாமத்தும். அவ்விரண்டும் மற்ற தொழுகைகளுக்கு சுன்னத்தல்ல. அத்தோடு பெண்ணுக்கு மக்ரூஹ் (வெறுப்பிற்குரிய காரியம்).

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

அதானின் கலிமாக்கள் 15, அவை:

اَللهُ اَكْبَرُ اَللهُ اَكْبَرُ اَللهُ اَكْبَرُ اَللهُ اَكْبَرُ، اَشْهَدُ اَنْ لَّا اِلٰهَ اِلَّا اللهُ، اَشْهَدُ اَنْ لَّا اِلٰهَ اِلَّا اللهُ، اَشْهَدُ اَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللهِ، اَشْهَدُ اَنَّ مُحَمَّدًا رَّسُوْلُ اللهِ، حَيَّ عَلَى الصَّلٰوةِ، حَيَّ عَلَى الصَّلٰوةِ، حَيَّ عَلَى الْفَلَاحِ، حَيَّ عَلَى الْفَلَاحِ، اَللهُ اَكْبَرُ، اَللهُ اَكْبَرُ، لَا اِلٰهَ اِلَّا اللهُ،

1. அல்லாஹு அக்பர். 2. அல்லாஹு அக்பர். 3. அல்லாஹு அக்பர். 4. அல்லாஹு அக்பர். 5. அஷ்ஹது அல்லா இலாஹ இல்லல்லாஹ். 7. அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ். 9. ஹய்ய அலஸ் சலாஹ். 10.ஹய்ய அலஸ் சலாஹ். 11.ஹய்ய அலல் ஃபலாஹ். 12.ஹய்ய அலல் ஃபலாஹ். 13.அல்லாஹு அக்பர். 14.அல்லாஹு அக்பர், 15. லா இலாஹ இல்லல்லாஹ்.

ஃபஜ்ருடைய பாங்கில் ஹய்ய அலல் ஃபலாஹ்விற்குப்பின் اَلصَّلٰوةُ خَيْرٌ مِّنَ النَّوْمِ "அஸ்சலாத்து கைரும் மினன் நவ்ம்". இரு விடுத்தம் சொல்வார்.

இகாமத்துடைய கலிமாக்கள் 17.

அதாவது ஹய்ய அலல் ஃபலாஹ்விற்குப்பின் قَدْ قَامَتِ الصَّلٰوةُ "கத்காம(த்)திஸ் சலாஹ்" இரு முறை சொல்வார்.

அதான், இகாமத் இரண்டுக்கும் கிப்லாவை முன்னோக்குவார். பேசமாட்டார். நடக்கமாட்டார். அவ்விரண்டிலும் ஹய்ய அலஸ் சலாஹ் எனும்போது வலது புறமும், ஹய்ய அலல் ஃபலாஹ் எனும்போது இடது புறமும் முகத்தை திருப்புவார். (ஜமாஅத்தாக தொழுதாலும் சரி) தனித்து தொழுதாலும் சரி.

அதானில் இரு விரலையும் காதுக்குள்ளாக்குவது முஸ்தஹப். இகாமத்தில் அவ்வாறல்ல. அவ்விரண்டிலும் சப்தத்தை உயர்த்தி சொல்வது சுன்னத்.

எனினும் இகாமத் அதானை விட தாழ்ந்த சப்தமாயிருக்க வேண்டும். ஆனால் பாங்கு சொல்பவர் தன் சக்திக்கு மீறி (வம்படியாக) சப்தத்தை உயர்த்துவது மக்ரூஹ். அதான் இகாமத்தின் கலிமாக்களை கடைசி எழுத்துக்கு "சுகூன்" வைத்துச் சொல்வார். இரு அல்லாஹு அக்பரை சுகூன் வைத்து நிறுத்தாமல் "ரா"வுக்கு ஜபர் வைத்து பிந்திய அல்லாஹு அக்பருடன் சேர்த்துக் கூறுவார். (அதாவது அல்லாஹு அக்பரல்லாஹு அக்பர் என்று கூறுவார்.)

அதானை அழகிய ராகத்தில் கூறுவார்.

அதன் வார்த்தைகளை பேதகமாக்கி (சரியாக உச்சரிக்காமல் சேர்க்காமல்) சொல்லப்படும் ராகம் மக்ரூஹ். பாங்கை ஒவ்வொரு கலிமாக்களுக்குமிடையில் நிறுத்தி தாமதித்து சொல்வார். இகாமத்தை நிறுத்தாமல் (தொடர்ந்து) சொல்வார்.

பாங்கை உயர்ந்த இடத்திலும் (பாங்கின் மேடையிலும்) இகாமத்தை (தொழும்) பூமியோடு இருந்தும் சொல்வது

முஸ்தஹப். உயர்ந்த இடம் இல்லாவிட்டால் பள்ளியின் முற்றத்தில் நின்று பாங்கு சொல்வார். (உள்) பள்ளிக்குள் சொல்வது மக்ரூஹ். (இது ஜமாஅத் தொழுகையின் பாங்குக்கான சட்டம்). தனக்காக (தனித்து தொழ) பாங்கு சொல்பவருக்கு உயர்ந்த ஸ்தலம் சுன்னத்தல்ல. தனித்து தொழுபவர் தனக்கு (மட்டும்) கேட்கும்படி உள்ளுக்குள் பாங்கு சொல்லிக் கொண்டால் மக்ரூஹல்ல. வீட்டில் தனித்து தொழுதால் கொஞ்சம் சப்தத்தை உயர்த்தி அதான் சொல்லலாம் (ரொம்பவும் சப்தத்தை உயர்த்த வேண்டியதில்லை).

பாங்கை (தொழுகையின்) வக்த் வந்த பின் சொல்ல வேண்டும். (ஒருவேளை) வக்த் வரும் முன் (ஆரம்பித்து) சில வார்த்தைகள் வக்துக்கு முந்தி விட்டால் (அதானை) மீட்டப்படும். முஸ்தஹப்பான வக்தின் துவக்கத்தில் அதான் கூறி நடு வக்தில் இகாமத் சொல்லி (தொழுதி)டுவார். இரண்டையும் வுளுவுடனே சொல்ல வேண்டும். எனினும் அதானை வுளுவின்றி சொல்வது ஆகும். இகாமத்தை வுளுவின்றிச் சொல்வது மக்ரூஹ்.

ஜுனுபாளி பாங்கு சொல்வது மக்ரூஹ். அதானுக்கு ஜவாபு (பதில்)சொல்பவர் முஅத்தின் சொல்வது போலவே திருப்பிச் சொல்வார். ஆனால் ஹய்ய அலஸ் சலாஹ், ஹய்ய அலல் ஃபலாஹில்

لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللهِ مَا شَاءَ اللهُ كَانَ وَمَا لَمْ يَشَأْ لَمْ يَكُنْ

“லா ஹவ்ல வலாகுவ்வ(த்)த இல்லா பில்லாஹ். மாஷா அல்லாஹு கான வமா லம் யஷ.்.லம் யகுன்“ என்று கூறுவார். அஸ் சலாத்து கைரும் மினன் நவ்மில்

صَدَقْتَ وَبَرَرْتَ وَبِالْحَقِّ نَطَقْتَ

“சதக்(த்)த வ பரர்(த்)த வபில் ஹக்கி நதக்(த்)த என்று கூறுவார்.

முந்தின விடுத்தம் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் சொல்லும் போது “ ஸல்லல்லாஹு அலைக யாரசூலல்லாஹ்!“ என்று கூறுவார். இரண்டாம் விடுத்தம் சொல்லும் போது இரு கண்ணிலும் இரு பெருவிரல் நகக் கண்களை வைத்து

قَرَّتْ عَيْنِي بِكَ يَا رَسُولَ اللهِ اللَّهُمَّ مَتِّعْنِي بِالسَّمْعِ وَالْبَصَرِ

“க்ர்ரத் ஐனீபிக யாரசூலல்லாஹ். அல்லாஹும்ம மத்தி.்.னீ பிஸ்ஸம்இ வல்பசர்“ என்று கூறுவார்.

இகாமத்தில் அப்படிச் சொல்லும்படியோ, கை வைக்கும்படியோ வரவில்லை. நடக்கும்போது அதானைக் கேட்டால் நின்று தரிபட்டு ஜவாபு சொல்வது ஏற்றம். ஜவாபு சொல்பவர் முஅத்தினை முந்தக் கூடாது. அவர் சொன்ன பின்பே ஜவாபு சொல்ல வேண்டும். ஜுனுபாளி ஜவாபு சொல்லலாம். ஹைழ், நி.்.பாஸ் உடைய பெண் ஜவாபு சொல்லக் கூடாது.

பின் முஅத்தினும், ஜவாபு கூறியவரும் சலவாத் சொல்லிய பின்

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ، وَالصَّلٰوةِ الْقَائِمَةِ اٰتِ مُحَمَّدًا الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ وَابْعَثْهُ مَقَامًا مَّحْمُوْدًا الَّذِيْ وَعَدْتَّهُ اِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ،

" அல்லாஹு‍ம்ம ரப்ப ஹாதிஹித் த.்.வ(த்)தி தாம்மத்தி, வஸ்சலாத்தில் காயிம(த்)தி, ஆ(த்)தி முஹம்மதனில் வஸீல(த்)த வல் .்.பழீல(த்)த, வப்அஸ்ஹு மகாமம் மஹ்மூதனில்லதீ வஅத்தஹு, இன்னக லா துக்லி.்.புல் மீஆத் என்று கூறுவர்.

அதானைப் போல் இகாமத்துக்கும் ஜவாபு சொல்வது முஸ்தஹப். கத்காமதிஸ்ஸலாஹ் சொல்லும்போது

اَقَامَهَا اللّٰهُ وَ اَدَامَهَا مَادَامَتِ السَّمٰوٰتُ وَالْاَرْضُ، وَجَعَلَنِيْ مِنْ صَالِحِيْ اَهْلِهَا

"அகாமஹுல்லாஹு வ அதாமஹா மாதாமஸ்ஸமா வா(த்)து வல் அர்ழ். வஜ அலனீ மின் சாலிஹீ அஹ்லிஹா" என்று கூறுவார்.

இகாமத்துக்குப் பின் துஆ ஓத மாட்டார். எனினும் கத்காமதிஸ்ஸலாஹ் சொல்லும்போது தொழ ஆயத்தமாகி விடுவார்.

# தொழுகையின் ஃபர்ளுகள்

## வெளி ஃபர்ளு 7.

1. (தொழுகைக்கான) நேரங்களை அறிவது.
2. வுளுவை அவசியமாக்கும் சிறுந்துடக்கை விட்டும், குளிப்பதை கட்டாயமாக்குகிற பெருந்துடக்கை விட்டும் தூய்மையாக இருப்பதோடு நஜீஸ் முஙல்லாவிலிருந்தும், நஜீஸ் முகஃப்பயாவிலிருந்தும் (தொழுகையை) ஆகுமாக்கா நஜீஸை விட்டும் உடல் சுத்தமாக இருப்பது.
3. உடையும் அவ்விதம் சுத்தமாக இருப்பது.

## நஜீஸ் முஙல்லலா:

மலம், ஜலம், மனி (இந்திரியம்), மதி(இச்சையால் வெளிப்படும் நீர்), வதீ, ரத்தம், சீழ், சலம், வாய் நிரம்பிய வாந்தி, பன்றி, மது, கள் ஆகியவை, செத்த பிராணியின் இறைச்சி, அதன் தோல், ஆகாயத்தில் பறக்காத கோழி போன்றதின் எச்சம், விட்டை , சாணி, புழுக்கை, நாய் மற்றும் ஐவாய் மிருகங்களின் மல, ஜலம், எச்சில், பூனையின் மலம் ஆகியன.

## நஜீஸ் முஙல்லலாவின் சட்டம்:

உடலிலோ, உடையிலோ, மேற்கண்ட நஜீஸில் ஒன்று ஒரு திர்ஹமளவு (ஒரு நாணயமளவு) இருந்தால் பரவாயில்லை. (அதற்கு மேல் இருந்தால் தொழுகை கூடாது).

**நஜீஸ் முகஃப்ஃபஃபா:** உண்ண ஆகுமாக்கப்பட்ட பிராணிகளின் மூத்திரம், குதிரை மூத்திரம், உண்ண ஆகுமாக்கப்படாத பறவைகளின் எச்சம்.

**அதன் சட்டம்:**

அது உடலின் ஒரு உறுப்பில் அல்லது உடையில் கால் வாசிக்கு கம்மியாக இருந்தால் பரவாயில்லை. (கால்வாசிக்குக் கூட இருந்தால் தொழுகை கூடாது.)

உண்ண ஆகுமாக்கப்பட்ட (கோழி போன்ற) பறவைகளின் எச்சம் நஜீஸல்ல.

ஊசி முனையளவு சிறுநீர் தெரித்திருந்தால் அது பற்றி பிரச்சினையில்லை.

4. மேற்கண்ட நஜீஸ்களை விட்டும் தொழுகையின் போது உறுப்புகள் பூமியில்படும் இடம் சுத்தமாக இருக்க வேண்டும்.

காய்ந்தால் கண்ணுக்குத் தெரிகிற தன்மையுள்ள எந்தவொரு நஜீஸ் உடலில், உடையில் பட்டாலும் அதுவும், அதன் தன்மையும் நீங்கும் படி கழுவுவதால் துப்புரவாகி விடும். ஒரே தடவை கழுவி நீங்கிவிட்டாலும் சரி. மூன்று முறை கழுவியும் நீங்காவிட்டால் மேலும் மேலும் கழுவப்படும்.

காய்ந்தால் கண்ணுக்குத் தெரியாத நஜீஸ் பட்டால் அதை பாத்திரத்தில் போட்டு 3 முறை பிழிந்து (3முறை) கழுவுவதால் துப்புரவாகி விடும். 3-ம் விடுத்தம் நன்றாக பிழிந்து விட வேண்டும். 3 விடுத்தமும் புதுப்புது தண்ணீரால் கழுவ வேண்டும். 3 விடுத்தம் கழுவிய பின் அந்த பாத்திரத்தையும் 3 முறை கழுவி விட வேண்டும். பின் பாத்திரத்தை உயர்த்தி விட வேண்டும்.

நஜீஸான உடலை அல்லது உடையை 10க்கு 10 உள்ள கேணி, ஹவ்ழ் போன்றதில் அல்லது ஓடும் நீரில் போட்டாலும், அதில் மிகுதமாய் கண்ணீா ஊற்றினாலும் தூய்மையாகி

விடும். அதைப் பிழியாவிட்டாலும், உலர்த்தாவிட்டாலும் சரி.

பூமியில் நஜீஸ் பட்டால் அது எந்த நஜீஸாக இருந்தாலும் அதன் வாடை, நிறம், குணம் நீங்குவதால் தொழுகைக்கு துப்புரவாகி விடும். ஆனால் தயம்மும் செய்ய அது துப்புரவானதல்ல.

பொதுவான தண்ணீர் மூலமும், முஸ்த.்.மல் தண்ணீர் மூலமும், சிர்கா, பன்னீர் போன்ற நஜீஸை நீக்கும்படியான திரவம் கொண்டும் நஜீஸை நீக்கலாம். எனினும் எண்ணை, பால் போன்றதால் நீக்கக் கூடாது.

**முக்கியக் குறிப்பு:** வெளிரங்கத்தை நஜீஸை விட்டும் சுத்தமாக்குதல் போல உறுப்புகளை ஹராமான பார்வை, கேள்வி, புறம், கோள், பொய் போன்ற பாவச்செயல்களை விட்டும் மனதை வஞ்சகம், குபாடம், மோசம், பொறாமை, கோபம், ஆணவம் போன்ற கெட்ட குணங்களை விட்டும் சுத்தமாக்க வேண்டியதும் அவசியம். ஆகவே தொழும்முன் அல்லாஹ்விடம் தவ்பா செய்து மீண்டு அமலை அல்லாஹ்விற்காக கலப்பற்றதாக்குவார்.

5. அவ்ரத்தை மறைப்பது. ஆணின் அவ்ரத்.. தொப்புளுக்குக் கீழிருந்து முழங்காலுக்குக் கீழ் வரை. அடிமைப் பெண்ணின் அவ்ரத்.. அதுவும், வயிறும், முதுகுமாகும். பொதுவாக.. பெண்ணின் அவ்ரத்.. முகமும், இரு முன் கையும், இரு பாதமும் தவிர ஏனைய உறுப்படங்களுமாகும்.

ஆனபோதும் வாலிபமுள்ள பெண் தன் முகத்தை ஆடவர் முன் வெளிப்படுத்துவதும், ஆடவர் அதைப் பார்ப்பதும் ஹராமாகும்.

6. கிப்லாவை முன்னோக்குவது.. ஒருவருக்கு கிப்லாவை அறிய முடியவில்லையென்றால், அதைக் கேட்கவும் ஆள் யாருமில்லையென்றால் கணித்து தொழுவார். தொழுதபின் சரியான திசை வேறென அறிந்தால் தொழுகையை திருப்பித்தொழ வேண்டியதில்லை. ஆனால் தொழும்போதே கிப்லா வேறு திசையென ஊர்ஜிதமானால் அப்படியே கிப்லா நோக்கித் திரும்பி தொழுகையை தொடர்ந்து முடிப்பார்.

7. நிய்யத்,.. அதாவது அல்லாஹ்விற்காக தொழ நாடுவது. அதுபற்றி பின்னால் வருகிறது.

# தொழுகையின் உள் பர்ளுகள் -6

1. **தக்பீர் தஹ்ரீமா :** தொழுகையில் முதன் முதலில் சொல்லப்படும் தக்பீர். இதில் “அல்லாஹு அக்பர்“ என்பதை ஆல்லாஹு என “அ“ வை நீட்டினாலோ ஆக்பர் என “அ“ வை நீட்டினாலோ, தொழுகையே உண்டாகாது. (இதன்றி தொழுகைக்குள் உள்ள மற்ற) இன்திகாலில் உள்ள தகபீர்களை மேற்கண்ட விதம் நீட்டினால் உண்டான தொழுகை ஃபஸாதாகி (வீணாகி) விடும்.

தக்பீர் தஹ்ரீமாவில் “அல்லாஹ்“ என்பதிலுள்ள “லா“வை அதிகம் நீட்டுவது மக்ரூஹ்(தொழுகை கூடி விடும். என்றாலும் குறைபாடு ஏற்பட்டு விடும்).

**2. நிலை நிற்பது :** ஃபர்ளிலும், வாஜிபிலும், ஃபஜ்ருடைய சுன்னத்திலும் நிற்க முடிந்தவருக்கு ஃபர்ளு. மற்ற சுன்னத், நபில் தொழுகைகளில் நிற்க முடிந்து நிற்பது ஆகும். ஆனால் தக்க காரணமின்றி உட்கார்ந்து தொழுதால் நின்று தொழுவதை விட பாதி கூலியே கிடைக்கும்.

குறைந்தபட்சம் இரு கைகளையும் தொங்கப்போட்டால் முழங்காலைத் தொடாத அளவிளாவது நிற்க வேண்டும். (முதுகை வளைக்காது) நேராக நிற்பது பூரண நிற்றலாகும். நிற்கும் போது இரு பாதத்திற்குமிடையில் 4 விரல்களின் அளவு இடைவெளி இருக்க வேண்டும்.

நோயாளியால் நிற்க முடியாவிட்டால் அமர்ந்தவாறு ருகூஃ, சுஜூத் செய்து தொழுவார். ருகூஃ, சுஜூதும் செய்ய சக்தி பெறாவிட்டால் தலையால் சைகை செய்து - ருகூவை விட சுஜூதுக்கு இன்னும் தலையைத் தாழ்த்தி தொழுவார். அமரவும் முடியாவிட்டால் இரு காலையும் கிப்லா பக்கமாக்கி மல்லாந்து படுத்து தலையால் சைக்கினை செய்வார். ஒருக்கனித்துப் படுத்து முகத்தை கிப்லா பக்கமாக்கி தலையால் சைக்கினை செய்து தொழுதாலும் கூடும். அதற்கும் இயலாவிட்டால் தொழுகையை பிற்படுத்துவார்.

**3. கிராஅத் ஓதுவது :** இது ஃபர்ளுடைய இரண்டு ரக்அத்திலும், சுன்னத், நபில், வித்ர் ஆகியவற்றின் அத்துனை ரக்அத்திலும் ஃபர்ளாகும்.

ஃபர்ளான அளவு ஒரு ஆயத் ஓதுவது என்பது தனக்கு கேட்குமளவு எழுத்துக்களை தெளிவாக உச்சரிப்பது.

4. **ருகூஃ :** அதாவது இருகைகளை நீட்டி, இரு முழங்காலையும் பிடித்துக் கொள்ளும்படி தலை, முதுகு இரண்டும் குனிவது. குறைந்த பட்சம் இது தலை, முதுகு, பித்தட்டோடு சமமாக இருப்பது ருகூஃவில் பூரண நிலையாகும். இது நின்று தொழுதால். அமர்ந்து தொழுதாலோ அவரது முழங்காலுக்கு அவரது நெற்றி நேர்பட வேண்டும்.

5. **சுஜூது :** பூமியில், பூமியோடு சேர்ந்துள்ளதில் நெற்றியை வைப்பது. அதோடு மூக்கை வைப்பது வாஜிப் (அவசியம்). எனினும் நெற்றியை மட்டும் வைத்து விட்டாலும் கூடும். எந்த சிரமமுமின்றி நெற்றியை வைக்காமல் மூக்கை மட்டும் வைத்தால் சுஜூது கூடாது.

பூமியோடு சேர்ந்ததில் சுஜூது செய்தால் அது உயர்ந்து அமுங்காததாக இருப்பது ஷரத். அதாவது அதில் தலை வைத்தால் தலை அமுங்கி அது இருந்த இடத்திலிருந்து தலை தாழ்வது கூடாது.

சுஜூதில் ஒரு காலையாவது (பூமியில்) வைக்க வேண்டியது ஃபர்ளு. வாஜிபென்பதே மிகச்சரி. இவையெல்லாம் சுஜூதில் (அத்தியாவசியமான்) தாழ்ந்த நிலை. அதில் நிரப்பமானதாகிறது. பூமியில் நெற்றி, மூக்கு, இருபாதங்கள், இரு முழங்கால், இரு கைகளை வைப்பதாகும்.

அடியான் சுஜூது செய்தால் அவரோடு 7 உறுப்புகள் சுஜூது செய்யுமென்று ஹதீஸில் வந்துள்ளது.

ருகூஃவிலும், சுஜூதிலும் இரு கரண்டை மொழியையும் சேர்ப்பது சுன்னத்.

**6. பின்னிருப்பு :** அதாவது தொழுகையின் இறுதியில் அத்தஹிய்யாத்தை அப்துஹூ வ ரசூலுஹூ வரை ஓதுமளவு இருப்பது அதில் அத்தியாவசியமான தாழ்ந்த நிலை.

**அறிவீர்!** வெளி பர்ளென்பது ஷர்த் (நிபந்தனை) அதை முற்படுத்தாமல் தொழுகை தொழுகையாகாது.
உள் பர்ளென்பது ருக்ன். அது தொழுகையில் ஒரு பகுதி. அது தப்பிவிட்டால் தொழுகை முறிந்து போகும்.

**ஃபர்ளின் சட்டம் :** ஃபர்ளைச் செய்தால் சவாபுண்டு. தக்க காரணமின்றி (தங்கடமின்றி) அதை விட்டால் தண்டனை உண்டு.

## வாஜிபுகளின் விளக்கம்

ஃபாத்திஹா ஓதுவதும், அதனுடன் ஒரு சூராவை அல்லது 3 ஆயத்களைச் சேர்ப்பதும், (துணை சூரா) ஓதுவதை முந்திய 2 ரக்அத்தில் குறிப்பாக்குவதும், ஒரு ரக்அத்தில் மடக்கி வரும் செயலில் தர்தீபை பேணுவதும், ருகூஃ, சுஜூது, கவ்மா (சிறு நிலை) இரு சஜ்தாவுக்கிடையிலுள்ள சிறு இருப்பில் தரிபடுவதும், முந்தின இருப்பும், இரு இருப்பிலும் அத்தஹிய்யாத்தும், (இமாம்) சப்தமிட்டு ஓத வேண்டிய தொழுகைகளில் சப்தமிட்டும், மெதுவாக ஓத வேண்டியதில் மெதுவாக ஓதுவதும், வித்ரில் குனூத் ஓதுவதும், இரு பெருநாளின் (கூடுதலான) தக்பீர்களும் வாஜிப்.

தஷஹ்ஹுதாவது:

اَلتَّحِيَّاتُ لِلّٰهِ وَالصَّلَوَاتُ وَالطَّيِّبَاتُ

اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ اَلسَّلَامُ عَلَيْنَا

وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ، اَشْهَدُ اَنْ لَّا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَ

اَشْهَدُ اَنَّ مُحَمَّدًا عَبْدُهٗ وَرَسُوْلُهٗ

அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ்ஸலவாத்து வத்தய்யிபாத்து. அஸ்ஸலாமு அலைக அய்யுஹன் நபிய்யு வரஹ்ம(த்)துல்லாஹி வபரகா(த்)துஹு. அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில் லாஹிஸ் சாலிஹீன். அஷ்ஹது அல்லாஇலாஹா இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு.

குனூத் :

اَللّٰهُمَّ اِنَّا نَسْتَعِيْنُكَ وَنَسْتَهْدِيْكَ وَنَسْتَغْفِرُكَ وَنَتُوْبُ

اِلَيْكَ وَنُؤْمِنُ بِكَ وَنَتَوَكَّلُ عَلَيْكَ وَنُثْنِيْ عَلَيْكَ الْخَيْرَ

كُلَّهٗ نَشْكُرُكَ وَلَا نَكْفُرُكَ وَنَخْلَعُ وَنَتْرُكُ مَنْ يَّفْجُرُكَ

اَللّٰهُمَّ اِيَّاكَ نَعْبُدُ وَلَكَ نُصَلِّيْ وَنَسْجُدُ وَاِلَيْكَ نَسْعٰى وَنَحْفِدُ

نَرْجُوْ رَحْمَتَكَ وَنَخْشٰى عَذَابَكَ اِنَّ عَذَابَكَ الْجِدَّ بِالْكُفَّارِ

مُلْحِقٌ

அல்லாஹும்ம இன்னா நஸ்தஈனுக, வ நஸ்தஹ்தீக வ நஸ்தங்.ஃ.பிருக வ நதூபு இலைக வ நு.ஃ.மினு பிக வ ந(த்)தவக்கலு அலைக வ நுஸ்னீ அலை(க்)கல் கைர குல்லஹு.

நஷ்குருக வலா நக்.ஃ.புருக வ நக்லஉ வ நத்ருகு மய்ய.ஃ.ப்ஜுருக. அல்லாஹும்ம இய்யாக ந.ஃ.புது வலக நுசல்லீ வ நஸ்ஜுது வ இலைக நஸ்ஆ வ நஹ்.ஃ.பிது நர்ஜு ரஹ்ம(த்)தக வநக்ஷா அதாப(க்)க, இன்ன அதாபகல் ஜித்த பில் கு.ஃ.ப்பாரி முல் ஹிக்.

குனூத் பாடமில்லாதவர்“ரப்பனா ஆதினா .ஃ.பித்துன்யா ஹஸனதவ் வ.ஃ.பில் ஆகிரத்தி ஹஸனதவ் வகினா அதாபன்னார்“ ஓதுவார். அல்லது “அல்லாஹும்மங்.ஃ.பிர்லீ“ என 3 விடுத்தம் ஓதுவார்.

## வாஜிபின் சட்டம்:

ஒருவர் வாஜிபை ஞாபகத்தோடு (வேண்டுமென்றே) விட்டால் தொழுகையை மீட்ட வேண்டியது வாஜிப். மறதியாக விட்டால் சஜ்தா சஹ்வு வாஜிப். அதாவது.. கடைசி இருப்பில் அத்தஹிய்யாத் ஓதியபின் வலதுபுறம் சலாம் சொல்லி இரு சஜ்தா செய்து பின் அமர்ந்து அத்தஹிய்யாத், தரூத், துஆ யாவும் ஓதி இருபுறம் சலாம் சொல்வார்.
அப்படி சஜ்தா சஹ்வும் செய்யாவிட்டால் தொழுகையை திருப்பித்தொழ வேண்டியது வாஜிப். வாஜிபின் நன்மை .ஃ.பர்ளின் நன்மைக்குக் கீழ். அதனை விடுவதின் தண்டணையும் அவ்வாறே.



 

# சுன்னத்துகளின் பயான்

தக்பீர் தஹ்ரீமாவுக்காக இரு கைகளையும் உயர்த்துவதும், விரல்களை பரத்துவதும், தக்பீரின் போது தலையை தாழ்த்தாமலிருப்பதும், தக்பீரை இமாம் சப்தமாகச் சொல்வதும், சனா, அஊது, பிஸ்மி, ஆமீன் ஆகியவற்றை ரகசியமாகச் சொல்வதும், வலது கையை இடது கைக்கு மேல் வைப்பதும், அதை தொப்புளுக்கு கீழே கட்டுவதும், ஹழரில் (ஊரில் இருக்கும் போது) ஃபஜ்ரிலும், ளுஹரிலும் திவாலுல் முஃபஸ்ஸல் ஓதுவதும் அசரிலும், இஷாவிலும் அவ்ஸா(த்)துல் முஃபஸ்ஸல் ஓதுவதும், மக்ரிபில் கிஸாருல் முஃபஸ்ஸல் ஓதுவதும், ருகூ உடைய தக்பீரும், அதில் 3 விடுத்தம் தஸ்பீஹும், இரு முழங்காலையும் இரு கையினால் பிடிக்கிறதும், விரல்களை விடுத்துக் கொள்வதும் (விரித்து வைக்கிறதும்) தஸ்மீஉம் (சமிஅல்லாஹு லிமன் ஹமிதா என்பதும்) தஹ்மீதும் (ரப்பனா லகல் ஹம்து என்பதும்), சுஜூதுடைய தக்பீரும், அதில் 3 விடுத்தம் தஸ்பீஹும், அதை விட்டு சறுகிற தஸ்பீஹும், ருகூஃ, சுஜூதில் வயிற்றை தொடையை விட்டும், முழங்கையை பூமியை விட்டும், நெருக்கடியில்லாத (இடத்)தில் குடங்கையை விலாவை விட்டு தூரப்படுத்துவதும், அத்தஹிய்யாத்தில் வலது காலை நீட்டி, இடது காலை விரித்துக் கொள்வதும், பின்னிருப்பில் சலவாத், துஆ ஓதுவதும், சலாமுக்காக வலமிடம் முகத்தை திருப்புவதும் சுன்னத். பெண் நெஞ்சில் கை கட்டுவாள். முழங்காலைப் பிடிக்க மாட்டாள். விரல்களை விரிக்க

மாட்டாள். எனினும் விரல்களை சேர்த்து இரு கைகளையும் இரு முழங்காலில் வைப்பாள். ருகூஃ, சுஜூதில் குடங்கையை விலாவோடு, வயிற்றை தொடையோடு சேர்ப்பாள். இரு முழங்கையையும் பூமியில் விரிப்பாள். அத்தஹிய்யாத்தில் சவனத்தின் (பித்தட்டின்) மீது அமர்வாள் (கால் மீது பித்தட்டை வைத்து அமரமாட்டாள்.)

**திவாலுல் முஃபஸ்ஸலாவது :** சூரா ஹுஜராத் முதல் சூரா புரூஜ் வரையுள்ள சூராக்கள்.

**அவ்ஸாதுல் முஃபஸ்ஸல் :** அது முதல் (புரூஜ் முதல்) லம்யகுன் (சூரா பய்யினா) வரை.

**கிஸாருல் முஃபஸ்ஸல் :** அது முதல் கடைசி வரை. ஒரு ரக்அத்தில் ஒரு சூரா முழுவதையும் ஓதுவது மிகச் சிறந்தது. இரண்டு ரக்அத்திலும் கிராஅத்தை (அதன் அளவை) சரியாக்கி வைப்பார். ஆனால் ஃபஜ்ரில் மட்டும் இமாம் முந்திய ரக்அத்தை நீளமாக்குறது சுன்னத். இரண்டாம் ரக்அத்தை முந்தின ரக்அத்தை விட நீளமாக்குறது மக்ரூஹ் தன்ஜீஹ் (மார்க்கம் விரும்பாதது) நபிலானாலும் சரி.

சஜ்தா ஆயத் ஓதினால் ஒரு சஜ்தா செய்து (மீண்டும்) எழும்பி கொஞ்சம் ஓதி ருகூஃ. செய்வார். தொழுகைக்கு வெளியே சஜ்தா ஆயத்தை ஓதினால் தக்பீர் தஹ்ரீமா தவிர தொழுகைக்கான இதர ஷரத்துகள் யாவும் அதற்கும் ஷரத்தாகும். தொழுகையை ஃபசாதாக்கும் யாவும் அதையும் ஃபசாதாக்கும். அதன் ருக்னு சுஜூது மட்டுமே.

முன் பின் இமாம் சப்தமாக தக்பீர் சொல்வது சுன்னத். முன்பின் எழுவது முஸ்தஹப். எனினும் கையை உயர்த்தாமல் தக்பீர் சொல்லி ஒரு சஜ்தா செய்து பின் தக்பீர் சொல்லி தலையை உயர்த்துவார். அதில் சுஜூதுடைய தஸ்பீஹைச் சொல்வார். (ஆனால் தொழுகைக்கு வெளியில் சஜ்தா திலாவத் செய்தால் அதில் “சஜத வஜ்ஹிய லில்லதீ கலகஹு வசவ்வரஹு வ ஷக்க சம்அஹு வபசரஹு பிஹவ்லிஹி, வகுவ்வ(த்)திஹி ஃபதபாரகல்லாஹு அஹ்ஸனுல் காலிகீன்“ போன்றதை ஓத வேண்டுமென ரத்துல் முக்தார் போன்ற சட்ட நூல்கள் கூறுகின்றன) அதில் தஷஹ்ஹுதோ, சலாமோ கிடையாது.

குர்ஆனில் இடம்பெறும் 14 சஜ்தா ஆயத்துகளையும் ஓதியவர், கேட்டவர் இருவர் மீதும் சஜ்தா திலாவத் வாஜிப். சூரா சாதில் வரும் சஜ்தாவும், சூரா ஹஜ்ஜில் முந்தி இடம் பெறுவதும் அதிலுள்ளவை.

சனா :

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ وَتَعَالٰى جَدُّكَ وَلَآ اِلٰهَ غَيْرُكَ

சுப்ஹானகல்லாஹும்ம வபிஹம்திக வதபாரகஸ்முக வதஆலா ஜத்துக வலா இலாஹ கைருக.

ருகூஃவின் தஸ்பீஹ் : சுப்ஹான ரப்பியல் அளீம்.

தஸ்மீஃ : சமிஅல்லாஹு லிமன் ஹமிதஹ்.

தஹ்மீத் : ரப்பனா வலகல் ஹம்து.

ருகூஃ ஐ விட்டு எழும்போது இமாம் தஸ்மீஃ கூறுவார். முக்ததீ தஹ்மீது சொல்வார்.

முன்.ஃ.பரித் (தனித்து தொழுபவர்) இரண்டையும் கூறுவார். தலையை உயர்த்தும் போது தஸ்மீ.ஃ. சொல்லி, சரியாக நின்றபின் தஹ்மீத் சொல்வார்.

**சுஜூதின் தஸ்பீஹ்:** சுப்ஹான ரப்பியல் அ.ஃ.லா. ருகூ.ஃ., சுஜூத் தஸ்பீஹில் குறைந்தது 3 விடுத்தம். நிரப்பம் 7 விடுத்தம். நடுத்தரம் 5 விடுத்தம். ஆனால் மக்கள் சடைகிற அளவு இமாம் அதிகமாக்கக் கூடாது.

**தருத் (சலவாத்):**

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ

كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

وَبَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلٰى اِبْرَاهِيْمَ

وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ

அல்லாஹும்ம சல்லி அலா சய்யிதினா முஹம்மத் வஅலா ஆலி சய்யிதினா முஹம்மத். கமாசல்லை(த்)த அலா சய்யிதினா இப்ராஹீம் வ அலா ஆலி சய்யிதினா இப்ராஹீம். இன்னக ஹமீதும் மஜீத். வபாரிக் அலா சய்யிதினா முஹம்மத் வ அலா ஆலி சய்யிதினா முஹம்மத். கமா பாரக்த அலா சய்யிதினா இப்ராஹீம் வஅலா ஆலி சய்யிதினா இப்ராஹீம் இன்னக ஹமீதும் மஜீத்.

அதன்பின் ஓதுற துஆ:

دُعَا اَللّٰهُمَّ اغْفِرْلِيْ وَلِوَالِدَيَّ وَلِاُسْتَاذِيَّ وَلِجَمِيْعِ
الْمُسْلِمِيْنَ وَالْمُسْلِمَاتِ، وَالْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ، اَلْاَحْيَاءِ
مِنْهُمْ وَالْاَمْوَاتِ، اِنَّكَ مُجِيْبُ الدَّعَوَاتِ، رَبَّنَا اٰتِنَا

அல்லாஹும்மங்.:.பிர்லீ வலிவாலிதய்ய வலி உஸ்தாதிய்ய வலிஜமீஇல் முஸ்லிமீன வல் முஸ்லிமாத் வல் மு.:.மினீன வல் மு.:.மினாதி அல்அஹ்யாயி மின்ஹும் வல் அம்வாத் இன்னக முஜீபுத் த.:.வாத். ரப்பனா ஆ(த்)தினா .:.பித்துன்யா ஹஸன(த்)தவ் வ.:.பில் ஆகிர(த்)தி ஹஸன(த்)தவ் வகினா அதாபன் நார்.

## சுன்னத்தின் சட்டம்

சுன்னத்துடைய சவாபு (நன்மை) வாஜிபுடைய சவாபுக்கு கீழ். அதை ஞாபகத்தோடு விடுவது தவறு. ஞாபகமில்லாமல் விட்டால் பரவாயில்லை. ஆனாலும் தொழுகையை மீட்டுவது முஸ்தஹப் (கட்டாயமல்ல).

நிலை நிற்கும்போது சுஜூதுடைய இடத்தையும், ருகூ.:. வின்போது இருபாதத்தின் முதுகையும், சுஜூதின்போது மூக்கின் நுனியையும், இருப்பின்போது மடியையும், முந்தின சலாமின் போது வலது புஜத்தையும், பிந்தின சலாமின்போது இடதுதோள் புஜத்தையும் பார்க்க வேண்டும்.

(தொழும்போது) கொட்டாவி வந்தால் வாயை திறக்காமல் பிடித்துக் கொள்ளவதும் முடியாவிட்டால் இடது கை

முதுகால் அல்லது சட்டைக் கையால் வாயை மூடுவதும், தக்பீரின் போது சட்டைக் கையிலிருந்து இரு முன்கையை வெளியாக்குவதும், இருமலை முடிந்தளவு தடுக்கிறதும், ஹய்ய அலல் ஃபலாஹை சொல்கிற நேரத்தில் இமாமும், மஃமூமும் எழும்புவதும், கத்காமதிஸ்ஸலாஹ் சொல்லும்போது இமாம் தொழ ஆயத்தமாவதும் அதபு (ஒழுக்கம்).

ஆனால் பெண் தக்பீரின்போது இருமுன் கையையும் சட்டையை விட்டு வெளியாக்க மாட்டாள்.

**அதபின் சட்டம் :** அதனை செய்வதால் சுன்னத்துக்கு அடுத்தபடியான சவாபுண்டு. அதை விடுவது மக்ருஹல்ல. எனினும் கிலாஃபுல் அவ்லா (எனும்) ஏற்றத்துக்கு மாற்றமானது. அதனை முஸ்தஹப் என்றும், ஃபழீலாவென்றும், மன்தூப் என்றும் (கூட) சொல்லப்படும்.

## தொழுகையை ஃபசாதாக்குபவை

(தொழுகையில்) எதையாவது சாப்பிட்டாலோ, குடித்தாலோ, பேசினாலோ கொஞ்சமாயினும் சரி, மறதியாய் செய்தாலும் சரி (தொழுகை) முறிந்து விடும். ஆனால் சாப்பிட்ட உணவில் ஒரு கடலை அளவுக்கும் சின்னதாக பல்லுக்கிடையில் மாட்டியிருந்து அதை விழுங்கினால் (தொழுகை) முறியாது. தங்கடமின்றி கனைப்பதால், தும்முவதால், இருமுவதால், ஏப்பம், கொட்டாவி விடுவதால் எழுத்து எதுவும் வெளியாகிவிட்டால் ஃபஸாதாகி (முறிந்து) விடும். தங்கடமிருந்தால் ஃபஸாதாகாது. (தொழுகையில் இல்லாத வேறு) செயல் மிகைத்தலாலும் முறிந்து விடும்.

**செயல் மிகுதம் என்பதாவது:** தூரத்திலிருந்து பார்ப்பவருக்கு இவர் தொழுகிறாரா? இல்லையா? என்ற எண்ணம் தோன்றச் செய்வதாகும். தொழ ஆரம்பித்தபின் தெரிந்தே காரணமின்றி தொழுகையை முறிப்பது ஹராம். காரணத்தோடு முறிப்பது (சிலசமயம்) முபாஹ் (கூடும்), (சிலசமயம்) முஸ்தஹப், (சிலசமயம்) வாஜிபாகும்.

தன் பணத்தில் ஒரு திர்ஹம் (10 ரூபாய்க்கு மேல்) தப்பிவிடும் (காணாமல் போகும் திருடப்பட்டு விடும்) என பயந்தால் முறிப்பது முபாஹ்.

உயிருக்குப் போராடுபவரைக் காப்பாற்ற முறிக்க வேண்டியது வாஜிப்.

ஃபர்ளு தொழ தனியாக ஆரம்பித்து (தொழுது கொண்டிருக்கும் போதே) இகாமத் சொல்லி விட்டால் ஜமாஅத்தில் சேர முறிப்பது முஸ்தஹப்.

ஆயினும் 4ரக்அத் அல்லாத தொழுகையில் முந்தின ரக்அத்தில் சஜ்தா செய்து விட்டாலும், செய்யாவிட்டாலும் ஒரு சலாம் கொடுத்து இமாமைப் பின் துயர்வார். இரண்டாம் ரக்அத்தில் சஜ்தா செய்து விட்டால் (பின் அமர்ந்து) தொழுகையை நிரப்பமாக்கிடுவார்.

4ரக்அத் உள்ள தொழுகையிலோ முந்தின ரக்அத்தில் சஜ்தா செய்யவில்லையெனில் முறித்து விடுவார். சஜ்தா செய்து விட்டால் 2-ம் ரக்அத்தையும் சேர்த்து தொழுது சலாம் சொல்லிவிட்டு (இமாமைப்பின்) துயர்வார்.

3-ம் ரக்அத் சஜ்தா செய்து விட்டால் முறிக்காமல் (4ரக்அத்தை) நிரப்பமாகத் தொழுது பின் நபில் தொழுதவராக இமாமைப் பின் துயர்வார். அசர் வக்தில் தவிர.(அசருக்குப்பின் நபில் இல்லையல்லவா? எனவே) அசரில் துயரமாட்டார்.

நபில் தொழுதால் (தொழுகையை) முறிக்க மாட்டார். (பூர்த்தி செய்த பிறகே இமாமைத் துயர்வார்)

ளுஹரின் (முன்) சுன்னத், ஜும்ஆவின் (முன்) சுன்னத் (தொழத்)துவங்கியவர் 2 ரக்அத்தில் சலாம் சொல்லிவிட்டு (இமாமை) துயர்ந்து பின் அந்த சுன்னத்தை கழா செய்வார்.

தாய், தந்தை யாராவது அழைத்தால் (அதற்காக) ∴பர்ளு தொழுகையை முறிக்க மாட்டார்.

நபில் தொழுகையில் இருப்பதை அறிந்து கூப்பிட்டால் பதில் சொல்லமாட்டார். அறியாமல் கூப்பிட்டால் பதில் சொல்வார்.

**ஹராமின் சட்டம் :** அதை அல்லாஹ்விற்காக (அல்லாஹ் தடுத்தது என்பதற்காக) விட்டால் சவாபுண்டு. அதைச் செய்தால் தண்டனையுண்டு.

**முபாஹின் சட்டம் :** அதைச் செய்தாலும், விட்டாலும் சவாபுமில்லை, தண்டனையுமில்லை. அதன்பேரில் லேசான கேள்வி, கணக்கு கேட்கப்படும்.

## தொழுகையின் மக்ரூஹ் :

ஆடையை தோள்மீதோ, தலைமீதோ போட்டு கட்டாமல் தொங்க விடுவதும், சுஜூதுக்கு இறங்கும்போது (குனியும்போது) முன்னாலோ, பின்னாலோ ஆடையை

உயர்த்துவதும், ஆடையின் மீது கவனம் சிதறுவதும், வேலை செய்த ஆடையோடு தொழுவதும் வேறு ஆடை இல்லாவிட்டால் பரவாயில்லை தலை திறந்தவாறு தொழுவதும், (தலையை மறைக்க ஆடையில்லையென்றாலோ) பரதேசிக்கோலத்தை விரும்புபவராக இருந்தாலோ பரவாயில்லை

மல, ஜலம், காற்று முட்டிக் கொண்டிருக்கும் போது தொழுவதும், விரல்களை நெட்டி முறிக்கிறதும், இடுப்பில் கை கட்டுவதும், முகத்தை வலமிடம் (வலது, இடது) திருப்புவதும், சுஜூதில் முழங்கையை விரித்து வைப்பதும், மனித முகத்துக்கு நேரே தொழுவதும், நாயிருப்பு (நாய் அமர்வது போல்) இருப்பதும், தங்கடமின்றி சம்மணம் போட்டமர்வதும், சட்டைக்கையை முழங்கைக்கு மேல் சுருட்டிக் கொண்டு தொழுவதும், கண்களை மூடிக் கொள்வதும் (கவனம் சிதறாமல், பயபக்தியோடு இருக்க கண்களை மூடிக் கொண்டால் பரவாயில்லை). கண்களை வானத்தின் பால் உயர்த்துவதும், கொட்டாவி விடுவதும், வாயையோ, மூக்கையோ மூடிக்கொள்வதும், (தொழுகையிலில்லாத, அதிகமற்ற) கொஞ்ச செயலும் மக்ரூஹ்.

சுத்ரா : தொழுபவருக்கு முன் சுத்ரா (திரை) இல்லாமல் நடப்பது மக்ரூஹ். ஆனால் பெரிய பள்ளியானால், முற்றமாக (திறந்த) வெளியாக இருந்தால் சுஜூத் செய்யும் இடம் வரை நடக்கக் கூடாது. உள்ளச்சமான (தொழுப)வரின் பார்வை விஜயமாகும் தலம் வரை நடக்கக் கூடாதென ∴பக்ருல் இஸ்லாம் சொல்லியுள்ளார்கள்.

சிறு பள்ளியிலோ, வீட்டிலோ தொழுபவருக்கு முன்பு சுவர் வரை சுத்ரா இன்றி நடக்கக் கூடாது. வீடு பெரிதாக இருந்தாலும் சிறு பள்ளியின் சட்டமே.

40 முழம் உள்ளது பெரிய பள்ளிவாசல். அதனை விடக்குறைந்தது சிறிய பள்ளிவாசல். சுத்ரா (திரை அல்லது தடுப்பு) குறைந்தது ஒரு முழ நீளமும், சிறு விரல் பருமனும் இருக்க வேண்டும். அதை இரு புருவத்துக்குமிடையில் நேராக நட்ட வேண்டும். ஆனாலும் வலது புருவத்துக்கு நேரே நட்டுவது ஏற்றம்.

நட்ட முடியாவிட்டால் அதை கீழே வைப்பதோ, கீறல் போடுவதோபோதாது. ஆனால் மார்க்க சட்ட மேதைகளின் வார்த்தைகளிலிருந்து அறிய வருவது யாதெனில்.. நட்ட முடிந்த இடத்தில் கீழே வைப்பது போதாது. கீழே வைக்க முடிந்த தலத்தில் கீறல் போதாது.

## மக்ரூஹின் சட்டம் :

இது தஹ்ரீம், தன்ஜீஹ் என இரு வகை. மக்ரூஹ் தஹ்ரீம் ஹராமளவில் முருகுதலாயிருக்கும் (ஹராமில் சேர்ப்பதை அஞ்சப்படும்). அதை அல்லாஹ்விற்காக விட்டால் சவாபுண்டு. செய்தால் ஹராமுக்குரிய வேதனைக்கு அடுத்தபடியான தண்டனை உண்டு.

(அதில் தொடர்ந்து நிலைப்பவர் ஃபாஸிக் (பாவி) ஆவார். மக்ரூஹ் தன்ஜீஹ் என்பது ஹலாலளவில் முருகுதலாயிருக்கும் (ஹலாலை விடுவதை அஞ்சப்படும்) அதை விட்டால் குறைந்தபட்ச சவாபுண்டு. செய்தால்

வேதனையில்லை. ஆனால் அது கிலா.்.புல் அவ்லா ஏற்றத்திற்கு மாற்றம்.

## நிய்யத் விளக்கம்

நிய்யத் என்பது- அல்லாஹ்வுக்காக செய்ய நாடுவது அதில் பர்ளு வாஜிபில் இன்ன இன்ன தொழுகை என குறிப்பிட வேண்டியது ஷர்த். நபில், சுன்னத் தொழுகிறேன் என நிய்யத் செய்தால் போதும். ஆனாலும் குறிப்பிடுவது பேணுதல்.

### .்.பர்ளு தொழுகையின் நிய்யத்

نَوَيْتُ اَنْ اُصَلِّيَ لِلّٰهِ تَعَالٰى فَرْضَ هٰذَا الظُّهْرِ
مُتَوَجِّهًا اِلٰى جِهَةِ الْكَعْبَةِ الشَّرِيْفَةِ

"நவை(த்)து அன் உசல்லிய லில்லாஹி தஆலா .்.பர்ழ ஹாதள்ளுஹ்ரி முதவஜ்ஜிஹன் இலா ஜிஹ(த்)தில் க.்.ப(த்)திஷ் ஷரீ.்.ப(த்)தி" சிறப்பாகிய க.்.பா திசைநோக்கி இந்த ளுஹ்ரின் .்.பர்ளை அல்லாஹ்வுக்காக தொழ நிய்யத் செய்தேன். இதுபோல் அந்தந்த வக்தை (ஹாதள்ளுஹ்ரி எனுமிடத்தில் ஹாதல் .்.பஜ்ரி, ஹாதல் அசரி, ஹாதல் மக்ரிபி, ஹாதல் இஷாஇ, ஹாதல் ஜும்முஅ(த்)தி என) சொல்லிக் கொள்வார்.

(ளுஹ்ர், அசர் என்பன போல குறிப்பிடாமல்) பொதுவாக எல்லா வக்துக்கும் ஹாதல் வக்தி என குறிப்பிட்டாலும் போதும்.

இமாமுடன் தொழுதால் "ஹாதல் வக்தியுடன் "மஅல் இமாமி" (இமாமுடன்) என்று சேர்த்துக் கொள்வார்.
சுன்னத் தொழுகைக்கு பொதுவாக "உசல்லீ லில்லாஹி தஆலா சலா(த்)தஸ் சுன்ன(த்)தி" என்றும் கூறலாம். அந்தந்த நேரத்தைக் குறிப்பிட்டு "சலா(த்)தஸ் சுன்னத்தி என்ற இடத்தில் "சுன்ன(த்)தள்ளுஹரி", "சுன்ன(த்)தல் மக்ரிபி" என்பன போன்றும் குறிப்பிடலாம்.

ஆயினும் பொதுவாக "சலாத்தஸ் சுன்னத்தி" (சுன்னத் தொழுகையை) என்று குறிப்பிடும்போது தொழும் அந்த சுன்னத்தை மனதில் நாடிக் கொள்வார்.
அவ்வாறே நபிலை நாடி "உசல்லீ லில்லாஹி தஆலா சலா(த்)தன் ந.ஃ.பிலி" என்று நிய்யத் செய்தால் போதும்.

**தராவீஹின் நிய்யத் :**

أُصَلِّي لِلّٰهِ تَعَالَى صَلَاةَ التَّرَاوِيْحِ

உசல்லீ லில்லாலி தஆலா சலா(த்)தத் தராவீஹி.

**வித்ருடைய நிய்யத் :**

أُصَلِّي لِلّٰهِ تَعَالَى هٰذَا الْوِتْرَ الْوَاجِبَ

உசல்லீ லில்லாஹி தஆலா ஹாதல் வித்ரல் வாஜிப்.

**ஜும்ஆ உடைய நிய்யத் :**

أُصَلِّي لِلّٰهِ تَعَالَى صَلٰوةَ الْجُمُعَةِ مَعَ الْإِمَامِ

உசல்லீ லில்லாஹி தஆலா சலா(த்)தல் ஜுமுஅ(த்)தி மஅல் இமாமி.

ஈதுல் ஃபித்ர் (ரமழான் பெருநாள்)

தொழுகை நிய்யத் :

أُصَلِّي لِلّٰهِ تَعَالٰى صَلَاةَ عِيْدِ الْفِطْرِ وَاجِبًا اِقْتَدَيْتُ بِهٰذَا الْاِمَامِ

உசல்லீ லில்லாஹி தஆலா சலா(த்)த ஈதில் ஃபித்ரி வாஜிபன் இக்(த்)ததை(த்)துபிஹாதல் இமாமி.

ஹஜ் (குர்பானி) பெருநாள் தொழுகை நிய்யத் :

أُصَلِّي لِلّٰهِ تَعَالٰى صَلٰوةَ الْعِيْدِ الْاَضْحٰى وَاجِبًا اِقْتَدَيْتُ بِهٰذَا الْاِمَامِ

உசல்லீ லில்லாஹி தஆலா சலா(த்)தல் ஈதில் அழ்ஹா வாஜிபன் இக்(த்)ததை(த்)து பிஹாதல் இமாமி.

நிய்யத் தக்பீருடனே சேர்த்திருக்க வேண்டியது ஷர்த். எனினும் இரண்டுக்குமிடையில் வேறு செயல் இல்லாவிட்டால் தக்பீருக்கு முன் நிய்யத்தை முற்படுத்தலாம்.

**அறிவீர்!** தொழுகை முழுக்க உள்ளச்சமாய் இதயம் இருப்பது முஸ்தஹப். அதுவே தொழுகைக்கு உயிர். உள்ளச்சமென்பது உறுப்புகள் ஒடுங்கும்படியான பயந்த நிலை.

இதயம் இருப்பது என்பதாவது தொழுகையிலுள்ள சொல், செயலை அறிவது. அதை விட்டும் கவனம் திசை திரும்பாமலிருப்பது.

**அல்லாஹ் கூறுகிறான்...** “தொழுகையில் இதய பயபக்தியோடு உறுப்புகள் ஒடுங்கிய மு.்.மின்கள் ஈடேற்றம் பெற்றுவிட்டார்கள்“.

**ஹதீஸில் வருகிறது...** அடியான் தன் கல்பு (இதயம்) கொண்டும், தன் கேள்வி, பார்வை கொண்டும் அல்லாஹ் அளவில் முன்னோக்கியவனாக .்.பர்ளான தொழுகையில் நின்றிட்டால் திட்டமாக அவனது தாய் அவனை பெற்றநாளைப் போல் அவன் பாவங்களை விட்டும் நீங்கியவனாக அவன் தொழுகையிலிருந்து வெளியேறுவான். ஆக தொழுகையில் உள்ளச்சம் மிக மிக அவசியமானதாகும்.

# தொழும் முறை

தொழ நாடினால் இரு முன் கையையும் இரு சட்டைக் கையை விட்டும் வெளிப்படுத்தி இரு பெரு விரலால் இரு காது சோனையைத் தொட்டவராக இரு கைகளையும் உயர்த்தி இரு முன் கையின் உட்பகுதியை கிப்லாவுக்கு நேராக்குவார்.

பெண் அவளது விரல்களின் நுனி இரு தோள் புஜத்துக்கு நேராகுற வரை உயர்த்துவாள். பின்பு நிய்யத் செய்தவராக “அல்லாஹு அக்பர்“ என நீட்டாமல் தக்பீர் சொல்லுவார். நிலையில் இரு பாதத்துக்கிடையில் 4 விரல்கள் (இடைவெளி) மட்டும் உண்டாயிருக்க வேண்டும். பின் தக்பீர் சொன்னவராக சனா ஓதினவராக தொப்புளுக்கு கீழே

வலது கையை இடது கைமேல் இடது கை மணிக்கட்டை வலது கையின் சிறு விரல், பெருவிரலால் வளையமிட்டுப் பிடித்தவராக (மற்ற)மூன்று விரல்களையும் அதன் மேல் விரித்தவராக கை வைப்பார். பெண் நெஞ்சில் முன் கையின் மீது முன் கையை வைப்பாள். வளையமிட மாட்டாள். இமாம் சப்தமாக கிராஅத் ஓதும் போது (வந்து) தொடரும் முக்ததீ சனா ஓதமாட்டார். மஸ்பூக் (ஒரு சில ரக்அத் தாமதமாய் வந்து சேர்ந்தவர்)தனக்கு தப்பி விட்டதை தொழ எழும்போது சனா ஓதுவார்.

பின் சனா ஓதியதுபோலவே முக்ததீ அல்லாத இமாம், முன்.'.பரித் (தனித்து தொழுபவர்) அஊது, பிஸ்மியை ரகசியமாக ஓதி .'.பாத்திஹா ஓதுவார். பின் அனைவரும் ரகசியமாக "ஆமீன்" சொல்வார். பின் முக்ததீ அல்லாதவர் (இமாம் அல்லது முன்.'.பரித்) ஒரு சூராவை அல்லது மூன்று சிறிய ஆயத்துகளை அல்லது ஆயத்துல் குர்ஸி போன்ற ஒரு பெரிய ஆயத்தை ஓதுவது வாஜிப். சுன்னத்தான கிராஅத்தை ஓதுவது சுன்னத்.

பின் யாவரும் ருகூ வுக்காக குனிந்தவாறு தக்பீர் சொல்வார். ருகூவில் இரு கைகளைக் கொண்டு இரு முழங்காலைப் பிடித்தவராக இரு கையையும் வைப்பார். விரல்களை நன்றாக விரிப்பர். இரு கரண்டை மொழியையும் சேர்ப்பர். இரு கெண்டைக் காலையும் நட்டுவர். முதுகை விரித்து (நேராக்கி) தலையையும், பித்தட்டையும் சரியாக (நேர்பட) வைப்பர். அனைவரும் 3 விடுத்தம் தஸ்பீஹ் சொல்வர்.

ருகூவில் பெண் கொஞ்சமாக குனிவாள். முட்டுக்காலை பிடிக்கமாட்டாள். விரல்களை விரிக்க மாட்டாள். கோர்த்தவளாக இரு கையையும் இரு முட்டுக்காலிலும் வைப்பாள். இரு முட்டுக்காலையும் வளைப்பாள். நட்டமாட்டாள்.

பின்பு இமாம் தஸ்மீ·. சொன்னவராக தலையை உயர்த்துவார். முக்ததீ தஹ்மீது சொன்னவராக உயர்த்துவார். முன்·பரித் தலையை உயர்த்தியவராக தஸ்மீ·. சொல்வார். நிலைக்கு வந்து தஹ்மீத் சொல்வார். அனைவரும் நின்றவர்களாக ஒரு தஸ்பீஹ் (ஓதும் நேரம்)அளவு தரிபடுவர். அதில் சிறந்தது "அல்லாஹும்ம ரப்பனா வலகல் ஹம்து" பின் வாவின்றி "அல்லாஹும்ம ரப்பனா லகல் ஹம்து" பின் ரப்பனா வலகல் ஹம்து" பின் ரப்பனா லகல் ஹம்து". பின் யாவரும் சுஜூதுக்கு இறங்குவதுடனே தக்பீர் சொல்வர்.

நெற்றியை (பூமியில்) வைக்கும் போது தக்பீரை முடிப்பர். இறங்கும்போது முதலில் இரண்டு முட்டுக்காலை வைத்து பின் இரு கைகளை வைத்து பின் இரு பெரு விரலையும் இரு காதுக்கு நேராக்கி இரு முன் கைகளுக்குமிடையில் முகத்தை வைத்தவராக சுஜூது செய்வார். நிலையளவில் எழுவதை இதற்கு மாற்றமாக்கப்படும். இரு கை விரல்களையும் கிப்லாவுக்கு நேரே ஆக்கி அவற்றை ஒன்றோடொன்று சேர்த்து வைப்பார். மூக்கு, நெற்றி இரண்டாலும் சுஜூது செய்வார். ஆயினும் நெற்றியை முதலில் வைத்து மூக்கை பிறகு வைப்பார். சஜ்தாவில்

இரு குடங்கையையும் விலாவை விட்டு அகற்றிக் கொள்வார். வயிற்றை இரு தொடையை விட்டும் தூரப்படுத்துவார். இரு கால்விரல் நுனிகளையும் கிப்லா நோக்கி வைப்பார். அதில் 3 முறை தஸ்பீஹ் சொல்வார். பெண் குடங்கையை விலாவோடும், வயிற்றைத் தொடையோடும் சேர்ப்பாள். பின் யாவரும் தக்பீர் கூறியவாறு தலையை உயர்த்துவர். எழுவது இருப்பளவில் நெருக்கமாக இருந்தால் இரண்டாம் சுஜூது கூடும். இல்லாவிட்டால் கூடாது. இரு சஜ்தா வுக்கிடையில் ஒரு தஸ்பீஹ் (நேரம்) அளவு தரிபட்டு இருப்பார். அப்போது இரு கையையும் இரு தொடையில் வைப்பார். அத்தஹிய்யாத்தில் அமர்வது போலவே.

எனினும் பெண் இரு காலின் மீதே தரிபட்டிருப்பாள். பின் (மறு) சுஜூதுக்காக தக்பீர் சொல்லி சுஜூது செய்வர். அதில் 3 விடுத்தம் தஸ்பீஹ் சொல்வர். பின் அமராமல், பூமியில் கையை ஊண்டாமல் இரு பாதத்தின் நுனிகளிலிருந்து இரண்டாம் ரக்அத்துக்கு எழ தக்பீர் கூறியவராக தலையை உயர்த்துவார்.

இரண்டாம் ரக்அத் முந்தின ரக்அத் போலவே. ஆனால் சனா, அஊது கிடையாது. இரண்டு கையையும் உயர்த்த மாட்டார். இரண்டாம் ரக்அத்தின் இரண்டு சஜ்தாவை முடித்த பின் ஆண் இடது காலை விரித்து அதை இரு சவனத்துக்கிடையிலாக்கி (பித்தட்டின் கீழ் வைத்து) அதில் அமர்வார். வலது காலை நட்டி அதன் விரல்களை கிப்லா நோக்கி வைப்பார். இரு கையையும் இரு தொடை

மீது வைப்பார். விரல்களை லேசாக விரித்து வைப்பார். அதன் நுனிகளை இரு முட்டுக் காலுக்கு மேலாக்குவார். முட்டுக்காலை பிடிக்க மாட்டார். பெண் இடது சவனத்தின் மீதமர்ந்து இரு கால்களையும் வலது புறத்தில் புறப்படுத்துவாள்.

யாவரும் அத்தஹிய்யாத்தை "அப்துஹு" வ ரசூலுஹு" வரை ஓதுவர். "அத்தஹிய்யாத்தைக் கொண்டு அல்லாஹ்விற்கு தான் காணிக்கை வைப்பவராகவும், "அஸ்ஸலாமு அலைக " வைக் கொண்டு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பேரில் சலாம் சொல்கிறவராகவும் "அஸ்ஸலாமு அலைனா . வ அலா இபாதில்லாஹிஸ் சாலிஹீன்" மூலம் தன் மீதும், வான், பூமியிலுள்ள சாலிஹான அடியார்கள் பேரிலும் சலாம் சொல்பவராகவும் "அஷ்ஹது"வைக் கொண்டு சாட்சி சொல்பவராகவும் சொல்வார். ஷஹாதத்தில் நடுவிரல் மற்றும் அதையடுத்து இரு சிறு விரல்களையும் பொத்திக்கொண்டு பெருவிரல் தலையை கலிமா விரல் நடு முழியில் வைத்து "லா இலாஹ" என்று செல்லும்போது கலிமா விரலை உயர்த்தி "இல்லல்லாஹ்" என்று சொல்லும் போது அந்த விரலை (கீழே) வைத்து சைக்கினை செய்வர்.

ஃபர்ள், வித்ர், 4 ரக்அத் சுன்னத்களிலும் முந்தின இருப்பில் அப்துஹு, வரசூலுஹு வுக்கு மேல் சொல்லக் கூடாது. 3 மற்றும் 4ம் ரக்அத்தில் ஃபாத்திஹா மட்டும் ஓதுவார். எனினும் ஃபாத்திஹாவும் ஓதலாம். அல்லது 3 தஸ்பீஹ் அல்லது மௌனமாய் நிற்பது இம்மூன்றும் கூடும். முந்தின

இருப்பைப்போல கடைசி இருப்பிலும் இருந்து அத்தஹிய்யாத் ஓதிய பின் சலவாத், துஆ ஓதுவர். பின் சுன்னம் பின்னாலிருப்பவர்கள் காணுமளவு அனைவரும் முந்தி வலது பக்கம் முகத்தை திருப்பி தன்னுடனுள்ள கவ்முகளையும், ஹ.்.பழாகளையும் (அடியாருடன் இரவு, பகல் இருக்கும் மலக்குகள்) நிய்யத் செய்து இமாமுடனே “அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்ம(த்)துல்லாஹ்“ என்று சலாம் சொல்லி பின் அதே போல் இடது புறமும் சலாம் கூறுவர். தக்பீர் தஹ்ரீமாவிலும், சலாமிலும் இமாமுடன் சேர்ந்து (ஒரு சேர) சொல்வது சிறப்பு என்று இமாமுல் அ.்.ளம் அபூஹனீபா ரஹிமஹுல்லாஹ் சொல்லியிருக்கிறார்கள். பிறது சொல்வது சிறப்பென்பது சாஹிபைன் ரஹ்ம(த்)துல்லாஹி அலைஹிமாவின் கருத்து.

பின் சுன்னத் இல்லாவிட்டால் இஸ்திங்.்.பார் செய்வர். இருந்தால்

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ تَبَارَكْتَ يَاذَالْجَلَالِ وَالْاِكْرَامْ

“அல்லாஹும்ம அன்தஸ் ஸலாம் வமின்கஸ்ஸலாம் தபாரக்த யாதல் ஜலாலி வல் இக்ராம் ஓதி (ஓதும் போது கைகளை உயர்த்துவது தவறல்ல) சுன்னத் தொழுது இஸ்திங்.்.பார் செய்வார். அதாவது (அஸ்தங்.்.பிருல்லாஹ் என்பது அல்லது) அஸ்தங்.்.பிருல்லாஹல் அளீமல்லதீ லாஇலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம் வ அதூபு இலைஹி என 3 முறை சொல்வது.

காரணம் ஒருவரும் இபாதத்தை நிரப்பமாய் எட்ட மாட்டார். ஆகவே (அதிலுள்ள குறைகளைப் பொறுக்கும்படி அல்லாஹ்விடம்) இஸ்தின்.:.பார் சொல்வது முஸ்தஹப். பின்பு ஆயத்துல் குர்ஸி, குல்ஹுவல்லாஹு அஹத், .:.பலக், நாஸ் ஆகிய சூராக்களை ஓதி பின் சுப்ஹானல்லாஹ் 33தடவை, அல்ஹம்துலில்லாஹ் 33 தடவை அல்லாஹு அக்பர் 33 தடவை ஓதி

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَحْدَهٗ لَا شَرِيْكَ لَهٗ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

லாஇலாஹ இல்லல்லாஹு வத்ஹஹு லா ஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷைஇன் கதீர். ஒருமுறை ஓதுவார். அல்லது அல்லாஹு அக்பரை 34 முறை ஓதி (100ஐ பூர்த்தி செய்து) லாஇலாஹ இல்லல்லாஹ் 10 முறை ஓதுவார். பின் இரு கைகளையும் நெஞ்சுக்கு நேரே உயர்த்தி முன்பின் சலவாத் ஓதி ரப்பனா ஆத்தினா போன்ற துஆக்களை ஓதுவார். பின் இரு கைகளையும் முகத்தில் தடவுவார்.

سُبْحَانَ رَبِّكَ رَبِّ الْعِزَّةِ عَمَّا يَصِفُوْنَ وَ
سَلَامٌ عَلَى الْمُرْسَلِيْنَ وَالْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

"சுப்ஹான ரப்பிக ரப்பில் இஜ்ஜ(த்)தி அம்மா யசி.:.பூன். வ சலாமுன் அலல் முர்சலீன் வல்ஹம்து லில்லாஹி ரப்பில்

ஆலமீன்" என்ற ஆயத்துகளை 3 முறை ஓதுவது பெரிய சவாபுக்குரியது.

வழமையாக ஆயத்துல் குர்ஸியோடு ஆமனர்ரசூல், ஷஹிதல்லாஹு எனத்துவங்கும் ஆயத், குலில்லாஹும்ம எனத்துவங்கும் வசனம், அதன் அடுத்த வசனம் ஆகியவற்றை ஓதுவதும், தஸ்பீஹ் ஓதிய பின்

اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَا اَعْطَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلَا رَادَّ لِمَا قَضَيْتَ وَلَا مُبَدِّلَ لِمَا حَكَمْتَ وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

அல்லாஹும்ம லா மானிஅ லிமா அ.்.(த்)தை(த்)த வலா மு.்.(த்)திய லிமா மன.்.(த்)த வலா ராத்த லிமா கழை(த்)த வலா முபத்தில லிமா ஹகம்(த்)த வலா யன்.்.பஉ தல்ஜத்தி மின்கல் ஜக்து ஓதி லாஇலாஹ இல்லல்லாஹ் 9 முறை ஓதி பத்தாவதாக லா இலாஹ இல்லல்லாஹு ஹக்கா. அலைஹா நஹ்யா வ அலைஹா நமூ(த்)து வஅலைஹா நுப்அசு இன்ஷா அல்லாஹு தஆலா கதன் ஆமினீன் என்றோதி-

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْكَائِنَاتِ، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْمَوْجُوْدَاتِ، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ اَهْلِ الْاَرْضِ وَالسَّمٰوَاتِ، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْاَوَّلِيْنَ، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْاٰخِرِيْنَ، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ

سَيِّدِ الْمُتَّقِيْنَ، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ سَيِّدِ الْمُرْسَلِيْنَ، جَزَى

اللّٰهُ عَنَّا نَبِيَّنَا مُحَمَّدًا صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ بِمَا هُوَ اَهْلُهُ

اَللّٰهُمَّ ارْضَ عَنْ سَادَاتِنَا اَبِيْ بَكْرِ نِ الصِّدِّيْقِ التَّقِيِّ، وَ

عُمَرَ الْفَارُوْقِ النَّقِيِّ، وَعُثْمَانَ ذِى النُّوْرَيْنِ الزَّكِيِّ، وَعَلِيِّ نِ

الْمُرْتَضَى الْوَفِيِّ، وَعَنِ السِّتَّةِ الْبَاقِيْنَ، وَعَنِ الْحَسَنِ وَالْحُسَيْنِ

وَعَنْ حَمْزَةَ وَالْعَبَّاسِ وَعَنِ الْمُهَاجِرِيْنَ وَالْاَنْصَارِ، وَعَنْ

كُلِّ صَحَابَةِ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَجْمَعِيْنَ

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத் சய்யிதில் காயினாத், அல்லாஹும்ம ஸல்லி அலா சய்யிதினா முஹம்மத் சய்யிதில் மவ்ஜூதாத். அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத் சய்யிதி அஹ்லில் அர்ழி வஸ்ஸமாவாத். அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத், சய்யிதில் அவ்வலீன் அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத் சய்யிதில் ஆகிரீன். அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத் சய்யிதில் முத்தகீன். அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மத் சய்யிதில் முர்ஸலீன். ஜஜல்லாஹு அன்னா நபிய்யனா முஹம்மதன் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பிமா ஹுவ அஹ்லுஹு.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

அல்லாஹும்மர்ழ அன் சாதாதினா அபீபக்ரினிஸ் கித்தீக்கித் தகிய்யி வ உமரல் ∴பாருகின் நகிய்யி வ உஸ்மான தின்நூரைன்னிஜ் ஜகிய்யி. வஅலிய்யினில் முர்தழா வ அனில் ஹஸனி வல் ஹுஸைன் வ அன் ஹம்ஜத வ அப்பாஸ். வ அனில் முஹாஜிரீன வல் அன்சார். வஅன் குல்லி சஹாப(த்)தி ரசூலில்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அஜ்மஈன்.

என்றோதி அல்லாஹும்ம சல்லி அலல்முஸ்த∴பா ஹபீபிக முஹம்மதின் அப்திக வரசூலிகன் நபிய்யில் உம்மிய்யி வஅலா ஆலிஹி வசஹ்பிஹி வசல்லம். பத்து விடுத்தம் ஓதி பின் வசல்லி அலா ஜமீஇல் அம்பியாஇ வல் முர்சலீன் வஅலா மலாயிக(த்)திகல் முகர்ரபீன் வஅலா அஹ்லி தாஅ(த்)திக அஜ்மஈன். வர்ஹம்னா மஅஹும் பிரஹ்ம(த்)திக யா அர்ஹமர் ராஹிமீன். என ஓதி லகல் ஹம்து யாரப்பு (ஓதி) யா அல்லாஹ் (3 முறை) யா ரஹ்மான் (3 முறை) யா ரஹீம் (3 முறை) அல் அமான். அல் அமான் மின் ஜவாலில் ஈமான் யா தாஇமல் ம∴ரூ∴ப், யா கதீமல் இஹ்ஸான், யா ஹாதியல் முசல்லீன் பிஹக்கி இய்யாக்க ந∴புது வஇய்யாக்க நஸ்தஈன் 3 முறை ஓதி பின் பெருமானார் பேரில், மற்ற நபிமார், ரசூல்மார்கள், ஆல், அஸ்ஹாபுகள், தாபிஈன்கள், இமாம்கள் பேரில் ∴பாத்திஹா ஓதி துஆ ஓதுவதும் குற்றமல்ல (நன்மையே).

பின் 5 நேரத்திற்கும் பொதுவான, குறிப்பான துஆக்களை ஓதுவதும் சிறந்தது.

சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

# துஆ ஓதுவதின் ஒழுக்கம்

தொழுகைக்கு வெளியே துஆ செய்வதின் அதபு யாதெனில்...

கிப்லாவை முன்னோக்கி இரு முட்டுக்காலின் மீதமா்ந்தவராக இரு கைகளையும் இரு தோள் புஜத்துக்கு அல்லது நெஞ்சுக்கு நேராக உயா்த்தி கைகளை நெஞ்சளவில் சோ்த்துக் கொள்வதும், இரு கைகளுக்கிடையில் கொஞ்சம் இடைவெளி இருப்பதும் முஸ்தஹப்.

## துஆக்கள் 4 வகை

1. **துஆ ரங்பஹ் :** ஆா்வத்தோடு, ஆசையோடு கேட்பது. அதில் இரு கையின் உள்புறத்தை வானை நோக்கி வைப்பாா்.

2. **துஆ ரஹ்பஹ் :** ஒன்றை பயந்து அதை விட்டும் காப்பாற்றும்படி கேட்பது. இதில் இரு முன் கையின் முதுகை முகத்தின் பக்கம் ஆக்குவாா்.

3. **துஆ தழா்ரு.ۛ. :** அல்லாஹுத்தஆலாவிற்கு முன் பணிவை வெளிப்படுத்தும் முகமாக கேட்பது. யாஅல்லாஹ்! நான் உனது கீழான மிகச்சாதாரணமான அடியான் என்று கூறுவது போல். இதில் சுண்டு விரலையும், மோதிர விரலையும் மடக்கி பெருவிரலையும், நடு விரலையும் வளையமிட்டு கலிமா விரல் கொண்டு சைக்கினை செய்வாா்.

4. **துஆ கு.ۛ.ப்யஹ் :** மனிதன் தன் மனதிற்குள் கேட்டுக் கொள்வது. இதில் கை உயா்த்துதல் இல்லை.

**முக்ததீ :** இமாமைத் துயா்ந்தவராவாா். அவா் கிராஅத்

ஓதக்கூடாது. வாய்மூடி கேட்பார். கிராஅத் ஓதுவது மக்ரூஹ் தஹ்ரீம். அதில் முந்தின ரக்அத் முதலே இமாமைத் துயர்ந்தவர் முத்ரிக் எனப்படுவார். அடுத்தடுத்த ரக்அத்தில் வந்து சேர்ந்தவர் மஸ்பூக் எனப்படுவார். மஸ்பூக் இமாம் சலாம் கொடுத்தபின் விடுப்பட்ட ரக்அத்களை கழாச் செய்வார். அப்போது முன்.ஃ.மரித் (தனியாக தொழுபவர்) போலவே சனா, அஊது, பிஸ்மி, கிராஅத் ஓதுவார்.

(முன்.ஃ.பரிதைப் பின்பற்றி அதாவது அவரை இமாமாக்கி தொழலாம்) மஸ்பூக்கைப் பின்பற்றி தொழ முடியாது.

இமாம், முன்.ஃ.பரித் இருவருமே மெதுவாக கிராஅத் ஓத வேண்டியதில் மெதுவாக ஓதுவர். ஆனால் சப்தமாக ஓதுவதில் இமாம் சப்தமாக ஓதுவது வாஜிப். முன்.ஃ.பரித் சப்தமாக ஓதலாம் என்றாலும் இமாமைப் போல் ஓதலாகாது (மெதுவாக ஓதுவதை விட லேசாக சப்தமாக ஓதலாம்)

## அமைதியாக ஓத வேண்டியது :

ளுஹர், அசர் மக்ரிபின் 3-ம் ரக்அத், இஷாவின் 3 மற்றும் 4ம் ரக்அத், பகலின் நபில் தொழுகைகள். அமைதியாக ஓதுவதில் குறைந்தபட்சம் தனக்கு கேட்கவேண்டும். அல்லது தன் பக்கத்தில் உள்ளவருக்கு கேட்க வேண்டும். சப்தமாக ஓதுவதின் அளவு... முந்தின ச.ஃ.ப் முழுமைக்கும் கேட்க வேண்டும்.

இரவு நபிலை இமாமாக தொழவைத்தால் சப்தமாக கிராஅத் ஓதுவார். முன்.ஃ.பரிதாக தொழுதால் சப்தமாக ஓதுவது நல்லது (எனினும் அடுத்தவருக்கு இடையூறாக இருக்கக் கூடாது) இது ஆணுக்குரிய சட்டம்.

பெண் எப்போதும், எத்தொழுகையிலும் சப்தமிடக் கூடாது. தக்பீர், தஹ்மீ∴, சலாமை இமாம் சப்தமாகச் சொல்வது சுன்னத். முக்ததியும், முன்∴பரிதும் தனக்கு (மட்டும்) கேட்கும்படி சொல்வர்.

## ஜமாஅத் தொழுகை விளக்கம்

ஜமாஅத் தொழுகை ஆணுக்கு சுன்னத் முஅக்கதா. வாஜிபென்பது உறுதியான கருத்தாகும். ஹதீஸில் வந்துள்ளது. உங்களிலொருவர் தனித்து தொழுவதை விட ஜமாஅத்தாக தொழுவது 25 மடங்கு சிறப்பானது. தக்க காரணமின்றி ஜமாஅத்தை விடுவது சரியாகாது. (தம்பகுதியின்)பள்ளியில் ஜமாஅத்தை விட்டால் வேறு பள்ளிக்கு ஜமாஅத்துக்காக போக வேண்டிய அவசியமில்லை.

ஒரு முக்ததியிருந்தாலும் ஜமாஅத்தாக தொழலாம். அவர் புத்தி தெளிவுள்ள சிறுபிள்ளையாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, வீட்டிலானாலும் சரி.

## இமாமத்தின் ஷரத்துகள் 6

1. இஸ்லாம்.
2. புலூகு (பருவ வயதடைதல்)
3. அக்லு (புத்தி தெளிவு)
4. ஆணாக இருப்பது
5. தொழுகை நிறைவேறுமளவு பாடமிட்டு ஓதுவது
6. எழுத்துக்களை மாற்றி விடும்படியான, தொழுகையை ∴பசாதாக்கி விடும்படியான "கொண்ணல்" இல்லாமலிருப்பது (திக்குவாயாக இல்லாமலிருப்பது).

சிறுபிள்ளை இமாமாக இருந்தால் புலூகு ஷா்தல்ல. நோய் பிரச்சினையல்ல.

எனினும் இமாமின் நிலை முக்ததீயின் நிலையை விட பலமாயிருக்க வேண்டும். அல்லது ஒத்திருக்க வேண்டியது ஷா்த். ஆக சிறு பிள்ளைகளுக்கு சிறுபிள்ளை இமாமத் செய்யலாம். (உட்கார்ந்து தொழுவது போன்ற) தங்கடமுள்ளவா்களுக்கு அது போன்ற தங்கடமுள்ளவா் இமாமத் செய்யலாம்.

## முக்ததீக்கான ஷரத்துகள் 10

1. இமாமைத் தொடா்வதை நிய்யத் செய்ய வேண்டும்.

2 மற்றும் 3. இருவரின் இடமும், தொழுகையும் ஒன்றாக இருக்க வேண்டும்.

4. முக்ததீயை இமாம் முக்ததீயாக நிய்யத் செய்ய வேண்டும். மறு மத்ஹபிலுள்ளவா் முக்ததீயுடைய நிய்யத்தின்பேரில் பா்ளுகளில் பேணிக் கொண்டால் இமாமைப் பின்பற்றுவது ஆகும். தன் மத்ஹபு இமாமைப் பெறாவிட்டால் (அப்போது) தனியாக தொழுவதை விட மறு மத்ஹபு இமாமைப் பின்பற்றுவது சிறப்பு.

5. தொழுகையில் பெண்ணின் பாதம் இமாமின் எந்த உறுப்புக்கும் நேர்படாமலிருக்க வேண்டும்.

6. முக்ததீ தன் புறங்காலைக் கொண்டு இமாமின் புறங்காலை முந்தாமலிருப்பது.

7. இமாமின் திரும்புதல்களை அறிவது இமாமின் சப்தம் கேட்டாலும் அல்லது முக்ததிகளில் சிலரை கண்டாலும் போதுமாகும்.

8. இமாம் முகீமா? முஸா.ஃ.பிரா? என தொழுது முடியும் முன் அல்லது தொழுத பின்பாவது அறிய வேண்டும்.

9. ருக்னு: ஷர்த்துகளில் முக்ததீ இமாமைப் போலவோ, அல்லது அதற்கு கீழேயே இருக்க வேண்டும். (அதாவது நின்று தொழ வைப்பவரை நின்றவாரோ, அமர்ந்தவாரோ முக்ததீ பின்பற்றலாம்.

அமர்ந்து தொழுபவரை நின்று தொழுபவர் பின்பற்றக் கூடாது. ருகூ.ஃ., சுஜூது செய்பவரை அவ்வாறே செய்பவரும், சைக்கினையாய் தொழுபவரும் பின்பற்றலாம். சைக்கினையாய் தொழுபவரை ருகூ.ஃ., சுஜூது செய்பவர் பின்பற்றறக் கூடாது).

## இமாமத்திற்கு தகுதியானவர்

மஹல்லா இமாம், அவர் இல்லாவிட்டால் இமாமத்தின் சட்ட, திட்டங்களை நன்கு தெரிந்தவர். யாவரும் தெரிந்தவராக இருந்தால் நன்றாக ஓதத்தெரிந்தவர், அடுத்து மிக பேணுதலுள்ளவர், அடுத்து அதிக வயதுள்ளவர், அடுத்து வம்சத்தால் சிறப்பானவர், அடுத்து தூய்மையான ஆடை அணிந்துள்ளவர். எல்லோரும் இச்சிறப்புகளைப் பெற்றிருந்தால் சீட்டு போடப்படும். அல்லது மக்கள் விரும்புபவர். வீடிருப்பவர் மற்றவரைக் காண ஏற்றம்.

## யார் இமாமத் செய்வது மக்ரூஹ்?

பயலை .ஃபாசிக்கானவர் (விபச்சாரம் புரிந்து பிள்ளை பெற்றவர் போல அவர் ஆலிமாயிருந்தாலும் சரி), கிராமவாசி,

பார்வையற்றவர், விபச்சாரத்தில் பிறந்தவர்.

எனினும் அவர்களாக இமாமத்துக்கு முந்திவிட்டால் கூடும். இதனால் ஜமாஅத்தின் சவாபில் குறை வராது. தனித்து தொழுவதை விட இத்தகைய நபர்களுக்குப் பின்னால் (ஜமாஅத்தின் சவாபுக்காக) தொழலாம்.

## ச.ஃ.ப் நிற்பதின் விளக்கம்

முக்ததீ ஒருவர் மட்டுமிருந்தால் அவர் ஆணாகவோ, சிறுபிள்ளையாகவோ இருந்தால் இமாமின் வலது பக்கம் இடைவெளியின்றி முந்தாமல், பிந்தாமல் புறங்காலை சரியாக்கி நிற்பார். இடப்புறமோ, பின்னாலோ நிற்பது மக்ரூஹ். ஒருவருக்கும் மேற்பட்டோர் இருந்தால் பின்னால் நிற்பர். முதலில் ஆடவர்கள் அடுத்து சிறுவர்கள் அடுத்து பெண்கள். பெண்களை ஜமாஅத்தை விட்டும் தடுக்கப்படும். ஒரே ஒரு சிறுவர் மட்டும் இருந்தால் அவர் ஆண்களுடன் நிற்பார்.

ச.ஃ.ப்பில் ஒருவரோடு ஒருவர் சேர்ந்து இடைவெளியை அடைத்து நிற்பர். இமாமும் இதை ஏவுவார். ச.ஃ.ப்பில் சரியாய் சேர்ந்து நிற்பீர். உங்கள் இதயங்கள் சேர்ந்திடும் என, உங்களுக்கு ரஹ்மத் செய்யப்படும் என ஹதீஸில் வந்துள்ளது. இமாமுக்கு நேரே நிற்பவர் சிறப்பிற்குரியவராக இருக்க வேண்டும்.

**ஹதீஸில் வருகிறது..** இமாமுக்கு நேரே நின்று தொழுபவருக்கு நூறு தொழுகை (சவாபு), வலது பக்கம் நின்று தொழுபவருக்கு 75 தொழுகை (சவாபு), இடது பக்கம்

நின்று தொழுபவருக்கு 50 தொழுகை (சவாபு, மற்ற சபப்புகளில் நின்று தொழுபவருக்கு 25 தொழுகை (சவாபு உண்டு.))

தக்பீர் தஹ்ரீமாவிலேயே இமாமைச் சேர்வது மிக சிறப்பிற்குரியது. 40 முறை மவ்த்தாவதை விட 40 முறை கியாமத்தின் திடுக்கத்தை உணர்வதை விட கடுமையான விசாரணை நாளில் தக்பீர் தஹ்ரீமாவில் பேணுதலாயிருந்தவர் கைசேதப்படார் என ஹதீஸ் உள்ளது. குறைந்தபட்சம் முந்திய ரக்அத்தை அடைவதன் மூலமாகவும் அந்த பாக்யம் உண்டென சொல்லப்பட்டுள்ளது. எனினும் அதற்காக ஓடிப்போய் சேரக் கூடாது.

இகாமத் சொல்லப்பட்டால் தொழ பயபக்தியோடு, ஒழுக்கத்தோடு நடந்து செல்வீர். பெற்றுக்கொண்டதை தொழுது, மிச்சத்தை நிரப்பமாக்கி வையுங்கள் என்று ஹதீஸில் வந்துள்ளது. மேலும் தொழுகைக்காக ஓடுவதை பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தடுத்துள்ளார்கள்.

## வித்ரு, சுன்னத்துக்களின் விளக்கம்

வித்ர், சுன்னத்தின் அனைத்து ரக்அத்திலும் கிராஅத் ஃபர்ளு. வித்ர் 3 ரக்அத். 3ம் ரக்அத்தின் ருகூவுக்கு முன் இரு கைகளையும் தக்பீர் தஹ்ரீமாவில் உயர்த்துவது போல் உயர்த்தி தக்பீர் சொல்லி பின் கை கட்டி குனூத் ஓதி ருகூஃ செய்வார். ஆனால் மஸ்பூக் இமாமுடன் மட்டுமே குனூத் ஓதுவார்.

ஃபஜ்ரில் ஷாஃபி இமாமைத் துயர்பவர் குனூத் ஓதமாட்டார். இரு கையையும் கீழே விட்டு மௌனமாய் நிற்பார். வித்ரில் சலாம் சொன்ன பின் "சுப்ஹானல் மலிகில் குத்தூஸ் 3 முறை சொல்லி மூன்றாம் முறை சப்தத்தை உயர்த்திச் சொல்லி ரப்புல் மலாயிக(த்)தி வர்ருஹ் என்றும் அதனுடன்

اَللّٰهُمَّ اَعُوْذُ بِرِضَاكَ مِنْ سُخْطِكَ

وَبِمُعَافَاتِكَ مِنْ عُقُوْبَتِكَ وَاَعُوْذُ بِكَ مِنْكَ لَا اُحْصِيْ ثَنَآءً

عَلَيْكَ اَنْتَ كَمَا اَثْنَيْتَ عَلٰى نَفْسِكَ

அல்லாஹும்ம அஊது பிரிழாக மின் சுக்திக வ பிமுஆஃபதிகமின் உகூபதிக வ அஊதுபிக மின்க லா உஹ்ஸீ சனாஅன் அலைக அன்த கமா அஸ்னை(த்)த அலா நஃப்ஸிக என்றும் பெருமானார் சொன்னதாக ஹதீஸில் வருகிறது.

வித்ருக்குப்பின் இரண்டு சஜ்தா செய்வது (அதாவது உட்கார்ந்தவாறு இரு ரக்அத் தொழுவது) பாத்தில் (சரியானதல்ல. அதை பெருமானார் வழமையாக செய்து வந்ததாக தெளிவான ஆதாரமில்லை.)

சுன்னத்தான தொழுகைகள் எது எதுவென்பதை முன்பே பேசிவிட்டோம். (பள்ளிக்குள் நுழைந்ததும்) தஹிய்யதுல் மஸ்ஜித் (மஸ்ஜிதின் காணிக்கையாக) இரு ரக்அத் தொழுவது சுன்னத். அதை அமரும் முன் தொழுவது சிறந்தது. அன்றி மக்ருஹான (தொழக் கூடா நேரம்

பள்ளியில்) புகுந்தால் அதைத் தொழ மாட்டார். மாறாக திக்ர், தஸ்பீஹ், சலவாத் ஓதுவார். வுளு செய்தபின், குளித்தபின் ஈரம் உளரும்முன் இரு ரக்அத் தொழுவது முஸ்தஹபு. எனினும் இதுவோ, தஹிய்யதுல் மஸ்ஜிதோ தனிப்பட்ட தொழுகை கிடையாது மற்ற பர்ளு, சுன்னத்துகளைச் செய்தாலே இதன் நன்மை கிடைத்துவிடும்.

**ளுஹா :** தொழுகை முஸ்தஹப், அதை பொழுது உயர்ந்தது முதல் (8 மணிமுதல்) மதியத்திற்கு கொஞ்சம் முன்வரை (11.30 வரை) தொழலாம். அதில் சிறந்தது பகலில் 4ல் 1க்குப் பின்னால் (9மணிக்கு மேல்) தொழுவது. அதில் சூரா வஷ்ஷம்ஸ், வழ்ழுஹா ஓதுவது சிறப்பு. அது 4 ரக்அத் முதல் 12 ரக்அத் வரை. 2ரக்அத் ஏற்றம்.

**தஹஜ்ஜுத் :** தொழுகை சுன்னத். குறைந்தது 2 ரக்அத் நடுத்தரம் 4. அதிகம் 8. அதன் சிறப்பு அநேகமுண்டு. தஹஜ்ஜுத்தை இரவை 6 பங்காக்கி அதன் 4 அல்லது 5ம் பங்கில் தொழுவது மிகச்சிறந்தது. (அதாவது நடுநிசி 12 மணிமுதல் 4 மணிக்குள் தொழுவது ஏற்றம்.)

**பயணத் தொழுகை :** இரு ரக்அத்தும், பயணத்திலிருந்து திரும்பியதும் வந்து 2 ரக்அத் தொழுவதும் முஸ்தஹப். பயண தொழுகையை வீட்டிலும், வந்த பின் பள்ளியிலும் தொழுவார்.

**சலா(த்)துல் வாலிதைன் :** இரு ரக்அத் முஸ்தஹப். அது வெள்ளிக் கிழமை இரவு மங்ரிப், இஷாவுக்கிடையில் தொழுவது. ஒவ்வொரு ரக்அத்திலும் பாத்திஹாவுக்குப் பின் ஆயத்துல் குர்ஸி 15 முறை, குல்ஹுவல்லாஹ் 15 முறை, சலவாத் 20 முறை ஓதி தொழுது அதன் சவாபை நன்றியோடு பெற்றோருக்கு ஈசால் சவாபு செய்வார்.

**தஸ்பீஹ் தொழுகை :** 4 ரக்அத் முஸ்தஹப். அதை மக்ரூஹல்லா பகல், இரவு எப்போதும் தொழலாம். அதை தினம், தினம் அல்லது வாரவாரம் அல்லது மாதமாதம் அல்லது குறைந்தது ஆயுளில் ஒருமுறையாவது தொழுவார். அதில் “சுப்ஹானல்லாஹி வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பரை“ சனாவுக்குப்பின் 15 முறை, கிராஅத்துக்குப் பின்பும், ருகூ. விலும், சிறுநிலையிலும், இரு சுஜூதிலும், சிறு இருப்பிலும் 10 முறை சொல்வார். ருகூ., சுஜூதில் அதன் தஸ்பீஹ்களுக்குப் பிறகு சொல்வார். ஒரு ரக்அத்திற்கு 75 முறை வீதம் 4 ரக்அத்துக்கு 300 முறை.

## தராவீஹ் தொழுகை விபரம்

ஆண், பெண் இருவருக்கும் சுன்னத் முஅக்தா, 10 சலாம் கொண்டு 20 ரக்அத் தொழுவது. அதை ஜமா அத்தாக தொழுவது சுன்னத் கி.பாயா. ரமழானில் மட்டும் (தராவீஹிற்குப்பின்) வித்ரை ஜமாஅத்தோடு தொழுவார். தராவீஹின் வக்தும் இஷாவின் வக்தே. எனினும் இஷா

தொழுத பின்பே தராவீஹ் தொழப்படும். அதில் 1 முறை குர்ஆனை ஓதி கதம் செய்வது சுன்னத். மக்களுக்கு சிரமம் என்பதற்காக அதை விடப்படாது. எனினும் நம் காலத்தில் மக்களுக்கு சிரமம் ஏற்படாதவாறு செய்வதே நல்லது. அதில் ஒவ்வொரு 4 ரக்அத்களுக்கிடையில் 4 ரக்அத் நேரம் இருப்பது முஸ்தஹப். அவ்வாறிருக்கும் போது தஸ்பீஹ் ஓதலாம், குர்ஆன் ஓதலாம், மௌனமாய் இருக்கலாம் தனித்து (வேறு தொழுகைகளும்) தொழலாம். (எனினும் யாவரும் சேர்ந்து அழகாக, பயபக்தியோடு தஸ்பீஹ் ஓதும் சிறந்த வழமை நமதூர்களில் இருப்பது சிறப்பிற்குரியது. அச்சிறப்பிற்குரிய விஷயத்தில் பங்கு பெறுவதும், முடிந்தவரை அதற்கு இடையூறு ஏற்படா வண்ணம் நடந்து கொள்வதும் நல்லது).

## தவறிய தொழுகைகளை கழா செய்வதின் விளக்கம்

தப்பி விட்ட தொழுகைக்கும், வக்த் தொழுகைக்குமிடையில் தர்தீபு (வரிசைக்கிரமமாக செய்வது) ஃபர்ளு. ஆகவே ஒரு தொழுகை தவறிவிட்டால் அதை (பின்வரும்) வக்த் தொழுகையை விட முற்படுத்துவார். அது வித்ரானாலும் சரி. ஆக வித்ர் தொழவில்லையென்ற நிய்யத்துடனே ஃபஜ்ர் (தொழக்) கூடாது. இது போல் பல நேரத்தொழுகை தப்பி விட்டாலும் அவற்றை தர்தீபாக கழா செய்தபின் வக்தை (அந்த நேர உரிய தொழுகையை அதபாக) தொழுவார். ஆனால் தவறிய தொழுகைகள் வித்ரைச்

சேர்க்காமல் ஆறுவரை (அல்லது அதற்கு மேல்) வந்து விட்டாலோ அல்லது முறிந்து விட்டாலோ அல்லது வக்த் முடியும் நேரமாகி விட்டாலே தர்தீபு விழுந்து விடும்.

தக்க காரணமின்றி தொழுகையை கழாவாக்குவது பெரும்பாவமாகும். கழா செய்தாலும் (கடமை நீங்கும்) பாவம் நீங்காது. எனினும் தவ்பாவால், ஹஜ்ஜால் பாவம் நீங்கும். ஆகவே தொழுகையை அதபாக (உரிய நேரத்தில்) நிறைவேற்றுவதில் மிக்க பேணுதல் அவசியம். ஆனபோதும் பயணி திருட்டையோ, பாதை மாறிவிடுவதையோ பயந்தால், கர்ப்பிணி பிரசவத்தால், (இது போன்ற தவிர்க்க முடியாத காரணத்தால்) தொழுகையை கழாவாக்குவது (பிற்படுத்துவது) கூடும்.

ஒருவர் தப்பிவிட்ட தொழுகை இருக்கவே மரணம் வந்துவிட்டால் அதற்காக தெண்டம் (பரிகாரம்) தரும்படி வசிய்யத் செய்ய வேண்டும்.

அவ்வாறு வசிய்யத் செய்தால் அவரது சொத்தில் 3ல் 1 பங்கில் ஒவ்வொரு தொழுகைக்கும் ஒவ்வொரு அரை மரைக்கால் மணிகோதுமை கொடுக்கப்படும். வித்ர், நோன்புக்கும் இப்படியே.

# ஜும்ஆ தொழுகை விளக்கம்

**ஒருவர் மீது ஜும்ஆ கடமையாக ஷர்த்துகள் 9.**

1. ஆண் மகனாயிருத்தல்.
2. சுதந்திரமுள்ளவராக இருப்பது.
3. பட்டணத்தில் (ஜும்ஆ நடக்கும் ஊரில்) முகீமாக இருப்பது.

4. (தொழ போக முடிந்தளவு) உடல் நலத்துடனிருப்பது.
5. பார்வை இருப்பது.
6. நடந்து செல்ல திராணி இருப்பது.
7. அநீதன் பற்றிய பயமில்லாதிருப்பது.
8. கடுமையாய் மழை இல்லாமலிருப்பது.
9. சிறையிலில்லாது வெளியிலிருப்பது.

## ஜும்ஆ கடமையாக ஷர்த்துகள்-7.

1. இடம் பட்டணமாக அல்லது அதன் முற்ற வெளியாக இருப்பது. பட்டணம் (நதரம்) என்பது அங்கு பல பள்ளிகள் இருந்து அங்குள்ள பெரிய பள்ளி அங்குள்ள ஜும்ஆ கடமையானவர்களுக்கு தொழ போதுமானதாயிருக்க வேண்டும்.

ஆனபோதும் கடைகள், சந்தையுள்ள பெரிய சிற்றூரில் ஜும்ஆ பள்ளி கட்டி ஜும்ஆ தொழ இஸ்லாமிய அதிகாரி அனுமதி தந்தால் கூடும். இல்லாவிட்டால் அங்கு ளுஹர் தொழப்படும். எனினும் காஜியோ, கதீபோ,மிம்பரோ இல்லாத சிறிய கிராமங்களில் ஜும்ஆ கூடாது.

2. ஜும்ஆ தொழுகையை இஸ்லாமிய கலீபாவோ, மன்னரோ, அல்லது அவரது நாயிபோ ஏற்பாடு செய்ய வேண்டும்.

இஸ்லாமிய ஆட்சியல்லா ஊர்களில் ஜும்ஆ , ஈதை அந்தந்த ஊர்வாழ் முஸ்லிம்கள் நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும் (வாஜிப்). முஸ்லிம்கள் சேர்ந்து யாரை காஜியாக ஏற்றுக்கொள்வரோ அவர் காஜியாய் ஜும்ஆ தொழ வைப்பார். அவரை தேர்வு செய்வது ஊர்வாசிகள் மீது வாஜிப்.

3. ளுஹர் வக்த்.

4. அந்த வக்துக்குள் குத்பா ஓதுவது. இரு குத்பா ஓதுவதும், இரண்டுக்குமிடையில் 3ஆயத் ஓதும் நேரம் அமர்வதும், சுத்தமும், அவ்ரத்தை மறைப்பதும் குத்பாவை நின்றவாறு ஓதுவதும் சுன்னத்.

5. தொழுகைக்கு முன் குத்பா ஓதுவது.

6. ஜமாஅத் குறைந்தது இமாமைத்தவிர 3 ஆடவர்கள்.

7. பொது அனுமதி.

ஜும்ஆ தொழ முடியா உத்ர் (தங்கடம்) உள்ளவரோ, சிறைக் கைதியோ, பயணியோ ஜும்ஆ நாளில் நகரத்தில் இருந்தால் ளுஹரை ஜமாஅத்தாக தொழுவது மக்ரூஹ் தஹ்ரீம் (அவர்கள் ஜும்ஆ தொழவே முயற்சிக்க வேண்டும் அல்லது ளுஹரை தொழுது கொள்ள வேண்டும்).

இமாம் மிம்பரில் ஏறிய பின் குத்பா முடியும் வரை தொழுவதும், பேசுவதும் விடப்பட வேண்டும்.

தொழுகையில் கூடாத யாவும் ஜும்ஆவிலும் கூடாது. குத்பாவைக் கேட்பதும், மௌனமாயிருப்பதும் வாஜிப். அவர் அருகே இருந்தாலும் சரி தூரமாக இருந்தாலும் சரி.

முஅத்தின் முந்தின அதானைச் சொன்னால் (அதுமுதல் ஜும்ஆ முடியும்வரை) வியாபாரம், கொடுக்கல், வாங்கல் போன்றதை விட்டு விட்டு ஜும்ஆ தொழக்கிளம்ப வேண்டியது வாஜிப். அதேசமயம் பயபக்தியோடு, ஒழுக்கமாக நடந்து போவார்.

பள்ளியில் நுழையும்போது..

اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنْ اَقْرَبِ مَنْ تَقَرَّبَ اِلَيْكَ

அல்லாஹும்மஜ்அல்னீ மின் அக்ரபி மன்(த்)த கர்ரப இலைக என்பார். குத்பாவைக் கேட்க இமாமுக்கு அருகில் செல்வார். கதீப் மிம்பரில் இருக்க அவருக்கு முன் முஅத்தின் இரண்டாம் பாங்கைச் சொல்வார். குத்பா முடிந்தபின் இகாமத் சொல்லி ஜும்ஆ தொழுவர். ஒரு நகரில் பல இடத்தில் (பல பள்ளிகளில்) ஜும்ஆ தொழுவது கூடும்.

ஜும்ஆ நேரம் முடிந்துவிட்டதாக சந்தேகம் எழுந்தாலோ அல்லது ஒரு ஊரில் ஜும்ஆ நடக்கிற ஊர்தானா என்பது பற்றி சந்தேகம் எழுந்தாலும் முந்கின சுன்னத் 4 ரக்அத் தொழுது, ளுஹர் தொழுது பின் சுன்னத்துல் வக்தியா 2 ரக்அத் தொழுவார்.

இமாம் மிம்பரில் ஏறியதிலிருந்து தொழுகை முடியும்வரை துஆ ஒப்புக்கொள்ளப்படும் நேரமாகும். ஆனால் உள்ளத்தளவில் உதடசைக்காமல் துஆ செய்வார். இன்னும் (துஆ ஒப்புக்கொள்ளப்படும் நேரம்) ஜும்ஆவின் இறுதி நேரமென்றும் வந்துள்ளது. ஆக இரண்டு வக்திலும் துஆச் செய்வார்.

ஜும்ஆவுக்காக குளிப்பது சுன்னத். நறுமணம் (ஆல்கஹால் கலந்திடாத அத்தர் வகைகள் மட்டும்) பூசுவதும், தூய்மையான, அழகிய ஆடை உடுத்துவதும், நகங்களைவதும் (மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட,

தேவையில்லாத) முடிகளைக் களைவதும், பள்ளிக்குள் (ஊதுபத்தி, சாம்பிராணி போன்ற வாசனைப்) புகை போடுவதும், ஜும்ஆவுக்காக ஜவாலுக்கு முன்பே (பள்ளிக்கு) போவதும், கதீபு (குத்பா ஓத) வரும் வரை இபாதத்தில் கவனம் செலுத்துவதும், கஹ்ஃப் சூரா ஓதுவதும் அதாபாகும். ஜும்ஆ தொழுது முடிந்தபின் பேசும்முன் ஃபாத்திஹா, இக்லாஸ், ஃபலக், நாஸ் சூராக்களை ஏழு ஏழு விடுத்தம் ஓதுவதால் மறு ஜும்ஆ வரை அவர் காக்கப்படுவார். ஷைத்தானின் ஊசாட்டங்களிலிருந்து பாதுகாக்கப்படுவார். (மேலும் ஒவ்வொரு முறை ஜும்ஆ தொழுதபின் கீழ்வரும் துஆவை ஓதி வந்தால் அல்லாஹ் அவரை வறுமையிலிருந்து காத்து சீமானாக்கி வைப்பான்.

اَللّٰهُمَّ يَا غَنِيُّ يَا حَمِيْدُ يَا مُبْدِئُ يَا مُعِيْدُ يَا رَحِيْمُ يَا وَدُوْدُ
اَغْنِنِيْ بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ وَبِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ

"அல்லாஹும்ம யாகனிய்யு யாமுப்திஉ யாமுஈது யா ரஹீமு யா வதூது அங்னினீ பிஹலாலிக அன் ஹராமிக வபிஃபழ்லிக அம்மன் சிவாக்).

## இரு பெருநாள் தொழுகை விளக்கம்

இரு பெருநாள் தொழுகையும் ஜும்ஆ கடமையானவர் மீது ஜும்ஆவின் ஷர்த்துகளில் குத்பாவைத்தவிர மற்ற ஷர்த்துகளைக் கொண்டு வாஜிபானதாம்.

நோன்பு (∴பித்ர்) பெருநாளில் தொழச் செல்லும் முன் இனிப்பான பண்டத்தை ஒற்றைப் படையாய் உண்பதும், மிஸ்வாக் செய்வதும், குளிப்பதும், நறுமணம் பூசுவதும் தூய அழகிய உடையணிவதும், ∴பித்ரா வாஜிபை நிறைவேற்றுவதும், பின் நடந்தவாறு தொழுமிடம் செல்வதும் முஸ்தஹப்பு. பாதையில் மெதுவாக தக்பீர் ஓதிச் செல்வார். இமாம் தொழுகையை ஆரம்பித்தால் தக்பீரை முடிப்பார். எனினும் எவராவது சப்தமாக தக்பீர் சொன்னால் அதைத் தடுக்கப்படாது. பெருநாள் தொழுகைக்கு முன் வீட்டிலோ, தொழுமிடத்திலோ நபில் தொழுவது மக்ரூஹ். தொழுதபின் தொழுமிடத்தில் தொழுவது மக்ரூஹ். வீட்டில் தொழுவது மக்ரூஹல்ல. எனினும் அவாம்கள் (பொதுமக்கள்) தொழுதால் தடுக்கப்படாது.

## பெருநாள் தொழுகையின் வக்தாவது

பொழுது (சூரியன்) ஒரு வல்லிய பரிமாணத்துக்கு உயர்ந்தது முதல் மதியம் (இஷ்ராக் நேரம் முதல் தொழக் கூடா நேரம் ஆரம்பமாகும் முன்பு)வரை. ஆனால் தொழ ஆரம்பித்து மதியம் (தொழக் கூடா நேரம்) வந்து விட்டால் தொழுகை ∴பசாதாகி விடும்.

இமாம் ஜமாஅத்தோடு 2 ரக்அத் தொழுவார். இமாமும், ஜமாஅத்தும் பெருநாள் தொழுகையை நிய்யத் செய்து தக்பீர் தஹ்ரீமா சொல்லி சனா ஓதி பின் 3 தக்பீர்களுக்கிடையில் கையைக் கட்டாமல் விட்டு விடுவர். இடையே 3 தஸ்பீஹ் நேரம் அமைதியாய் நிற்பர். பின்

இமாம் அஊது, பிஸ்மி (மெதுவாக) ஓதி ஃபாத்திஹா சூரா ஓதி, பின் சூரா அஃலா ஓதுவார். அது முஸ்தஹப். இரண்டாம் ரக்அத்திற்கு எழுந்து பின் பஸ்மலா சொல்லி ஃபாத்திஹா சூரா ஓதி சூரா ஹல்அதாக ஓதுவது முஸ்தஹப். ஜும்ஆவைப் போலவே. பின் யாவரும் முந்தின ரக்அத் போலவே 3 தக்பீர் கூறுவர். பின் ருகூஃவின் தக்பீர் கூறி ருகூ. செய்வர். தொழுதபின் இமாம் இரு குத்பா ஓதுவார்.

ஹஜ் பெருநாள் தொழுகையும் ரமழான் பெருநாள் தொழுகை போலவே. எனினும் தொழுதபின் சாப்பிடுவது (குறிப்பாக குர்பானி இறைச்சி சாப்பிடுவது) ஏற்றம். அவர் குர்பானி கொடுக்காவிட்டாலும் சரி. முன்பே சாப்பிட்டால் மக்ரூஹல்ல. இதில் தொழுமிடம் செல்லும் போது சப்தமாக தக்பீர் ஓதிச் செல்வர்.

## அய்யாமுத் தஷ்ரீக் தக்பீர்

அரஃபா நாள் ஃபஜ்ர் முதல் அய்யாமுத்தஷ்ரீகின் கடைசி நாளான பிறை 13ன் அசர் வரை ஒவ்வொரு ஃபர்ளு தொழுகைக்குப்பின் தக்பீர் ஒரு முறை வாஜிப். அதிகம் கூறுவது முஸ்தஹப்.

اللهُ أَكْبَرُ اللهُ أَكْبَرُ لَا إِلٰهَ إِلَّا اللهُ وَاللهُ
أَكْبَرُ، اللهُ أَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ

அது “அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர், லாஇலாஹ இல்லல்லாஹு அல்லாஹு

அக்பர் அல்லாஹு அக்பர் வலில்லாஹில் ஹம்து" பெருநாள் தொழுகைக்குப்பின் தக்பீர் சொல்வது (கூடும்) குற்றமல்ல. தக்பீரை இமாம் விட்டாலும் ம.்.மூம் சொல்வார்.

## சதக(த்)துல் ∴.பித்ர்

தன் அசலான தேவைகளுக்குப்போக மிச்சமாய் ஜகாத்தின் நிஸாபளவு (பணங்காசு) செல்வமுடையவர் மீது (தன் செலவில் வாழும் தன் ) குடும்பத்திற்கும் சேர்த்து ∴.பித்ர் சதகா தர வேண்டியது வாஜிப். அதற்கு (ஜகாத்தைப் போல்) வருடம் பூர்த்தியாக வேண்டிய அவசியமில்லை. தம் மனைவி, மக்கள் பேரில் சொத்திருந்தால் அதிலிருந்து அவர்கள் பேரில் கொடுப்பார்.

∴.பித்ராவாகிறது மணி கோதுமை அரை மரைக்கால் அல்லது பேரித்தம்பழம், தொளி கோதுமை, கொடி முந்திரி ஏதேனும் ஒரு மரைக்கால். பொருளை கொடுப்பதை விட அதன் கிரயத்தைக் கொடுப்பது சிறந்தது.

∴.பித்ரா பெருநாள் கிழக்கு வெளுக்கும்போது வாஜிபாகும். அதற்கு முன் மரணித்தவர் மீது அல்லது அதன்பின் பிறந்தவர் மீது வாஜிபில்லை. அதை கிழக்கு வெளுத்தபின் தொழச் செல்லும் முன் கொடுப்பது முஸ்தஹப். (அதற்கு முன்பே கொடுத்தாலும் கூடும்.)

பலருடைய சதகாவை ஒரு முஸ்லிம் ஏழைக்கு கொடுப்பது எப்படி கூடுமோ அதே போல ஒருவரது சதகாவையும் பல முஸ்லிம் ஏழைகளுக்கு வழங்குவதும் கூடும்.

(கா.∴.பிருக்கோ) திம்மீ கா.∴.பிருக்கோ கொடுக்கப்படாது.

# குர்பானியின் சட்டம்

∴.பித்ர் சதகா கடைமையாகுவது போலவே குர்பானியும் கடமையாகும். அது (துல்ஹஜ் பிறை) 10ம் நாள் கிழக்கு வெளுக்கும் போது வாஜிபாகும்

குர்பானி பிறை 10, 11, 12ன் மாலை நேரம் சூரிய அஸ்தமனத்திற்கு முன்பு வரை கொடுக்கலாம். முதல் நாள் மிகச் சிறந்தது.

சிறுபிள்ளைக்கென சொத்திருந்தால் அவர் பேரிலும் கொடுக்கப்படும்.

(பெருநாள் தொழுகை தொழப்படும்) ஊரில் தொழுகைக்கு முன் குர்பானி கொடுத்தால் கூடாது. மற்ற ஊர்களில் கிழக்கு வெளுத்தது முதலே தரலாம்.

குர்பானிப் பிராணி பெரிய கொம்புள்ளதாக, உறுப்புகள் நல்ல நிலையில் உள்ளதாக, பார்வையுள்ளதாக, நல்ல, கொழுத்த கிடாவாய் தெரிவு செய்யப்படும்.

குருடானது, ஒரு கண் இல்லாதது, சொறி பிடித்தது, ஆக மெலிந்தது, நடக்கத்தெம்பில்லாதது, நொண்டியானது, கர்து, வாய்,கண், பித்தட்டு என உறுப்புகளில் ஏதேனுமொன்றில் மிகுதம் போய் விட்டது, பல்லில்லாததை குர்பானி தர மாட்டார். விரையடித்ததை (காயடிக்கப்பட்டதை), பைத்தியம் பிடித்ததை குர்பானி கொடுக்கலாம். கூடும்.

குர்பானிக் கிடாய் ஒரு வருடம் பூர்த்தியானதாய் இருக்க வேண்டும். எனினும் செம்மறிக் கிடாய் ஆறுமாதம் பூர்த்தியாயிருந்தாலும் போதும்.

குர்பானி இறைச்சியை தானும் சாப்பிட்டு, சொந்த, பந்தங்கள், ஏழை, எளியவர்க்கும் கொடுப்பார்.

அதை சேமித்து வைத்துக்கொள்வதும் கூடும். 3ல் 1 பங்குக்கு குறையாமல் சதகா செய்வது முஸ்தஹப். அதன் தோலை சதகா செய்வார். அல்லது வீட்டுத் தேவைக்கு பயன்படுத்தலாம். விற்கக் கூடாது.

தனக்குத் தெரிந்தால் தானே அறுப்பது சிறப்பு. கிடாயை பவ்யமாக இழுத்து வந்து தனக்கு ஃபித்யா (பகரம்) செய்வதாக எண்ணி, தூய்மையாக நிய்யத் செய்து கிப்லா நோக்கி-

إِنِّي وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِي فَطَرَ السَّمٰوٰتِ

وَالْأَرْضَ عَلٰى مِلَّةِ إِبْرَاهِيْمَ حَنِيفًا وَّمَا أَنَا مِنَ الْمُشْرِكِيْنَ

إِنَّ صَلَاتِيْ وَنُسُكِيْ وَمَحْيَايَ وَمَمَاتِيْ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ

لَا شَرِيْكَ لَهُ وَبِذٰلِكَ أُمِرْتُ وَأَنَا مِنَ الْمُسْلِمِيْنَ اَللّٰهُمَّ هٰذِهِ

مِنْكَ وَلَكَ بِسْمِ اللّٰهِ اَللّٰهُ أَكْبَرُ

"இன்னீ வஜ்ஜஹ்(த்)து வஜ்ஹிய லில்லதீ ஃப(த்)தரஸ் சமாவாத்தி வல்அர்ழ அலா மில்ல(த்)தி இப்ராஹீம ஹனீஃபா. வமா அன மினல் முஷ்ரிகீன், இன்ன சலா(த்)தீ வ நுசுகீ வமஹ்யாய வமமா(த்)தீ லில்லாஹி

ரப்பில் ஆலமீன். லாஷரீகலஹூ வ பிதாலிக உமிர்(த்)து வஅன மினல் முஸ்லிமீன். அல்லாஹூம்ம ஹாதிஹி மின்க வலக பிஸ்மில்லாஹி அல்லாஹூ அக்பர்" என்று கூறி கூர்மையான கத்தியால் அறுப்பார்.

அறுத்த பின் اَللّٰهُمَّ تَقَبَّلْهَا مِنِّيْ دَمَهَا بِدَمِيْ وَلَحْمَهَا بِلَحْمِيْ وَعَظْمَهَا بِعَظْمِيْ وَجِلْدَهَا بِجِلْدِيْ وَشَعْرَهَا بِشَعْرِيْ وَكُلَّ جُزْءٍ مِنْهَا بِكُلِّ جُزْءٍ مِنِّيْ كَمَا تَقَبَّلْتَ مِنْ خَلِيْلِكَ اِبْرَاهِيْمَ وَحَبِيْبِكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِمَا وَسَلَّمَ اَللّٰهُمَّ اجْعَلْهَا فِدَاءً لِيْ مِنَ النَّارِ

"அல்லாஹூம்ம தகப்பல்ஹா மின்னீ தமஹா பிதமீ வலஹ்மஹா பிலஹ்மீ வ அள்மஹா பிஅள்மீ வஜில்தஹா பிஜில்தீ வஷஅரஹா பிஷஅரீ வகுல்லு ஜுஜ்இம் மின்ஹா பிகுல்லி ஜுஜ்இம் மின்னீ கமா தகப்பல்(த்)த மின் கலீலிக இப்ராஹீம வஹபீபிக முஹம்மதின் சல்லல்லாஹு அலைஹிமா வசல்லம். அல்லாஹூம்மஜ்அல்ஹா ..பிதாஅல் லீ மினன் நார்" என்று துஆ செய்வார்.

மற்ற உணவு உண்ணும் முன் குர்பானி இறைச்சியை குறிப்பாக முதலில் ஈரலை உண்பது சுன்னத். குர்பானி கொடுப்பவர் துல்ஹஜ் பிறை 1 முதல் குர்பானி கொடுக்கும் வரை முடி, நகம் களையாமல் இருப்பது முஸ்தஹப்.

அறுக்கத் தெரியாதவர் அறுக்கத் தெரிந்தவரை அறுக்கச் சொல்லி அங்கு தான் இருந்து “இன்ன சலா(த்)தீ வநுசுகீ வ மஹ்யாய வமமா(த்)தீ லில்லாஹி ரப்பில் ஆலமீன்“ என்று சொல்லி அறுத்தபின் அறுத்தவர் “அல்லாஹும்ம தகப்பல் மின் ------------ பின்---------- எனக் கூறுவார். (மின் என்பதற்குப் பிறகு குர்பானி கொடுப்பவர் பெயரையும் பின் என்பதற்குப்பிறகு அவரது தந்தையின் பெயரையும் குறிப்பிடவும்) அகீகாவும் குர்பானி போலவே.

# ஜனாஜா தொழுகை விளக்கம்

மய்யித்தை அடக்க, குளிப்பாட்ட ஆயத்தம் செய்வது, ஜனாஜா தொழுவது ஃபர்ளு. மவ்த் வந்த நபரை முகம் வலது பக்கம் கிப்லா நோக்கி இருக்குமாறு வைப்பது சுன்னத். இரு கால்களையும் கிப்லா நோக்கி நீட்டி வைத்து மல்லாந்து படுக்க வைத்து தலையை லேசாக தூக்கி (முகம்) கிப்லா நோக்குமாறு செய்வதும் கூடும். “கர்கரா“ (உயிர் தொண்டைக் குழிக்கு வருவதன்) முன்பாக இரு ஷஹாத்தையும் (இரண்டாம் கலிமாவை) சொல்லிக் கொடுப்பது முஸ்தஹப். அவர் ஒரு முறை சொல்லி விட்டால் போதும். அவர் வேறு பேச்சு பேசினால் பின் மறுபடியும் சொல்லிக் கொடுக்கப்படும். (எனினும் சொல்லும்படி கட்டாயப்படுத்தக் கூடாது) அவர் முன் யாசீன் சூரா, ரஃது சூரா ஓதுவது முஸ்தஹப்.

அவர் மவ்த்தாகி விட்டால் இரு நாடியையும் துண்டுத்துணியால் கட்டி

بِسْمِ اللهِ وَعَلٰى مِلَّةِ رَسُوْلِ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ اَللّٰهُمَّ يَسِّرْ عَلَيْهِ اَمْرَهُ وَسَهِّلْ عَلَيْهِ مَا بَعْدَهُ وَاَسْعِدْهُ بِلِقَائِكَ وَاجْعَلْ مَا خَرَجَ اِلَيْهِ خَيْرًا مِمَّا خَرَجَ عَنْهُ.

"பிஸ்மில்லாஹி வஅலா மில்ல(த்)தி ரசூலில்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அல்லாஹுஹும்ம யஸ்ஸிர் அலைஹி அம்ரஹு வ ஸஹ்ஹில் அலைஹி மா ப.்.தஹு வ அஸ்இத்ஹு பிலிகாயிக வஜ்அல் மாகரஜ இலைஹி கைரம் மிம்மா கரஜ அன்ஹு" என்று கூறி இரு கண்களையும் கசக்கி மூடுவார். பின் ஒற்றப்படையாக புக்ரு (பத்தி, சாம்பிராணி) போட்டு கட்டிலருகில் வைப்பார். தொப்புளுக்கும், முட்டுக்காலுக்குமிடையில் மறைத்தவாறு உடைகளை களையப்படும். குளிப்பாட்டும் இடத்தில் குளிப்பாட்டுபவரும், அவருக்கு உதவி புரிவோர் மட்டும் இருப்பர். மிக நெருங்கி (உறவுடை)யவர் குளிப்பாட்டுவார். அப்படியாரும் இல்லாவிட்டால் பேணுதலான நபர் குளிப்பாட்டுவார். கையில் ஒரு துணியைச் சுற்றிக் கொண்டு முன், பின் துவாரத்தைச்சுத்தம் செய்து கழுவுவார். வாயைக் கொப்பளிக்காது, நாசிக்கு நீர் விடாது வுழு செய்விப்பார்.

கை விரல்களில் துணியைச் சுற்றிக் கொண்டு பற்கள், உதடுகளை, மூக்கைச் சுத்தம் செய்வார். இலந்தை இலை போட்டு, இல்லாவிடில் சவுக்காரம் (சோப்பு) கொண்டு தேய்த்து குளிப்பாட்டுவார். பின் இடப்புறம் ஒருக்கணித்து வைத்து தண்ணீர் அடிப்பாகம் வரை போகும்படி ஊற்றி பின் வலப்புறம் ஒருக்கணித்து வைத்து அவ்வாறே நீரூற்றி பின் மய்யித்தை அமர வைத்து தன்பால் சேர்த்தவராக வயிற்றை மெல்ல தடவி (முன், பின் துவாரத்திலிருந்து) ஏதேனும் வெளியானால் அதைக் கழுவுவார். மீண்டும் நீரூற்றி குளிக்க வைக்க வேண்டியதில்லை. பின் துவட்டி, தலை, தாடி, சுஜூது செய்யும் இடங்களில் கற்பூரத்தைப் போட்டு வாசனைத் திரவியம் பூசிடுவார்.

**கஃபன் :** ஆணுக்கு சட்டை, உடுத்தாடை (வேட்டி), அடைய வளைந்தான் (முழு உடலை மூடும் துணி) ஆகிய மூன்றாலும் கஃபனிடுவது சுன்னத். உடுத்தாடையும், அடைய வளைந்தானும் உச்சிமுதல் உள்ளங்கால் வரை இருக்க வேண்டும்.

முதலில் அடைய வளைந்தானை விரித்து, அதன் மேல் உடுத்தாடையை விரித்து, மய்யித்துக்கு சட்டை அணிவித்து உடுத்தாடையின் பேரில்வைத்து இடது புறம் முந்தியும், வலது புறம் பிந்தியும் சுற்றப்படும். உலமாக்கள், நல்லோர்கள் போன்ற சிறப்பிற்குரியவர்களுக்கு தலைப்பாகை அணிவிப்பது நல்லது.

பெண்ணுக்கு ஆணுக்குள்ள மூன்று துணிகளோடு

(தலைக்கிடும்) மக்கன்னா, மார்புத் துணி ஆகிய 5 சுன்னத். பெண் மய்யித்துக்கு சட்டை அணிவித்து கூந்தலை இரண்டாக வகுந்து சட்டைக்கு மேல் நெஞ்சில் போட்டு மக்கன்னா அணிவித்து பின் உடுத்தாடை, அடைய வளைந்தானை முன் சொன்னது போல் சுற்றி அதற்கு மேல் மார்புத் துணி கட்டப்படும். க∴பனாடை காற்றில் பறக்குமென பயந்தால் அதை கட்டப்படும்.

## ஜனாஜா தொழுகை

**அதன் ஷர்த்துகள் 8.**

1. மய்யித் முஸ்லிமாயிருப்பது.
2. துப்புரவாயிருப்பது.
3. மய்யித் அங்கு இருப்பது (மய்யித்தில்லாமல் ஜனாஜா தொழுவது ஷா∴பிஈ மத்ஹபில் உள்ளது. ஷாபிஈ இமாமைப்பின் தொடர்ந்து தொழுதால் ஹனபிய்யாக்கள் தொழலாம்)
4. ஜனாஜாவை முற்படுத்துவது.
5. ஜனாஜாவை பூமியில் வைப்பது.
6. இமாம் பாலிகானவராக இருப்பது
7. இமாம் மய்யித்தின் ஏதாவதொரு பாகத்திற்கு நேர்படுவது.
8. இமாமும், மய்யித்தும் அவ்ரத்தை மறைத்திருப்பது

தொழுகையின் ஷர்த்துகளில் வக்த் மட்டும் இதற்கு ஷர்த்தில்லை.

நிய்யத் : أُصَلِّي لِلّٰهِ دَاعِيًا لِلْمَيِّتِ

உசல்லீ லில்லாஹி தாஇயல் லில்மய்யித். மய்யித்துக்கு

துஆ செய்தவனாக அல்லாஹ்விற்காக தொழுகிறேன் என இமாம் சொல்வார்.

أُصَلِّي لِلّٰهِ دَاعِيًا لِلْمَيِّتِ مَعَ الْإِمَامِ

உசல்லீ லில்லாஹி தா இயல் லில்மய்யித் மஅல் இமாம் (இமாமோடு சேர்ந்து) என்பதை சேர்த்து முக்ததீ சொல்வார். மய்யித் ஆணா, பெண்ணா என்று சந்தேகம் வந்தால் “இமாம் தொழுபவரின் பேரில் இமாமுடன் தொழுகிறேன்“ என்பார். “இமாமுடன் ஜனாஜா தொழுகிறேன்“ என நிய்யத் செய்தாலும் போதும்.

## ஜனாஜா தொழுகை முறை

அதன் ருக்னு 4தக்பீரும், நிற்பதும்.

**அதன் சுன்னத் 4.**

1. மய்யித் ஆணாயிருந்தால் இமாம் மய்யித்தின் நெஞ்சுக்கு நேராக நிற்பதும்.
2. முந்தின தக்பீருக்குப்பின் சனா ஓதுவதும்,
3. இரண்டாம் தக்பீருக்குப் பின் தரூத் ஓதுவதும்,
4. 3-ம் தக்பீருக்குப்பின்

اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَشَاهِدِنَا

وَغَائِبِنَا وَصَغِيْرِنَا وَكَبِيْرِنَا وَذَكَرِنَا وَأُنْثَانَا اَللّٰهُمَّ مَنْ اَحْيَيْتَهٗ

مِنَّا فَاَحْيِهٖ عَلَى الْاِسْلَامِ وَمَنْ تَوَفَّيْتَهٗ مِنَّا فَتَوَفَّهٗ عَلَى الْاِيْمَانِ

اَللّٰهُمَّ اغْفِرْ لَهٗ وَارْحَمْهُ وَعَافِهٖ وَاعْفُ عَنْهُ وَاَكْرِمْ نُزُلَهٗ وَ
وَسِّعْ مُدْخَلَهٗ وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ وَنَقِّهٖ مِنَ
الْخَطَايَا كَمَا يُنَقَّى الثَّوْبُ الْاَبْيَضُ مِنَ الدَّنَسِ وَاَبْدِلْهُ دَارًا
خَيْرًا مِّنْ دَارِهٖ وَاَهْلًا خَيْرًا مِّنْ اَهْلِهٖ وَزَوْجًا خَيْرًا مِّنْ
زَوْجِهٖ وَاَدْخِلْهُ الْجَنَّةَ وَاَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ وَعَذَابِ النَّارِ

“அல்லாஹும்ம ங்.ஃ.பிர் லிஹய்யினா வமய்யித்தினா வ ஷாஹிதினா வ ஙாயிபினா வ சஙீரினா வ கபீரினா வதகரினா வ உன்சானா. அல்லாஹும்ம மன் அஹ்யைத்தஹு மின்னா .ஃ.ப அஹ்யிஹி அலல் இஸ்லாம். வமன் தவ.ஃ.ப்பைதஹு மின்னா .ஃ.பதவ.ஃ.ப்பஹு அலல் ஈமான். அல்லாஹும்மங்.ஃ.பிர் லஹு வர்ஹம்ஹு வ ஆ.ஃ.பிஹி வ.ஃ.பு அன்ஹு வஅக்ரிம் ஙுஜுலஹு வ வஸ்ஸி.ஃ. மத்கலஹு வங்ஸில்ஹுபில்மாஇ வஸ்ஸலஜி வல்பர்தி வ நக்கிஹி மினல் கதாயா கமா யுனக்கஸ்ஸவ்புல் அப்யழு மினத் தனஸி வ அப்தில் ஹு தாரன் கைரம் மின் தாரிஹி வ அஹ்லன் கைரம் மின் அஹ்லிஹி வ ஜவ்ஜன் கைரம் மின் ஜவ்ஜிஹி வ அத்கில்ஹுல் ஜன்ன(த்)த வ அஇத்ஹு மின் அதாபில் கப்ரி வ அதாபின் நார்“ என்று ஓதுவதுமாகும்.

மய்யித் பைத்தியமாக இருந்தாலோ, சிறு பிள்ளையாய் இருந்தாலோ (அல்லாஹும்மங்.ஃ.பிர் லஹு என்று ஆரம்பிப்பது முதல் ஓதாமல்)

اَللّٰهُمَّ اجْعَلْهُ لَنَا فَرَطًا وَاجْعَلْهُ لَنَا اَجْرًا وَّذُخْرًا، وَاجْعَلْهُ لَنَا شَافِعًا وَّمُشَفَّعًا

அல்லாஹும்மஜ் அல்ஹு லனா ஃபர(த்)தா வஜ்அல்ஹுலனா அஜ்ரவ் வ துக்ரா. வஜ்அல்ஹுலனா ஷா.ஃ.பிஅம் முஷ.ஃ.ப்பஆ. என்று ஓதுவார். பெண்பிள்ளையெனில் ஷா.ஃ.பிஅத்தம் முஷ.ஃ.ப்பஅஹ் என்று ஓதுவார். அத்தோடு அல்லாஹும்மங்.ஃ.பிர்லஹு எனத் துவங்குவதிலும், அல்லாஹும்மஜ் அல்ஹு எனத் துவங்குவதிலும் மய்யித் பெண்ணாக இருந்தால் "ஹு" என்று வருவதை மட்டும் "ஹா" என்று (பெண்பாலாக) மாற்றி ஓதுவார். 4-ம் தக்பீருக்குப்பின் துஆ இல்லை. எனினும் ரப்பனா ஆ(த்)தினா துஆ ஓதலாம் எனப்பட்டுள்ளது.

பின் இரு சலாம் கொடுப்பார். அதில் மய்யித்தையும், மக்களையும் நிய்யத் செய்வார்.

## ஜனாஜா தொழ வைப்பவர்

முதல் உரிமை பள்ளியின் இமாமுக்கு அவரை விட வலி எனப்படும் வாரிசுக்காரர், உறவினர் இமாமத்துக்கு மிக தகுதிபெற்றிருந்தால் அவருக்கு இமாமை விட முன்னுரிமை உண்டு.

உள் பள்ளிக்குள் ஜனாஜா தொழுவது மக்ரூஹ். ஜனாஜா பள்ளிக்குள் இருந்தாலும், வெளியிலிருந்தாலும் சரி.

ஜனாஜாவை 4 ஆண்கள் சுமப்பதும் சுன்னத்.

ஒவ்வொருவரும் பத்து பத்து அடியாக 40 அடி சுமக்க வேண்டும். (பிறகு அடுத்த நால்வர்... இப்படியாக.) ஜனாஜாவின் வலது முன்புறத்தைக் கொண்டு (செல்ல) துவக்கப்படும். அதன் வலது முன்புறத்தை வலது தோளிலும், இடது முன்புறத்தை இடது தோளிலும், அவ்வாறே பின்புறத்தையும் வைத்து சுமப்பர். ஓடாமல் செல்வது முஸ்தஹப். மனிதர்கள் அதன் பின்னால் நடப்பதே சிறப்பு. பின் வருவோர் உலகப் பேச்சு பேசக் கூடாது. தக்பீர், தஹ்லீல், (கலிமா ஷஹாதா போன்றதை) சொல்லிக் கொண்டு வர வேண்டும். ஜனாஜாவை பூமியில் வைக்கும் முன் அமர்வது மக்ரூஹ்.

## கப்ர்

கெட்டியான பூமியில் ஒரு குழி தோண்டப்படும். கெட்டியில்லா பூமியில் பிள்ளைக் குழி தோண்டுவது குற்றமல்ல. குழியை இடுப்பளவு அல்லது நெஞ்சளவு அல்லது ஒரு ஆளுயரம் தோண்டப்படும். ஒரு ஆள் உயரம் தோண்டுவது மிகச் சிறப்பு. மய்யித்தை கிப்லா புறமிருந்து த.'.பன் செய்யப்படும்.

வைப்பவர்“ பிஸ்மில்லாஹி வஅலா மில்ல(த்)தி ரசூலில்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்“ என்று சொல்வார். மய்யித்தை வலப்புறம் கிப்லா நோக்கி முகம் திருப்பி வைத்து முடிச்சுகளை அவிழ்த்து விட்டு பச்சை ஓடுகளை, மூங்கிலை அதன்மேல் சரியாக அடுக்கி வைக்கப்படும். ஆண் கப்ரை மறைக்க வேண்டியதில்லை.

பெண் கப்ர் மறைக்கப்படும். பின் மண் போடப்படும். அருகில் நிற்போர் தலைமாட்டுப் பக்கமாக இரு கையால் 3 பிடி மண்பிடித்து போடுவது முஸ்தஹப். முந்தின பிடியில் மின்ஹா கலக்னா(க்)கும், 2ம் பிடியில் வ.ீ.பீஹா நுஈதுகும், 3ம் பிடியில் வமின்ஹா நுக்ரிஜுகும் தாரதன் உக்ரா என்பார். கப்ரை குவியலாக்கப்படும். அதன்மேல் தண்ணீர் தெளிப்பது தவறல்ல. தலைமாட்டில் ஃபாத்திஹா சூராவும், கால் மாட்டில் பகரா சூராவின் முதல் 4 வசனமும் ஓதி துஆ செய்வர். இன்னும் அடக்கிய பின் குர்ஆன் ஓதி (ஈசால் சவாபு செய்து) துஆ செய்யவது, ஒட்டகத்தை அறுத்து பங்கு வைக்கிற நேரமளவு இருப்பது முஸ்தஹப். மய்யித்தின் உறவுகள் "அஃளமல்லாஹு அஜ்ரக வ அஹ்ஸன அஜாஅக வ ஙஃபர லிமய்யிதிக" என்று கூறி ஆறுதல் படுத்துவது முஸ்தஹப். மய்யித் சிறு பிள்ளையாகவோ, பைத்தியமாகவோ இருந்தால் வஙஃபர லிமய்யிதிக எனப்படாது. ஆறுதல் சொல்கையில் முஸாஃபஹா (முஆனகா)செய்வது கூடும்.

அண்டை வீட்டார் மய்யித் வீட்டுக்கு உண்வு தயார் செய்து வழங்குவது முஸ்தஹப். அதன்பின் தொடர்ந்து 7நாட்கள் தம்மால் முடிந்ததை மய்யித்தின் பேரில் சதகா செய்வது முஸ்தஹப். எதுவுமில்லையென்றால் 2 ரக்அத் (நபில்) தொழுது அதன் சவாபை ஈசால் சவாபு செய்வார்.

## கப்ர் ஜியாரத்

கப்ராளிகளுக்கு துஆவையும், தனக்கு (ஈமானிய) உறுதியையும் (மறுமைச் சிந்தனையையும்) நாடி கப்ர் ஜியாரத் செய்வது முஸ்தஹப். கப்ரருகே சென்றும் மறுமை சிந்தனை கொள்ளாத, கப்ராளிகளுக்காக துஆச் செய்யாதவர் தமக்கும், அவர்களுக்கும் அநீதம் புரிந்து விட்டார்.

ஜியாரத் செய்பவர் கப்ரின் கால்மாட்டில் கிப்லாவை பின்னோக்கி மய்யித்தின் முகத்தை முன்னோக்கி

اَلسَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُّؤْمِنِيْنَ

وَاِنَّا اِنْ شَاءَ اللّٰهُ بِكُمْ لَاحِقُوْنَ، وَنَسْأَلُ اللّٰهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ

“அஸ்ஸலாமு அலைக்கும் தாரகவ்மின் மு.ஃ.மினீன். வ இன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன். வநஸ்அலுல்லாஹ லனா வலகுமுல் ஆ.ஃ.பியஹ்” என்று கூறி துஆச் செய்வார். எனினும் கப்ராளி உலகில் இருந்த அந்தஸ்துக்குத் தக்கவாறு (அவர் உலகில் இருந்தால் அவர் முன் இருப்பது போல) இருப்பார்.

ஜியாரத் செய்பவர் யாசீன் ஓதுவது முஸ்தஹப். கப்ராளி முகத்தை நோக்கி நிற்க முடியாவிட்டால் கால்மாட்டில், தலைமாட்டில் நிற்பார்.

இன்னும் சூரா ஃ.பாத்திஹா 1 முறை, இக்லாஸ் 3 முறை ஓதலாம். 11 முறை மிகச் சிறந்தது. சூரா தகாசுர் ஓதலாம். பின் ஈசால் சவாபு துஆ ஓதுவார்.

ஒருவர் கப்ருஸ்தானில் நுழைந்தபின்

اَللّٰهُمَّ رَبَّ الْاَجْسَادِ الْبَالِيَةِ وَالْعِظَامِ النَّخِرَةِ

الَّتِيْ خَرَجَتْ مِنَ الدُّنْيَا وَهِيَ بِكَ مُؤْمِنَةٌ اَدْخِلْ عَلَيْهَا رَوْحًا

مِنْ عِنْدِكَ وَسَلَامًا مِّنِّيْ

"அல்லாஹும்ம ரப்பல் அஜ்ஸாதில் பாலிய(த்)தி வல் இளாமின் நகிர(த்)தில்ல(த்)தீ கரஜத் மினத் துன்யா வஹிய் பிக மு.்.மின(த்)துன் அத்கில் அலைஹா ரவ்ஹம்மின் இன்திக வசலாமம் மின்னீ" என்று கூறினால் ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் முதல் மவ்த்தான அத்துணை மு.்.மின்களும் அவருக்காக துஆச் செய்வார்கள். அவருக்காக பாவமன்னிப்புத் தேடுவார்கள்.

ஜியாரத் செய்ய மிகச் சிறந்த நாள் வெள்ளிக்கிழமை. கப்ருஸ்தானிலுள்ள பசுமையான புற்கள், செடிகளை அறுப்பது, களைவது மக்ரூஹ். அது பசுமையாய் (உயிரோடு) உள்ளவரை தஸ்பீஹ் செய்யும். அதனால் அந்த மய்யித்களுக்கு (அதாபு குறைக்கப்பட்டும், நீக்கப்படும்) அருள் இறங்கும். எனவே கப்ரின் மேல் (தலைமாடு, கால்மாட்டில்) பச்சைக்(கிளைகளை) கொப்புகளை வைப்பது குற்றமல்ல. (மாறாக முஸ்தஹப்பான விஷயமாயிருக்கும்)

# ஜகாத் விளக்கம்

தொழுகைக்கு அடுத்து முக்கியமானது ஜகாத். அல்லாஹ் குர்ஆனில் 32 இடங்களில் தொழுகையோடு சேர்த்து ஜகாத்தின் அவசியத்தை கூறியுள்ளான்.

**ஜகாத் என்பதாவது...** சொத்திலிருந்து குறிப்பிட்ட அளவை தன்னிடமிருந்து அல்லாஹ்விற்காக ஹாஷிமியல்லாத (பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் குடும்ப வம்சமல்லாத) ஏழைக்கு உடமையாக்கி வைக்க வேண்டும்.

ஜகாத்தின் நிய்யத் செய்து மிஸ்கீனுக்கு சாப்பாடு போட்டால் ஜகாத் நீங்காது. அன்றி அந்த உணவை அவரிடம் ஒப்படைத்து அதற்கவரை உரிமையாக்கி விட்டால் கூடும். மேலும் பைத்தியமாயுள்ளவருக்கோ, புலூகை (பருவ வயதை) அடையாதவருக்கோ ஜகாத் கொடுக்கப்படாது. எனினும் அந்த இருவருக்காக பெற்றோரோ, பொறுப்புதாரியோ (காடியனோ) பெறலாம்.

# ஜகாத் விதியாக நிபந்தனையாவது

1. அறிவு தெளிவுள்ளவராக (பைத்தியமல்லாதவராக) இருப்பது.
2. பாலிகாயிருப்பது.
3. முஸ்லிமாய் இருப்பது.
4. சுதந்திரமுள்ளவராக இருப்பது.

5. மனிதர்களால் (கொடுத்துவிட்டு) கேட்கப்படும் கடன் மற்றும் அத்தியாவசிய தேவைகளுக்குப் போக அவரது செல்வம் ஜகாத்தின் நிஸாபை அடைந்தவராக இருக்க வேண்டும்.

6. ஜகாத்தின் நிஸாபை அடைந்த செல்வம் அதன்பின் ஒரு வருடம் கழிந்தபின் ஜகாத்தின் நிஸாபுடையதாக இருக்க வேண்டும். மாறாக நிஸாபை விட குறைந்து விட்டால் ஜகாத் கடமையாகாது. ஒரு வருடத்திற்கிடையில் செல்வத்தில் ஏற்படும் கூடுதல், குறைவு போன்ற மாற்றங்கள் பற்றி பிரச்சினையில்லை. இடையில் செல்வம், சொத்து வந்து சேர்ந்தால் வருட முடிவில் அனைத்தையும் சேர்ந்தே கணக்கிட்டு ஜகாத் வழங்க வேண்டும்.

ஆக ஜகாத்தின் நிஸாப் வருடத்தின் துவக்கமும், முடிவிலும் நிரப்பமாயிருக்க வேண்டியது ஷர்த்தாயிருக்கும். ஜகாத் கடமையாகி இருப்பதை, அதனை பிரித்துக் கொடுப்பதை மனதில் உறுதி கொள்ள வேண்டியது ஷர்த். அல்லது செல்வமனைத்தையும் சதகா செய்ய உறுதி பூண்டு விட்டால் ஜகாத் கடமை நீங்கி விடும்.

## நிஸாப்

**தங்கத்திற்கு...** இருபது களஞ்சி (10 சவரன். எனினும் 87 1/2 கிராம் அதாவது 10 3/4 பவுனுக்கு மேல் இருந்தால் தங்கத்தின்மீது ஜகாத் வாஜிப்)

**வெள்ளிக்கு...** 200 திர்ஹம் (அதாவது 6/2. 360 மில்லி கிராம். தங்கம், கால்நடைகள், விவசாயம் தவிர இதர சொத்துக்கள் வெள்ளியின் நிஸாபில் கணக்கிடப்படும்.)



 

தங்கம், வெள்ளி காசாக இருந்தாலும் சரியே, பாத்திரமாக இருந்தாலும் சரி ஜகாத் அதன் மீதுண்டு.

வியாபாரப் பொருட்களின் மதிப்பு பொன்; வெள்ளியின் நிஸாபை எட்டிவிட்டால் அதையும் பொன், வெள்ளியோடு சேர்ந்து (ஜகாத்தை) கணக்கிடப்படும். தங்கத்தின் நிஸாபை அது அடையாவிடில் வியாபாரப்பொருள் மதிப்பை வெள்ளியின் நிஸாபில் சேர்க்கப்படும். (இதன்படி வியாபாரப் பொருள் மதிப்பை வெள்ளியின் நிஸாபிலேயே சேர்த்து கணக்கிடப்படும்.)

தங்கம், வெள்ளி இரண்டும் தனித்தனியாக நிஸாபை அடைந்தால் தனித்தனியாக கொடுக்கலாம். ஒன்றை மற்றொன்றோடு சேர்த்தால் தான் நிஸாபை அடைகிறதென்றால் அவ்வாறு சேர்த்துக் கணக்கிடலாம். ஏழைகட்கு பயனளிக்கும்படி ஜகாத் வழங்கவே வழி செய்யப்பட வேண்டும்.

(ஜகாத்திலிருந்து தப்பிப்பதற்கான வழியைத் தேடக்கூடாது.)

பொன், வெள்ளியில் பத்திலொன்றில் கால்வாசி (அதாவது 40க்கு 1 அல்லது 100 க்கு 25) ஜகாத் கடமை.

## ஜகாத் வழங்கப்பட உரிமையுடையவர்கள்

### ஏழு நபர்கள்.

1. ஃபகீர். ஜகாத் கடமையாகாத ஏழை.
2. மிஸ்கீன் (எதுவுமில்லாத ஏழை).
3. ஜகாத் தண்டல்காரர் (இஸ்லாமிய நாட்டில் ஜகாத் வசூலிக்க நியமிக்கப்படும் அதிகாரி.) அவருக்கு அவரது வேலைக்குத்தக்க கொடுக்கப்படும்.

4. முகாதப் (எனப்படும் தன் எஜமான் கேட்ட பணத்தை கொடுத்து விட்டால் விடுதலையாகலாம் என்ற நிலையிலுள்ள அடிமை)

5. கடனாளி. ஆனால் அவர் கடனை அடைத்து விட்டால் அவர் மீது ஜகாத் வாஜிபாகுமளவு நிஸாபிருந்தால் அவருக்கு கொடுக்கக் கூடாது. அன்றி கடன்பட்ட ஃபகீருக்கு கொடுப்பதே கடனில்லா ஃபகீருக்கு கொடுப்பதை விட சிறப்பு.

6. அல்லாஹ்விற்காக ஜிஹாது (போர்) செய்ய போகும் போது உணவு, வாகனம் போன்ற செலவுக்கு இல்லாதவர்கள்.

7. நபர் வெளியூரில் முஸாஃபிராக (பயணியாக) இருக்க சொத்துக்கள் அவரது சொந்த ஊரில் இருந்து அதை வெளியூரில் பயன்படுத்த இயலாது போனவர்.

**முக்கியக் குறிப்பு :** இவர்களில் நம் நாட்டில் 3ம், 4ம் மற்றும் 6ம் வகையினர் கிடையாது. ஆகவே இது விஷயத்தில் ஜகாத் கொடுப்பவர் ஏமாந்து விடக் கூடாது. ஜகாத்தை மேற்கண்ட யாவர்க்கும் தரலாம். அவர்களில் சிலருக்கும் தரலாம். ஒருவருக்கு மட்டும் கூட கொடுக்கலாம். எனினும் கடனாளியாகவோ, பெரிய குடும்பஸ்தனாகவோ (பிள்ளை, குட்டிக்காரராகவோ) இல்லாத ஒரே ஒரு ஏழைக்கு மட்டும் ஜகாத்தைக் கொடுப்பது மக்ருஹ். அதே சமயம் ஒரு குடும்பஸ்தருக்கு மட்டும் ஜகாத் கொடுத்து அவரது குடும்பத்தில் அனைவருக்கும் அதை பங்கிட்டு யாவரும் ஜகாத்தின் நிஸாபை அடையாதிருந்தால் அவருக்கு மட்டும் கொடுப்பது மக்ருஹ் ஆகாது.

# ஜகாத் யாருக்கு, எதற்கு கொடுக்கக்கூடாது?

கா.்.பிருக்கோ, பள்ளிவாசல் கட்டவோ, க.்.பனிடவோ, ஜகாத் நிஸாபுடைய பணக்காரருக்கோ, அத்தகைய பணக்காரரின் சிறு பிள்ளைக்கோ, அவரது முகாதபல்லா அடிமைக்கோ, (பெருமானாரின் முப்பாட்டானார் ஹழ்ரத்) ஹாஷிமின் கிளையினருக்கோ ஜகாத் கொடுக்கப்படாது. அதே போல ஹழ்ரத் ஷாஹிம் கிளையாரின் அடிமைகளுக்கும் வழங்கப்படாது. ஆயினும் ஹழ்ரத் ஷாஹிம் கிளையாருக்கு சுன்னத்தான அன்பளிப்புகள் வழங்கப்படும்.

## ஹழ்ரத் ஹாஷிமின் கிளையார் யாவர்?

ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு, அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு, ஜ.்.பர் ரழியல்லாஹு அன்ஹு, உகைல் ரழியல்லாஹு அன்ஹு மற்றும் ஹாரிஸ் பின் அப்துல் முத்தலிபின் கிளையார்.

(குறிப்பு: அன்று இவர்களுக்கு மார்க்கச் சட்டப்படி பொருட்களில் 5ல் 1 பங்கு கொடுக்கப்பட்டது. இன்றைய காலத்தில் அது இல்லை. எனவே ஜகாத் கொடுக்கலாம் என கூறப்படுகிறது)

மேற்கண்ட ஐவர் தவிர ஹழ்ரத் அப்துல் முத்தலிபின் மகனான அபூலஹபின் கிளையாருக்கு ஜகாத் கொடுக்கலாம்.

ஜகாத் கொடுப்பவர் தன் தாய், தந்தை, பாட்டனார், பாட்டியார் என தம் முன்னோர், தன் பிள்ளை, பேரன், பேத்திகள் என

தம் பின்னோர், தன் மனைவி, தன் அடிமை, தன் முகாதப் ஆகியோருக்கு ஜகாத் கொடுக்கக் கூடாது.

ஜகாத்தை உரியவர் வந்து யாசிக்கும் முன் அவரைத் தேடி(ப் போய்க்) கொடுப்பது நல்லது.

அதாவது ஏழையாக உள்ள தம் சகோதர, சகோதரிகளுக்கு, அவர்களது பிள்ளைகளுக்கு, பின் ஏழையாக உள்ள தமது தந்தையுடன் பிறந்தவர்களுக்கு, தன் தாயாருடன் பிறந்தவர்களுக்கு, பின் மற்ற உறவுகளுக்கு, அண்டை வீட்டாருக்கு, பின் தன் தெருவிலுள்ளவர்களுக்கு, பின் தன் ஊரில் உள்ளவர்களுக்கு பின் ஊரைச் சுற்றியுள்ளவர்களுக்கு என வழங்குவது ஏற்றம்.

ஜகாத்தை வாங்கி வீணடித்து விடுவான், பாவத்தில் செலவு செய்து விடுவான் என ஒருவரைப் பற்றி நன்கு தெரிந்தால் அவருக்கு வழங்குவது தகுந்ததல்ல.

## சுன்னத் சதகாக்களின் விளக்கம்

செலவில் மிக சிறப்பானது தனக்காக செலவு செய்வது. பின்பு தம் குடும்பத்தினருக்காக செலவு செய்வது. செலவில் இது இரண்டையும் முற்படுத்துவது ஃபர்ளு. மிஞ்சினால் சதகா செய்வார். சதகாவில் மிக சிறப்பானது தனக்கு மிக நெருங்கியவர்களுக்கு கொடுப்பது சிறந்தது. அதை விட மனமுறிவிலுள்ள உறவுகளுக்கு கொடுப்பது சிறந்தது.

ஆரோக்கிய நிலையில் தரப்படும் சதகா, நோயுள்ள நிலையில் தருவதை விட சிறந்தது. தனக்கு

தேவையிருக்கவே மற்றவருக்கு வழங்குகிறது. கொடையிலேயே மிகச்சிறந்தது. ஆனால் அதற்காக தன் குடும்பத்திற்கு செய்ய வேண்டிய- தர வேண்டியதில் குறை வைப்பது ஹராம் (கூடவே கூடாது. பெரிய பாவம்) அன்றி குடும்பத்தார் பொருந்திக் கொண்டால் பரவாயில்லை.

சதகாவை ரகியமாக கொடுப்பதே சிறந்தது. (எனினும் தனக்கு அதனால் புகழ், பெருமை, முகஸ்துதி விரும்பல் ஏற்படாதென்றால் தான் சதகா செய்வதைக் கண்டு பிறரும் சதகா செய்ய ஆர்வம் காட்டுவார்கள் என்றால் பகிரங்கமாக கொடுக்கலாம்.)

## சதகாவின் சவாபு 5 வகை.

1. ஒன்றுக்கு பத்து. ஆரோக்கிய உடல் பெற்றவருக்கு (உழைக்க முடிந்தவருக்கு) கொடுப்பதால்.

2. ஒன்றுக்கு தொண்ணூறு பார்வையற்றவர்க்கு, நோயுள்ளவருக்கு, உழைக்க இயலாதவருக்கு கொடுப்பதால்.

3. ஒன்றுக்கு தொள்ளாயிரம். சொந்த பந்தங்களில் ஒன்றுமில்லா ஏழைகட்கு சதகா செய்வதால்.

4. ஒன்றுக்கு லட்சம் நன்மை. பெற்றோருக்கு செலவு செய்வதால்.

5. ஒன்றுக்கு ஒன்பது லட்சம். மார்க்க சேவையாற்றும் ஆலிம், அறிஞர்களுக்கு கொடுப்பதால்.

மார்க்கக் கல்வி தேடுபவருக்கு ஒரு வெள்ளிக் காசு செலவு செய்வது உஹது மலையளவு தர்மம் செய்வது போலென

ஹதீஸில் வருகிறது. ரூபாயை சில்லரையாக மாற்றி பலருக்கு கொடுப்பதை விட ரூபாயை அப்படியே ஒருவருக்கு வழங்குவது சிறந்தது.

அல்லாஹ் சிறந்த காரியங்களையே விரும்புகிறான். பெருந்தன்மையோடு நடக்காதவரை விரும்புவதில்லை என்கிறது நாயகத்தின் பொன்மொழி.

(குடிகாரன் போன்ற) பாவிக்கு அப்போதைய தேவைக்கு மட்டுமே கொடுக்க வேண்டும். மிகுதம் தரப்படாது.

அன்றாடம் சதகா செய்வார். வீட்டில் வந்து யாசகம் கேட்போருக்கு தம்மால் இயன்றதை மனமுவந்து கொடுப்பார். தன் கையால் தர்மமளிப்பதே சிறந்தது. பணம் கொஞ்சமே இருக்க பலர் கேட்டால் தன் மனம் நாடுபவர்களுக்கு கொடுக்கலாம். யாசிப்பவரை சும்மா அனுப்பாமல் தம்மால் இயன்றதை கொடுத்தனுப்ப வேண்டும். இயலாவிட்டால் தன்மையாக சொல்லி அனுப்ப வேண்டும். கடிந்து பேசலாகாது. விரட்டக் கூடாது. ஒன்றுமே இல்லாத போது “ரஜகனல்லாஹு வ இய்யாகும்“ அல்லாஹ் எங்களுக்கும், உங்களுக்கு ரிஜ்க் அளிப்பானாக என்று துஆ செய்து (பண்பாக பேசி) அனுப்புவார். இந்நிலையில் 3 முறை சொல்லியும் போகாதவரை விரட்டுவது குற்றமல்ல என்று ஹதீஸில் வருகிறது.

கொடுத்ததை தான் செய்த உபகாரம் எனக்கருதாமல் இது அல்லாஹ் தனக்குச் செய்த உபதாரம் (அல்லாஹ்வே பேருபகாரி) எனக் கருத வேண்டும். கொடுப்பது கொஞ்சமோ,

நிறையவோ அது அல்லாஹ் வழங்கிய ரிஜ்க். அதை அற்பமாக கருதக் கூடாது. (கொடுப்பவரானாலும், வாங்குபவரானாலும்) ஃபகீரிடம் புகழையோ ஏன் துஆவையே கூட எதிர் பார்க்கக் கூடாது. மாறாக பெற்றவர் துஆச் செய்தால் அவருக்காக வழங்கியவரும் துஆ செய்ய வேண்டும்.

**எச்சரிக்கை :** ஹராமான சம்பாத்தியத்திலிருந்து சவாபை (நன்மையை) ஆதரவு வைத்துக் கொடுத்தால் அவர் காஃபிர். ஹராமென்று தெரிந்தே கொடுத்தவருக்காக துஆச் செய்தால் அவரும் காஃபிர். அவர் துஆவுக்கு கொடுத்தவர் ஆமீன் சொன்னல் அதுவும் குஃப்ர் தான். (ஆமீன் கூறாவிட்டாலும் சவாபை எதிர்பார்த்தாலே குஃப்ர் தானே?!). அதற்கு அவ்விருவர் தவிர மற்றவரும் தெரிந்தே ஆமீன் சொன்னார். அவரும் காஃபிராகிப் போவார். ஆகவே ஹராமை தர்மம் செய்யக் கூடாது. தவிர ஹலால், ஹராம் இரண்டையும் கலந்து மேற்கண்ட விதமாக தர்மம் செய்தால் குஃப்ர் உண்டாகாது என்றாலும் அது கூடாது. பாவமே.

ஆகவே ஜகாத், சதகா செய்யும் பொருள் முழுக்க, முழுக்க சந்தேகத்திற்கிடமற்ற ஹலாலாக இருக்க வேண்டியது முக்கியம். தன் முஸ்லிம் சகோதரரின் பசி போக்கினால் பாவமன்னிப்பு உண்டென்றும், கடன் தந்தவர் அதை மன்னிப்பதால் பெரிய சவாபு உண்டென்றும், விருந்தாளி புகா வீட்டில் (அருள் கொண்டு) மலக்குகள் புகமாட்டார்கள் என்றும் ஹதீஸில் வருகிறது.

சதகாவை விட கடன் கொடுப்பதால் ஒன்றுக்கு 18 நன்மைகள் உண்டு, இரு சதகா போன்றது ஒரு கடன் என ஹதீஸ் கூறுகிறது.

## யார் யாசகம் கேட்கலாம், கேட்கக் கூடாது?

அன்றைய தேவைக்கு உணவு, உடை உள்ளவர் யாசிக்கக் கூடாது. அது ஹராம். யாசிக்காமல் தந்தால் வாங்கலாம். ஹராமல்ல. சம்பாதிக்க சக்தியுள்ளவர் யாசிப்பது ஹராம். எனினும் மார்க்கக் கல்வி கற்பவர் (அதற்காக தன் காலத்தை, உடல் உழைப்பை ஒதுக்குவதால் அவர்) கேட்கலாம். எனினும் அவர் தொழில் வியாபாரம் போன்ற வருமானம் ஈட்டுபவராக இருந்தால் கேட்பது ஆகுமானதல்ல. தன்னால் சுயமாக உழைத்து சம்பாதித்துக் கொண்டே கல்வி பயில முடியுமென்றால் அவர் சம்பாதிப்பது வாஜிப்.

அன்றி ஏழை, எளியவர், இயலாதவர்களுக்கு பிறரிடம் வாங்கிக் கொடுப்பது தவறல்ல. அது நற்காரியமே. (எனினும் கேட்பவர் பேணுதலானவரா? என்பதை அறிந்து கொடுப்பது நல்லது).

வீடு, வீடாய், கடை, கடையாய் ஏறி இறங்கி யாசகம் கேட்குமளவு சக்தி உடையவர் யாசகம் கேட்கலாகாது. அன்றி யாசகம் கேட்கவும் அலைய முடியாதளவு

இயலாதவர்களை அறிந்து அவர்களது அடிப்படைத் தேவைகளுக்கு ஆவண செய்ய வேண்டியது அத்தகையவர்களை அறிந்தவர்கள் மீது ஃபர்ளாகும். பொறுப்பாகும். எவருமே உதவாமல் இயலாதவர் இறந்து போனாலும் அனைவருமே பாவிகளாகிடுவர். தம்மிடம் செய்ய இல்லை. எனினும் பிறரிடம் சொல்லி உதவலாம் என்றளவுக்கு முடிந்தால் அதைச் செய்ய வேண்டியது ஃபர்ளு.

தன் தேவைக்குப்போக, தனது குடும்பத்தின் தேவைக்குப் போக, கடன்போக கையில் பணம் (செல்வம்) உடையவர் ஜகாத், ஃபித்ரா, கஃப்பாரா, வாஜிபான நேர்ச்சை போன்றவற்றை கொடுத்தாலும் வாங்கக் கூடாது. ஹராம். அன்றி நபிலான சதகா (தர்மங்)களைக் கேட்பது ஹராம். கேட்காமல் கொடுக்கப்பட்டால் வாங்குவது கூடும்.

அவர் கேட்காமல், எதிர்பார்க்காமல் மனமுவந்து பிறர் அவருக்குத் தருவதை மனமுவந்து ஏற்கலாம். தவறல்ல. அது அல்லாஹ் அவருக்குத் தரும் ரிஜ்க். அதைத் தட்டக் கூடாது.

## நோன்பு விளக்கம்

**நோன்பென்பது** - ஹைழ் - நிஃபாஸை விட்டும் துப்புரவான (பருவமடைந்த) பெண் மற்றும் ஆண்களில் நின்டும் முஸ்லிமான யாவர்மீதும் கிழக்கு (ஃபஜ்ர்) உதயமானது முதல் சூரியன் மறைவது வரை தெரிந்தோ, பிழையாகவோ, எந்த ஒரு வஸ்தை உள்ளே புகுத்துவதை விட்டும், அபத்தின் ஆசையை விட்டும் நிய்யத்தோடு பிடித்துக் கொள்வதற்குப்

பெயர் நோன்பு. எனினும் மறதியாக மேற்கண்ட எந்தச் செயலையாவது செய்து விட்டால் நோன்பு முறியாது.

**பிழையாக செய்வது என்பதாவது,.** வாய் கொப்பளிக்கும்போது (யதார்த்தமாக) தெரியாமல் தண்ணீர் தொண்டைக்குள் போய் விடுவது போல்.

**நோன்பின் ருக்னு :..** வயிறு, அபம் (மர்மஸ்தானம்) இரண்டையும் ஆசையை நிறைவேற்றுவதை விட்டும் பிடித்துக் கொள்வதாகும்.

**அதன் ஷர்த்துகள் :** முஸ்லிமாக இருப்பது, ஹைழ், நி.ஃ.பாசில்லாமல் தூய்மையாக இருப்பது, நிய்யத் செய்வது. ஜனாபத் (குளிப்பு கடமையாகி) இருப்பதை விட்டும் துப்புரவாயிருக்க வேண்டியது ஷர்த்தல்ல.

## நோன்பு 3 வகை.

1. ரமழானின் அதா நோன்பும், அதன் கழா நோன்பும், தெண்டங்களுடைய (க.ஃ.ப்பாரா) நோன்பும் .ஃ.பர்ளு.

2. நேர்ச்சை நோன்பு வாஜிப். இதை இரண்டாம் .ஃ.பர்ளென்று கூடச் சொல்லப்படும். அதே போல நபில் நோன்பைத் தொடங்கிய பின் அதை நிரப்பமாக்குவதும், அதை முறித்து விட்டால் கழாச் செய்வதும், நேர்ச்சை செய்யப்பட்ட இ.ஃ.திகா.ஃ.புடைய நோன்பும் வாஜிப்.

3. முஹர்ரம் பிறை 10 (ஆஷூரா) தின நோன்புடன் பிறை 9 அல்லது 11ன் நோன்பும், அர.ஃ.பா நோன்பும், மாதத்தின் 13, 14, 15 பிறைகளில் வைக்கப்படும் அய்யாமுல் பீழ் நோன்பும், வியாழன், திங்கள் நோன்பும், ஷவ்வால் மாத 6 நோன்பும் முஸ்தஹப்.

**ஹதீஸில் வருகிறது....** அல்லாஹ்விற்கு மிக உகப்பானது ஹழ்ரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களது (நபிலான) தொழுகையும், நோன்பும் என. அவர்கள் இரவில் 3ல் 1 பங்கு தொழுவார்கள். 6ல் 1 பங்கு உறங்குவார்கள். ஒரு நாள் விட்டு ஒருநாள் நோன்பு வைப்பார்கள்.

(ஷவ்வால் மாத) 6 நோன்புகளை தொடர்ச்சியாகவும் நோற்கலாம். (ஷவ்வால் மாதம் முழுக்க) விட்டு விட்டும் வைக்கலாம்.

இரு பெருநாளிலும், அய்யாமுத்தஷ்ரீக் (துல்ஹஜ் பிறை பத்தோடு சேர்ந்த 11, 12, 13) நாட்களிலும் நோன்பு வைப்பது மக்ரூஹ் தஹ்ரீம்.

ஆஷீரா நாள் மட்டும் நோன்பு வைப்பதும், வெள்ளி, சனியில் தனித்து நோன்பு வைப்பதும் மக்ரூஹ் தன்ஜீஹ்.

இவற்றில் ரமழான் அதா நோன்பும், நாள் குறிக்கப்பட்ட நேர்ச்சை நோன்பும், நஃபிலான (மேற்கண்ட ஆஷூரா போன்ற) நோன்புகளும் இரவு முதல் அரைப்பகலுக்கு முன் (சூரியன் உச்சிக்கு வரும் முன்னரே) குறிப்பாகவோ, அல்லது பொதுவாக நோன்பு வைக்கிறேன் என நிய்யத் செய்தாலோ நிறைவேறி விடும்.

அவை தவிர உள்ள மற்ற நோன்புகளை முதல் நாள் சூரியன் மறையும் முன் நாளை நோன்பு வைக்கிறேன் என்று நிய்யத் செய்தால் நிறைவேறாது. சூரியன் மறைந்தபின் (மஃரிபு முதல்) நிய்யத் செய்தால் கூடும்.

**நாள் குறிக்கப்பட்ட நேர்ச்சைக்கு உதாரணம் :..**

لِلّٰهِ عَلَيَّ صَوْمُ يَوْمِ الْخَمِيْسِ مِنْ هٰذِهِ الْجُمُعَةِ

நான் வரக்கூடிய வியாழக் கிழமை அல்லாஹ்வுக்காக நோன்பு வைக்கிறேன் என நிய்யத் செய்வது போல்.

**ரமழான் அதா நோன்பு நிய்யத்:**

نَوَيْتُ صَوْمَ غَدٍ عَنْ اَدَاءِ فَرْضِ رَمَضَانِ هٰذِهِ السَّنَةِ لِلّٰهِ تَعَالٰى

இவ்வருட ரமழான் மாத, ஃபர்ழான நோன்பை அதாவாக அல்லாஹ்விற்காக நாளை வைக்க நிய்யத் செய்தேன்.

**முஸ்தஹப்பான நோன்பின் நிய்யத் :..** உதாரணமாக அல்லாஹ்விற்காக ஆஷீரா நோன்பை நாளை நோற்க நிய்யத் செய்தேன் எனக் குறிப்பிடுவது.

**பொதுவான நஃபில் நோன்புக்கு :**

نَوَيْتُ صَوْمَ غَدٍ عَنْ صَوْمِ عَاشُوْرَاءَ لِلّٰهِ تَعَالٰى

அல்லாஹ்விற்காக நாளை நஃபில் நோன்பு வைக்க நிய்யத் செய்தேன் என குறிப்பிட்டால் போதும்.

ஷரீஅத்தைப் பொறுத்தவரை பகலென்பது ஃபஜ்ர் முதல் அஸ்தமனம் வரையிலாயிருக்கும்.

நோன்பை இரவில் நிய்யத் செய்யாதவர் காலை விடிந்து அரைப்பகல் வரும்முன் நோன்பின் ஷர்த்துகளோடு இருந்து நோன்பை நிய்யத் செய்தால் கூடும். எனினும் அவர் அப்போது "இன்றைய நோன்பை" என நிய்யத் செய்ய வேண்டும்.

ரமழான் நோன்பையோ, குறிப்பிட்ட நேர்ச்சை நோன்பையோ

கழா செய்தால், அல்லது பொது நேர்ச்சை நோன்பெனில், முறித்த நபில் நோன்பை கழா செய்தாலோ, க.்.ப்பாரா நோன்பு பிடித்தாலோ அதைக் குறிப்பிட்டு இரவில் “நாளை இன்ன நோன்பு வைக்கிறேன்“ என நிய்யத் செய்ய வேண்டுமென்பது நிபந்தனை. மாறாக இந்த நோன்புகளை பகலில் நிய்யத் செய்தால் ஏற்கப்படாது. மாறாக அது பொதுவான நபில் நோன்பாக கருதப்படும்.

நிய்யத்தை (மனதால் உறுதி கொண்டால் போதுமென்றாலும்) நாவால் மொழிவது சுன்னத்.

**பொதுவான நேர்ச்சை நோன்புக்கு உதாரணம்:**

என் நோய் நீங்கி விட்டால் ஒரு நாள் நோன்பு வைக்கிறேன் என நேர்ச்சை செய்வது போல். அல்லது பொதுவாக அல்லாஹ்விற்காக ஒரு நாள் நோன்பு வைக்கிறேன் என நேர்ச்சை செய்வது போல்.

## பிறை

**ரமழான்:** ரமழான் பிறை பார்க்கப்பட்டாலோ, அல்லது மேகமூட்டமாக உள்ள போது ஷ.்.பான் முப்பதாக பூர்த்தி செய்யப்பட்டாலோ தரிபடும்.

ஷ.்.பான் பிறை 30ல் (ஷ.்.பான் பிறை 29 பகல் முடிந்தபின்) பிறை தேடிப் பார்ப்பது வாஜிப்.

ஷக்குடைய (சந்தேகத்திற்குரிய) நாளான ஷ.்.பான் பிறை 30ல் பொதுவான நபில் நோன்பு தவிர இதர நோன்பு நோற்பது

மக்ரூஹ்.

வானம் தெளிவாக உள்ள நாளில் ரமழான் பிறை கண்டதாக பொதுவாக எவர் கூறினாலும் (ஆண், பெண் யார் சொன்னாலும்) ஏற்கப்படும். அதற்காக அவர்கள் சாட்சி சொல்கிறேன் என்று கூற வேண்டிய அவசியமில்லை. ஆனால் ஷவ்வால் பிறைக்கு தண்டனைக்காக ஹத்தடிக்கப்படாத, புத்தி தெளிவுள்ள, பருவ வயதை எட்டிய, முஸ்லிமான, சுதந்திரமுள்ள இரு ஆடவரோ அல்லது அத்தகைய தன்மையுள்ள இரு பெண்களும், ஒரு ஆணும் சாட்சியம் சொல்வதாகக் கூறி மொழிய வேண்டும். இது வான் மேகமூட்டாக இருந்தால் தான். மற்றபடி வானம் தெளிவாக இருந்தால் இரண்டு பிறைக்குமே ஒரு பெரிய கூட்டத்தின் வார்த்தையே ஏற்கப்படும். பெரிய கூட்டத்தின் அளவென்பது இமாமின் யோசனைப்படி ஒப்புவிக்கப்பட்டுள்ளது,

ஒருவர் இரு பிறையையும் பார்த்தார். ஆனால் அவர் பேச்சை ஜமாஅத் ஏற்கவில்லையென்றால் அவர் நோன்பு வைக்க வேண்டும். நோன்பை விட்டால் கழா செய்ய வேண்டும். கஃப்பாரா கிடையாது.

ஈதுல் அழ்ஹா (துல்ஹஜ்) மாத பிறையும், ஏனைய மாத பிறைகளும் ஷவ்வால் பிறை போல.

(ஆக ஓரிடத்தில்) மேற்குப் பகுதியில் வசிப்போர் பிறை கண்டால் கிழக்குப்பக்கம் இருப்பவர்களுக்கும் போதும். மேலும் பகலில் காணப்படும் பிறையை வைத்தும் (அன்று

ரமழான் என) உறுதி செய்யப்படாது. (ஏனெனில் பிறை பகலில் தென்பட்டாலும் பிறகுவரும் இரவு முதலே கணக்கிடப்படும்).

## நோன்பை முறிக்காதவை

நோன்பாளி மறந்து சாப்பிட்டாலோ, மறந்து ஜிமா∴ (உடலுறவு) கொண்டாலோ, தொண்டையில் (தெரியாமல்) புகை, புழுதி, ஈ புகுந்தாலோ, எண்ணை தேய்த்தாலோ, சுர்மா போட்டாலோ, இரத்தம் குத்தி எடுத்தாலோ, மனைவியை முத்தமிட்டு இந்திரியம் வெளிப்படாவிட்டால், எதையாவது பார்த்தோ, யோசித்தோ இந்திரியம் வெளிப்பட்டாலோ, வுளு செய்த பின் வாயிலுள்ள மிச்ச ஈரத்தை எச்சியோடு விழுங்கினாலோ, காதில் நீர் புகுந்தாலோ, காதில் குச்சியை விட்டு அழுக்கெடுத்தாலும், சிறிய வஸ்துவை விழுங்கி விட்டாலோ, வாய் நிரம்ப வாந்தி வந்து விட்டாலும், ஜுனுபாளியாக (குளிப்பு கடமையாக) உள்ள நிலையில் நோன்பைத் துவங்கினாலோ, புறம்பேசினாலோ, மூக்குச்சளியை உறிஞ்சி அது தொண்டையில் புகுந்து விட்டாலோ, நாடியில் தொங்கிய எச்சிலை வாயால் உறிஞ்சி விட்டாலோ, எந்த ஒரு வஸ்துவை (விழுங்காமல்) சுவைக்க மட்டும் செய்தாலோ (குளித்தாலோ, நகம், முடி வெட்டினாலோ) நோன்பு முறியாது. புகை எதார்த்தமாக நுழைந்தால் முறியாது. ஆனால் நாமாக தொண்டையில் நுழைத்தால் நோன்பு முறிந்து போகும். (பீடி சிகரெட் பிடிப்பது நோன்பை முறிக்கும்). காரல் எச்சியை விழுங்கினால்

நோன்பு முறியாது என்றாலும் அதை அவசியம் துப்பி விட வேண்டும். அதுவே பேணுதல். சுவைப்பது மட்டும் நோன்பை முறிக்காது என்றாலும் அது மக்ரூஹ்.

## பிழையாக நோன்பு முறிவதன் விளக்கம்

வுளு செய்கையில் தண்ணீர் தொண்டைக்குள் புகுந்து விடுவது, தூங்கியவாறு குடிப்பது, ஃபஜ்ர் நேரம் வரவில்லை என நினைத்து உடலுறவு செய்வது, அதேபோல சஹ்ர் வரவில்லை என நினைத்து சஹ்ர் சாப்பிடுவது, வம்படியாக பிறரால் நோன்பை முறிக்க வைக்கப்பட்டாலும், நோன்பை முறிக்காதவை நிகழ்ந்த பின் நோன்பு முறிந்து விட்டதென்று நினைத்து கொண்டு நோன்பை முறிக்கக் கூடியவற்றைச் செய்தாலும், கடலை, கொட்டை, எறும்பு போன்றதை (சிறியதை) முழுங்கினாலும், ரமழான் முழுக்க நோன்பு வைப்பதை நிய்யத்தே செய்யாமல் நோன்பு வைத்தாலும், நிய்யத் செய்யாமல் விடிந்தபின் ஞாபகத்தோடே ஏதாவது சாப்பிட்டாலும், தொண்டையில் மழைத்துளி, பனித்துளி புகுந்தாலும், மனைவியை முத்தமிட்டு, அல்லது அனைத்து இந்திரியம் வெளிப்பட்டாலும், ரமழான் அதா நோன்பல்லாததை ஃபஸாதாக்கி விட்டாலும், இஸ்தின்ஜா துப்புறவு செய்யும் போது நீர் பின் துவாரத்திலோ அல்லது பெண்ணின் உள் அபத்திலோ புகுந்து விட்டாலோ, தானே வாய் நிரம்ப வாந்தியை உள்ளேயே மீள வைத்தாலோ, ஞாபகத்தோடு வாந்தி எடுக்க முயற்சித்து வாய் நிரம்ப

வாந்தி வந்து விட்டாலோ, பற்களுக்கிடையில் மாட்டிக்கொண்ட கடலை பரிமாணமுள்ளதை விழுங்கி விட்டாலோ, வக்த் உள்ளதென நினைத்து.. ஃபஜ்ர் உதயமானபின் சஹ்ர் செய்தாலோ, வக்த் முடிந்துவிட்டதென நினைத்து மங்ரிபுக்கு முன் இஃப்தார் செய்தாலோ (நோன்பு முறிந்து விடும்). இச்சமயங்களில் நோன்பை கழா மட்டும் செய்வார். கஃப்பாரா (தெண்டம்) இல்லை.

**முக்கிய குறிப்பு :** இஸ்தின்ஜா துப்புரவு செய்கையில் பின் துவாரத்திற்குள்ளோ, பெண்ணின் முன், பின் துவாரத்திற்குள்ளோ நீர் புகுந்தால் நோன்பு முறிந்து விடுமென்பதால் (ஆறு, குளம், குட்டை போன்ற) தண்ணீருக்குள் இருந்து இஸ்தின்ஜா செய்வதை தவிர்ந்து கொள்ள வேண்டியது வாஜிப்.

ஞாபகத்தோடே ரமழான் அதா நோன்பில் இரண்டிலொரு துவாரத்தில் ஜிமாஃ (உடலுறவு) செய்தாலும், செய்யப்பட்டாலும், ஏதாவதொரு வஸ்தை சாப்பிட்டாலும், குடித்தாலும், மருந்தைக் குடித்தாலும், மழை, பனியை விழுங்கினாலும், அடுத்தவரின் எச்சியை விழுங்கினாலும், ரத்தம் வாங்குபவர் நோன்பை முறிக்குமென்று தெரிந்தும் ரத்தத்தைக் குடித்தாலும் (நோன்பு முறிந்து விடும்). களா செய்வதோடு கஃப்பாராவும் (தெண்டமும்) அவசியம்.

**கஃப்பாரா யாதெனில்,,** நல்ல நிலையிலுள்ள அடிமையை உரிமை விடுதல் அல்லது இரு பெருநாளும், அய்யா முத்தஷ்ரீகும் வராத இரு மாதங்கள் தொடர்ந்து நோன்பு வைப்பது. அது முடியாவிட்டால் 60 ஏழைகளுக்கு

காலை, மாலை இரு வேளை திருப்தியான உணவு வழங்குவது அல்லது ஒவ்வொரு மிஸ்கீனுக்கும் அரை மரைக்கால் மணிகோதுமை அல்லது ஒரு மரைக்கால் பேரித்தம்பழம், அல்லது தொலி கோதுமை அல்லது அதன் கிரயத்தைக் கொடுப்பார்.

பல சமயம் ஞாபகத்தோடு நோன்பை முறித்தாலும் ஒரு க.்.ப்பாரா போதும். எனினும் க.்.ப்பாரா கொடுத்த பின் அதுபோல நிகழ்ந்தால் மறுபடியும் க.்.ப்பாரா கொடுக்க வேண்டும்.

தங்கடத்தால் நோன்பை முறித்தாலும், (பகலின் இடையில்) பெண் ஹைழ், நி.்.பாசிலிருந்து சுத்தமாகி விட்டாலும், அரைப்பகலுக்கு முன்போ, பின்போ சாப்பிட்டபின் முஸா.்.பிர் (பயணி) முகீமாகிவிட்டாலும், பைத்தியக்காரர் தெளிவு பெற்றுவிட்டாலும், நோயாளி சுமடைந்து விட்டாலும், சிறுபிள்ளை பாலிகாகி விட்டாலும், கா.்.பிர் முஸ்லிமாகி விட்டாலும், மிச்ச பகலுக்கு (நோன்பு வைக்க முடியாது. கடமையில்லை என்றாலும்) இ.்.ப்தார் நேரம் வரை (வயிறு, அபம்) ஆகிய இரு ஆசைகளையும் தவிர்ந்து கொள்ள வேண்டியது வாஜிப்.

கடைசியாகச் சொல்லப்பட்ட இருவர் தவிர மற்றவர்கள் நோன்பை கழா (மட்டும்) செய்வர்.

நோயாளியும், பைத்தியமானவரும் ஜவாலுக்கு முன்பே (சூரியன் உச்சிக்கு வருவதற்கு முன்பே சுகமடைந்து எதுவும் சாப்பிட்டிரா நிலையில்) நோன்பை நிய்யத் செய்தால் கூடும்.

ஹைழ், நி∴பாஸ் சுத்தமான பெண் (மேற்கண்ட விதம்) நிய்யத் செய்தால் (நோன்பு) நிறைவேறாது. ஹைழ், நி∴. பாஸின் போது (அவ்விதம்) சாப்பிடாமல், குடிக்காமல் இருப்பது ஹராம். நோயாளியும், பயணியும் அவ்வாறு செய்ய வேண்டியது வாஜிபல்ல (அவசியமல்ல.) எனினும் பகிரங்கமாக சாப்பிடாமல் தனிமையில் உண்பர்.

சிறுபிள்ளை நோன்பு வைக்க சக்தி பெற்றால் ஏவப்படும். 10 வயதில் நோன்பை விட்டால் அடிக்கவும். தொழுகையைப் போல். ஆயினும் நோன்பை முறித்தால் கழா செய்ய வேண்டியதில்லை. தொழுகையை முறித்தால் கழா செய்யும் படி உத்தரவிடப்படும்.

நோன்பாளி தங்கடமின்றி எதையாவது (விழுங்காமல்) மெல்லுவதும், சுவைப்பதும், வுளுவில் வாய் கொப்பளிக்கும் போதோ, மூக்குக்கு தண்ணீர் செலுத்தும்போதோ கடப்புச் செய்வதும், நோன்பை முறிக்கும் காரியம். வரம்பு மீறி விடுவதை அஞ்சியும் மனைவியை முத்தமிடுவதும், அணைப்பதும், பிடிப்பதும்,
உமிழ்நீரை (எச்சிலை) வாயில் சேமிப்பதும், முழுங்குவதும், நோன்பை விட்டு பலி கேடாக்கும் என்கிற எண்ணமுள்ள காரியத்தைச் செய்வதும் மக்ரூஹ்.
அலங்காரத்தை நாடாமல் அழகை நாடி எண்ணை பூசுவதும், சுர்மா போடுவதும், கடைசி பகலில் மிஸ்வாக் செய்வதும், குளிர்ச்சிக்காக குளிப்பதும், ஈரத்துணியை சுற்றிக் கொள்வதும் மக்ரூஹல்ல.
சஹர் சாப்பிடுவதும், இரவுதான் என்பதில் சந்தேகம்

இல்லாதிருந்தால் அதை பிற்படுத்துவதும், மேகமூட்டமில்லாத நாளில் நட்சத்திரம் வெளிப்படும் முன்பே இ.ஃ.ப்தார் செய்வதும் முஸ்தஹப்.

சந்தேகத்திற்குரிய நேரத்தில் சஹரை பிற்படுத்துவது மக்ரூஹ். மேகமூட்டமாக உள்ள நாளில் (மஃரிப்) பாங்கு சொல்லப்பட்டாலும் தன் எண்ணத்தில் பொழுது அடைந்தது மிகைக்காமலிருக்கும் வரை நோன்பு திறக்கக் கூடாது. அப்போது நோன்பு திறக்காமல் மஃரிபு தொழார். இனிப்பான வஸ்தால் நோன்பை திறப்பார். பேரித்தம்பழம் சிறந்தது. அடுத்தது வுளூவுக்கு ஆகுமான நல்ல நீரால் நோன்பு திறப்பது. பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் 3 பேரிச்சம் பழங்களால் , சுடாத (பழங்கள் பானங்கள் போன்ற) வஸ்துக்களால் நோன்ப திறப்பார்கள். இ.ஃ.ப்தார் நேரம் துஆவிற்கான நேரம். இ.ஃ.ப்தாரில் “அல்லாஹும்ம லக சும்து“ துஆ ஓதுவது சுன்னத். இ.ஃ.ப்தார் விருந்தில் கலந்து கொண்ட பின்

اَفْطَرَ عِنْدَكُمُ الصَّائِمُوْنَ وَاَكَلَ طَعَامَكُمُ الْاَبْرَارُ
وَصَلَّتْ عَلَيْكُمُ الْمَلَائِكَةُ

“அ.ஃ.ப்தர இன்தகுமுஸ் சாயிமூன். வ அகல தஆமகுமுல் அப்ரார், வசல்லத் அலைகுமுல் மலாயிகஹ்“ என்று விருந்தளித்தவருக்காக துஆச் செய்வார். இ.ஃ.ப்தாரில் வயிறு புடைக்க சாப்பிடக் கூடாது. அது வணக்கத்தில் சோம்பேறித்தனத்தை உண்டாக்கி விடும்.

நோன்பாளிக்கு உணவளிப்பதன் நன்மைகள், சிறப்புகள் குறித்து ஏராளமான ஹதீஸ்கள் வந்துள்ளது.

### நோன்பின் மர்தபா (படித்தரங்)கள் 3.

அதில் தாழ்ந்தது. (வயிறு அபம்) இரு இச்சையை தவிர்வது. அடுத்தது பாவங்களை விட்டும் தவிர்வது. கபூலாக இது முக்கியம். மேலானது கல்பை படைப்புகளை விட்டும் முழுக்க அல்லாஹ்வின் நினைவில் திருப்பவது. இதே நபிமார், வலிமார்களின் நோன்பு.

முஸா.ஃ.பிரும், தன் அல்லது தன் பிள்ளை விஷயத்தில் பயந்த கர்ப்பஸ்திரியும், தாய்ப்பால் கொடுப்பவளும், நோய் கூடிவிடுமென பயப்படும் நோயாளியும் நோன்பை விடலாம். பின் கழா செய்வர். மறு ரமழான் வந்துவிட்டால் அதாவை முற்படுத்தி, கழாவை பிற்படுத்துவர். முஸா.ஃ.பிர் முடிந்தால் நோன்பு வைப்பதே நல்லது. தங்கடத்தோடு நோன்பை விட்டவர் மவ்த்தானால் ஃ.பித்யா அளிக்க வசிய்யத் செய்ய வேண்டியதில்லை. நோன்பு நோற்க முடியா வயோதிகர் விடலாம். வசதியிருந்தால் ஃ.பித்யா கொடுப்பது வாஜிப். இல்லாவிடில் பாவமன்னிப்பு தேடுவார்.

## இ.ஃ.திகா.ஃ.ப் விளக்கம்

அது ஆண் ஜமாஅத் நடக்கும் பள்ளியிலும், பெண் வீட்டின் தொழும் அறையிலும் தரிபடுவது. பள்ளி உள்ளேயே இருப்பதும், ஜனாபத், ஹைழ், நி.ஃ.பாஸை விட்டும் சுத்தமாயிருப்பதும் ஷர்த். இ.ஃ.திகா.ஃ.பை நேர்ச்சை செய்தால் வாஜிப். ரமழான் பின் பத்தில் சுன்னத் முஅக்கதா. மற்ற

நாடிய நேரம் முஸ்தஹப். முந்திய இரண்டுக்கும் நோன்பு ஷர்த். ந.்.பில் இ.்.திகா.்.ப் கொஞ்ச நேரமும் இருக்கலாம். பள்ளியில் நபில் இ.்.திகா.்.ப் நிய்யத்தில் நுழைபவர்

نَوَيْتُ الْاِعْتِكَافَ مَادُمْتُ فِيْ هٰذَا الْمَسْجِدِ

“நவையத்துல் இ.்.திகா.்.ப மாதும்து.்.பீஹாதல் மஸ்ஜித்“ என்பார். வாஜிப், சுன்னத் இ.்.திகா.்.பில் ஈதுக்கு ஜும்ஆவுக்கு (அப்பள்ளியில் நடக்காதபோது), மற்றும் மல, ஜல கழிக்க, வுளு செய்ய, குளிக்க வெளியில் போகலாம். இக்காரணமின்றி மறந்தே வெளியானாலும் முறிந்து விடும்.

காரியம் முடிந்தபின் தேவையின்றி சிறிது நேரம் வெளியீல் இருந்தாலும் இ.்.திகா.்.ப் முறிந்து விடும். அவர் பள்ளிக்குள் சாப்பிடலாம். குடிக்கலாம். உறங்கலாம் ஏன் தன் குடும்ப செலவில் அத்தியாவசியத்திற்காக வியாபாரம் பேசலாம். ஆனால் சரக்கை பள்ளிக்குள் கொணரக் கூடாது. அது மக்ரூஹ். உணவு கொணர ஆண் இல்லாவிட்டால் போய் சாப்பிட்டு உடனே வந்து விட வேண்டும். வாய் மூடியிருப்பதும், நன்மையல்லாததைப் பேசுவதும் மக்ரூஹ். ஆக திக்ர், திலாவத், சலவாத் மார்க்கக் கல்வி, இஸ்லாமிய வரலாற்றை, தீன் விஷயங்களை பேசுவது, எழுதுவது சிறப்பு. உடலுறவு, படித்தல், முத்தமிடல், அணைத்தலால் இ.்.திகாப் முறியும்.

இ.்.திகாப் மிக சிறப்பான, அநேக நன்மைகள் தரும் அற்புத வணக்கம். அதில் இக்லாஸ் அவசியம்.



 

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

அது மன்னாதி மன்னன், மக்த்தான ரப்புல் ஆலமீன் அல்லாஹு ஜல்ல ஷ.்னுஹு வதஆலாவின் வீட்டில் தஞ்சமடைவது. எனவே அவனது அருளை, மன்னிப்பை வேண்டிய மட்டும் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். அந்த மகா கொடையாளியின் வீட்டுக்குள் நுழைந்து வெறுங்கையோடு திரும்பி விடக் கூடாது என்ற வைராக்கியத்தோடு பள்ளியில் நுழைய வேண்டும்.



# ஹஜ்ஜின் விளக்கம்

இஹ்ராம் கட்டி உடலுறவு கொள்ளாது, ஒருபாவமும் செய்யாது ஹஜ்ஜை நிறைவேற்றியவர் தன் தாய் அவரைப்பெற்ற(போ)து போல் பாவமற்றவராகத் திரும்புகிறார். வசதி, வாய்ப்பிருந்தும் ஹஜ் செய்யாமல் மவ்த்தானவர் யூதராகவோ, கிறிஸ்தவராகவோ மரணிக்கட்டும். ஹஜ்ஜுக்கு கிளம்பி வழியில் மவ்த்தாகிவிட்டால் ஒவ்வொரு ஆண்டும் ஹஜ், உம்ரா செய்வோரின் கூலி போல் அவருக்கு கியாமநாள் வரை கிடைத்துக்கொண்டிருக்கும்... என்றவாறு பல ஹதீஸ் ஷரீப்கள் ஹஜ்ஜைப் பற்றிப் பேசுகிறது.

## ஹஜ் என்பது:

ஹஜ்ஜின் நிய்யத்தோடு இஹ்ராம் கட்டி நஹ்ருடைய (துல்ஹஜ் 10ம்) நாள் ஃபஜ்ர் முதல் அசர் வரை தவாஃபு செய்தவாறு கஃபாவை ஜியாரத் செய்வது. அரபா நாள் (துல்ஹஜ்9) மதியம் சறுகினது முதல் நஹ்ருடைய நாள் ஃபஜ்ர் வரை தரிபட்டவராக அரஃபாவை ஜியாரத் செய்வது. இதில் இஹ்ராம் ஷர்த். அரபாவில் தரிபடுவதும், தவாபுஜ்ஜியாரத் செய்வதும் ருக்ன். ஹஜ் ஆயுளில் ஒருமுறை ஃபர்ள். பிற்படுத்துவது பாவம். அத்தகையவரின் சாட்சி ஏற்கப்படாது. ஹஜ் செய்யாமலேயே மவ்த்தாகிட்டால் பாவியாய் மரணிப்பார்.

## அது ஃபர்ளாக 8 ஷரத்துகள்:

1. இஸ்லாம். 2. புத்தித் தெளிவு 3 புலூகு
4. சுதந்திரம் 5. தன் ஊர், தேசத்தில் உள்ளோர் கிளம்பும் போது தானும் செல்ல இயல்வது
6. நடுத்தரமான உணவு செலவுகடகு வசதி இருப்பது.
7. வாகன வசதி (டிக்கெட் செலவுக்கு பணம்) இருப்பது.
8. (இஸ்லாமிய ஆட்சி நடவா) தாருல் ஹர்பிலுள்ள முஸ்லிமுக்கு ஹஜ் ஃபர்ள் என்பது தெரிந்திருப்பது.

எனினும் தான் போய் வரும் வரை தனது குடும்பத்தை பராமரிக்கவும், தன் தொழில், வியாபாரத்தை கவனித்துக்கொள்ளவும், கடனை அடைக்கவும் போக ஹஜ் போய் வர வசதி இருக்க வேண்டும்.

## ஹஜ்ஜை நிறைவேற்ற 5 ஷரத்துகள் உண்டு.

1. உடல் ஆரோக்யம்
2. பயண வழியில் உயிர், உடைமைகளுக்கு பிரச்சினை இருக்கக் கூடாது.
3. சிறையில் இருக்கக் கூடாது
4. பெண்ணுக்கு கணவன் அல்லது (தந்தை, மகன், சகோதரர் போன்ற ) மஹ்ரமின் துணை அவசியம்
5. பெண் இத்தாவில் இருக்கக் கூடாது. (ஷர்த், ருக்ன் என்பது ஃபர்ளு).

# ஹஜ்ஜின் வாஜிபுகள்

மீகாத்தில் இஹ்ராம் கட்டுவது, பொழுதுபடரும்வரை அரபாவில் தங்குவது, நஹ்ருடைய நாள் கிழக்கு வெளுத்தபின் பொழுது (சூரியன்) உதிக்கும் முன் முஜ்தாலிபாவில் தரிபடுவது, ஜம்ரா (ஷைத்தானுக்கு கல்) எறிவது, ஹஜ்ஜுக்கும், உம்ராவிற்கும் சேர்த்து இஹ்ராம் கட்டிய காரினும், உம்ரா செய்த பின் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டிய மு(த்)தமத்திஉம் குர்பானி கொடுப்பது, முடி இறக்குவது, அதை ஹரமில் நஹ்ருடைய நாளொன்றில் செய்வது, தலைமுடி இறக்கும் முன் ஜம்ரா எறிவது, காரினும், மு(த்)தமத்திஉம் ஜம்ராவுக்குப்பின் குர்பானி தந்து பின் முடியிறக்குவது, தவா.'.புஜ் ஜியாராவை நஹ்ருடைய நாட்களில் செய்வது, ஹஜ் மாதங்களில் ஸ.'.பா, மர்வாவுக்கிடையில் ஸஈ செய்வது, அந்த ஸஈயை தவா.'.புக்குப்பின் செய்வது, அதில் நடக்க முடிந்தவர் நடந்து போவது, ஸஈயை ஸ.'.பாவிலிருந்து துவங்குவது, (மக்காவிலிருந்து விடை பெறும்போது செய்யப்படும்) தவா.'.புல் விதாவையும், இதர தவா.'.புகளையும் ஹஜ்ருல் அஸ்வதிலிருந்து துவங்குவது, எல்லா தவா.'.பிலும் ஏழு சுற்றுக்குப்பின் இரண்டு ரக்அத் தொழுவது, ஹதீமுக்கு பின்னால் தவா.'.பு செய்வது, தவா.'.பை வலது புறமிருந்து துவங்குவது, நடக்கமுடிந்தவர் நடப்பது, இரு (சிறு, பெரு) துடக்கிலிருந்தும் துப்புரவாக இருப்பது, அவ்ரத்தை மறைப்பது, தவா.'.புஜ்ஜியாராவில் மிகுந்ததைச் செய்தபின்

கொஞ்சத்தை செய்வது, விலக்கப்படவைகளை விடுவது.

**விலக்கப்பட்வை:** ஆண் தைத்த ஆடை உடுத்துவதும், தலை, முகத்தை மறைப்பதும், பெண் முகத்தை மறைப்பது, பெண் முன் ஜிமா:. பற்றி பேசுவது, பாவகாரியங்களை செய்வது, தர்க்கம் செய்து கொள்வது, வேட்டை மிருகத்தை கொல்வது, (கொல்பவருக்கு) அதை சைக்கினை செய்து சுட்டிக்காட்டுவது.

## ஹஜ்ஜின் சுன்னத்துகள்

இஹ்ராம் கட்ட நாடினால் குளிப்பது அல்லது வுளு செய்வது, வெளுத்த அல்லது புதிய தூய்மையான வெள்ளைத் துணி இரண்டெடுத்து ஒன்றை (வேட்டியாக) கட்டி, மற்றொன்றை முதுகில் போடுவது, இஹ்ராம் கட்டும் முன் உடலில் நறுமணம் பூசுவது, இரண்டு ரக்அத் தொழுவது, இஹ்ராம் கட்டிய பின் தொழுதாலும், மேட்டில் ஏறினாலும், பள்ளத்தில் இறங்கினாலும், வாகனங்களை சந்தித்தாலும், சஹர் வக்துகளிலும் தல்பியாவை மிகுதம் சொல்வது. மடக்கி மடக்கி தல்பியா சொல்வதும், சலவாத் மிகுதமாய் சொல்வதும், சொர்க்கத்தையும், நல்லோரின் சகவாசத்தையும் (துஆ) கேட்பது, நரகைவிட்டு காவல் தேடுவதும், மக்காவில் புக குளிப்பதும், பகலில் மேற்புற வாசலில் புகுவது, சிறப்பாகிய க:.பாவை தரிசிக்கும் போது தல்பியா, தஹ்லீல் சொல்வதும், க:.பாவைக் கண்டதும் தமக்கு

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

அத்தியாவசியமான துஆவைச் செய்வதும், குதூமுடைய தவா.்.பும் (வந்ததும் செய்வது) அதில் மேல் துணியை வலது கம்கட்டுக்குக் கீழாக்கி அதன் முந்தானையை இடது தோளில் போடுவதும், அதில் முந்தின 3 தவா.்.பில் இரு தோளையும் அசைத்து அக்ழுரைனில் சஈ செய்வதும், நிறைய தவா.்.ப் செய்வதும், ஹஜ்ஜின் 7ம் நாள் மக்காவில் ளுஹர் தொழுதபின் இமாம் குத்பா ஓதுவதும், 8ம் நாள் பொழுது உதித்த பின் மக்காவிலிருந்து மினா போவதும், அங்கு இரவு தங்குவதும், பின் அரபா (9ம்) நாள் பொழுது உதித்தபின் அங்கிருந்து அரபாத் போவதும், அங்கு ஜவாலுக்குப்பின் ளுஹருக்கு முன் இமாம் குத்பா ஓதுவதும், அங்கு ளுஹர், அசரை ஜம்உ செய்து தொழுத பின் மவ்கி.்.பில் (தங்கியுள்ள கூடாரத்தில்) உள்ளச்சத்தோடு அழுவதும், யாவர்க்காகவும் துஆச் செய்வதும், பொழுது அடைந்தபின் அர.்.பாத்தை விட்டும் கிளம்பி முஜ்தலிபாவில் வாதீ முஹஸ்ஸரை (துரிதமாக) நீங்கி குஜஹ் மலையருகில் இறங்குவதும், அங்கு இரவு கழிப்பதும், மினாவில் தங்கும் நாட்களில் தம் சாமான்களை உடன் வைத்துக்கொள்வதும், ஹஜ் மட்டும் செய்யும் மு.்.ப்ரிது குர்பானி கொடுப்பதும், (பொதுவாக குர்பானி தந்த யாவரும்) குர்பானி இறைச்சி உண்பதும், நஹ்ர் நாளில் குத்பா ஓதுவதும், மினா விலிருந்து கிளம்பிய பின் கொஞ்ச நேரமாவது முஹஸ்ஸப் எனும் மக்காவின் முற்ற வெளியில் இறங்குவதும், ஜம்ஜம் நீரருந்துவதும், வயிறு நிரம்ப குடிப்பதும், குடிக்கும்போது க.்பாவை நோக்கி நிற்பதும், ஜம்ஜமை தலையில், உடலில்

தெளித்துக் கொள்வதும், ஹஜருல் அஸ்வதுக்கும், க.்.பாவின் வாசலுக்குமிடையிலுள்ள முல்தஜிமை பற்றிப்பிடித்துக்கொள்வதும், முகத்தையும் நெஞ்சையும் அதில் வைத்து க.்.பா திரைகளை (உடலோடு) சேர்த்து மண்றாடுவதும், அப்போது பயபக்தியோடு தக்பீர், தஹ்லீல், சலவாத் ஓதி துஆ செய்வதும், க.்.பா வாசலை முத்தமிடுவதும், கிளம்பும்போது க.்.பாவைப் பார்த்துக்கொண்டே கண்ணீரோடு விடை பெறுவதுமாயிருக்கும்.

தனக்கும், பிறருக்கும் கஷ்டம் இல்லையென்றால் க.்.பாவுக்குள் போவது முஸ்தஹப், அங்கு பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தொழுத இடத்தை நாடிக் கொள்ளவும்.

ஷவ்வால், துல்க.்.தா, ஹஜ்ஜின் 10 நாட்கள் ஹஜ்ஜின் மாதங்களாகும். இந்த மாதங்களுக்கு முன் ஹஜ்ஜுக்கு இஹ்ராம் கட்டுவது மக்ரூஹ்.

# உம்ரா

ஆயுளில் ஒருமுறை சுன்னத் முஅக்கதா. உம்ரா என்பது இஹ்ராம், தவா.்.ப், சஈ, சிரைப்பது அல்லது முடி வெட்டுவது. அதில் இஹ்ராம் ஷர்த், தவா.்.பில் மிகுதம் செய்வது ருக்ன். மற்றவை வாஜிப். உம்ரா வருடம் முழுக்க செய்யலாம். ரமழானில் முஸ்தஹப். அரபா நாளும், அதன்பின் 4

நாட்களும் மக்ரூஹ். இஹ்ராமின் மீகாத்துகள் 5. மதீனா வாசிகளுக்கு துல் ஹுலை.'.பா, இராக் வாசிகளுக்கு தாத்து இர்க், ஷாம் வாசிகளுக்கு ஜுஹ்.'.பா, நஜ்துகாரர்களுக்கு கான், யமனிக்கு யலம்லம். மற்ற தேசத்தவர்கள் எந்தெந்த பக்கமாக வருகிறார்களோ அவர்களுக்கு அது மீகாத். மக்கா நுழைய நாடியவர் இந்த இடங்களை விட்டு இஹ்ராம் கட்டுவதை பிற்படுத்துவது ஹராம். ஹஜ்ஜல்லாத ஹாஜத்துக்காக போனாலும் சரியே. இந்த மீகாத்துக்குள்ளே உள்ளவர்கள் (உள்ளூர்வாசிகள்.). மக்காவில் இஹ்ராமின்றி புகலாம். கூடும். மக்கா வாசிகள் ஹஜ்ஜு செய்ய நாடின் இஹ்ராம் கட்ட மீகாத் ஹரம் ஷரீ.'.பே. உம்ரா செய்ய நாடின் அவர்களுக்கு மீகாத் ஹில்.

“ஹரம்“ என்பது மக்காவைச் சுற்றிலும் ஹழ்ரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் (எல்லையைக் குறிக்க) நட்டு வைத்த அடையாளங்களுக்குள் உள்ள பகுதி. அந்த எல்லைக்கும், மீகாத்துக்கும் இடையிலுள்ள பகுதி ,“ஹில்“ எனப்படும்.

அரபா நாள் (அங்கு) வெள்ளிக் கிழமை வந்தால் அது ஹஜ்ஜுல் அக்பர் (மிகப் பெரிய ஹஜ்). 70 ஹஜ்ஜை விட சிறப்புடையது. செல்வந்தரின் ஹஜ் ஏழையின் ஹஜ்ஜை விட சிறந்தது. எனினும் பெற்றோரை கவனித்துக் கொள்ள வேண்டி இருப்பின் அவர்களது அனுமதியின்றிப் போவது மக்ரூஹ். நபிலான ஹஜ்ஜை விட பெற்றோருக்கு வழிப்படுவது ஏற்றம்.

# ஹஜ் செய்யும் முறை

ஹஜ் செய்ய நாடின் மீகாதில் இஹ்ராம் கட்டுவீர். அதற்கு முன் வுளு செய்வீர். குளிப்பது மிகச் சிறப்பு. நகம் வெட்டுவது, மீசையை கத்தரிப்பது, கம்கட்டு ரோமம் பிடுங்குவது, அடி முடி எடுப்பது, தலை முடி எடுப்பது, ஹலால் ஜிமா.ஃ. செய்வதும், எண்ணை தேய்ப்பதும், முஸ்தஹப். சரீரத்தில் மணம் பூசி, இஹ்ராம் உடை அணிந்து, 2 ரக்அத் தொழுது

اَللّٰهُمَّ اِنِّيْ اُرِيْدُ الْحَجَّ فَيَسِّرْهُ لِيْ وَتَقَبَّلْهُ مِنِّيْ

"அல்லாஹும்ம இன்னீ உரீது ல்ஹஜ்ஜ .ஃ.பயஸ்ஸிர் ஹுலீ வ தகப்பல் ஹுமின்னீ" என்று கூறி தொழுத உடன் ஹஜ்ஜை நிய்யத் செய்து தல்பியா சொல்லி தல்பியாவாகிறது-

لَبَّيْكَ اَللّٰهُمَّ لَبَّيْكَ،

لَا شَرِيْكَ لَكَ لَبَّيْكَ، اِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَا شَرِيْكَ لَكَ،

"லப்பைக் அல்லாஹும்ம வன் நி.ஃ.ம(த்)த லக வல்முல்க லகஷரீகலக்" இதை விடக் குறைத்திடாதீர் எனினும்

لَبَّيْكَ وَسَعْدَيْكَ وَالْخَيْرُ كُلُّهُ بِيَدِكَ لَبَّيْكَ وَالرَّغْبَاءُ اِلَيْكَ

" லப்பைக் வச.ஃ.தைக் வல்கைரு குல்லுஹு பியதிக லப்பைக் வர்ருஙபாஉ இலைக்" என கூட்டிக் கொள்வீர். இதன்பின் விலக்கப்பட்ட விஷயங்களைச்

செய்யக் கூடாது. தொழுதபின், மேட்டில், பள்ளத்தில், வாகனத்தில், சஹ்ரில் சப்தமாக தல்பியா கூறிக் கொண்டே இருப்பீர். மக்காவில் மேற்புற வாசலில் பகலில் நுழைவது முஸ்தஹப். அப்போது புகும்போது

اَللّٰهُمَّ هٰذَا حَرَمُكَ وَمَاْمَنُكَ وَقُلْتَ وَقَوْلُكَ الْحَقُّ وَ
مَنْ دَخَلَهُ كَانَ اٰمِنًا اَللّٰهُمَّ حَرِّمْ لَحْمِيْ وَدَمِيْ عَلَى النَّارِ
وَقِنِيْ عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ

"அல்லாஹும்ம ஹாதா ஹரமுக. வம.:.மனுக வகுல்(த்)த வகவ்லுகல் ஹக்கு. வமன் தகலஹுகான ஆமினா. அல்லாஹும்ம ஹர்ரிம் லஹ்மீ வதமீ அலன் நார். வகினீ அதாபக யவ்ம துப்அசு இபாதக என்று துஆ செய்து- மஸ்ஜிதுல் ஹராமில் பாபுஸ்ஸலாமில்

بِسْمِ اللّٰهِ وَعَلٰى مِلَّةِ رَسُوْلِ اللّٰهِ اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ بَلَّغَنِيْ
بَيْتَهُ الْحَرَامَ اَللّٰهُمَّ افْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ وَاَدْخِلْنِيْ
فِيْهَا

பிஸ்மில்லாஹி வ அலா மில்ல(த்)தி ரசூலில்லாஹி அல்ஹம்துலில்லாஹில்லதீ பல்லகனீ பை(த்)த ஹுல் ஹராம். அல்லாஹும்ம.:.ப் தஹ்லீ அப்வாப ரஹ்ம(த்)திக வ அத்கில்னீ .:.பீஹா" என்று கூறி புகுவாய்.

க.்.பாவைக் கண்டதும் லாஇலாஹ இல்லல்லாஹுு வல்லாஹுு அக்பர் 3 முறை கூறி

اَللّٰهُمَّ اَنْتَ السَّلَامُ، وَمِنْكَ السَّلَامُ، حَيِّنَا رَبَّنَا بِالسَّلَامِ، وَاَدْخِلْنَا دَارَ السَّلَامِ اَللّٰهُمَّ زِدْ بَيْتَكَ هٰذَا تَشْرِيفًا وَّمَهَابَةً وَّتَعْظِيْمًا اَللّٰهُمَّ تَقَبَّلْ تَوْبَتِيْ وَاَقِلْنِيْ عَثْرَتِيْ وَاغْفِرْلِيْ خَطِيْئَتِيْ

அல்லாஹுும்ம அன்தஸ்ஸலாம். வமின்கஸ்ஸலாம் அ அத்கில்னா தாரஸ்ஸலாம். அல்லாஹுும்ம ஜித் பைதக ஹாதா தஷ்ரீ.்.பவ் வமஹாப(த்)தவ் வ த.்.ளீமா அல்லாஹுும்ம தகப்பல் தவ்ப(த்)தீ வ அகில்னீ அஸ்ர(த்)தீ வங்.்.பிர்லீ க(த்)தீ அ(த்)தீ. என்று கூறி பின் தவா.்.ப் செய். ஆனபோதே ஹஜ்ருல் அஸ்வதை முன்நோக்கி தொழுகைக்கு போல் இரு கைகளையும் உயர்த்தி தக்பீர், தஹ்லீல் சொல்லி, யாருக்கும் இடைஞ்சல் இல்லாமல் இரு கையையும் ஹஜ்ருல் அஸ்வத் மீது வைத்து இரு கைகளுக்கிடையில் வாயை வைத்து சப்தமில்லாமல் முத்தமிடு. முடியாவிட்டால் கையிலுள்ள வஸ்தால் அதைத் தொட்டு அவ்வஸ்தை முத்தமிடு. மேல் துணியின் நடுவை வலது கம்கட்டுக்குக் கீழாக்கி இரு முந்தானை யையும் ஹதீமையும் சேர்த்து 7 முறை தவா.்.ப் செய். முந்தின 3 முறை ரமல் செய். தோளை அசைத்து, அடிகளை செருக்கி வைத்து நட. ஹஜ்ருல் அஸ்வத் அருகே வரும் போதெல்லாம் (முன்

சொன்னபடி ) அதை முத்தமிடு. ருக்னுல் யமானியை கையால் தொடுவது முஸ்தஹப். ஹஜ்ருல் அஸ்வதை முத்தமிட்டு தவா.்.பை முடித்து முல்தஜிமைப் பற்றிக் கொள். பின் மகாமு இப்ராஹீம் (முடியாவிடில்) முடிந்த இடத்தில் 2 ரக்அத் தொழுது ஜம்ஜம் குடித்து பின் ஹஜ்ருல் அஸ்வதை முத்தமிட்டு தக்பீர், தஹ்லீல் சொல்லி வெளி வந்து ச.்.பாவில் ஏறி க.்.பாவை முன்னோக்கி நின்று உயர்ந்த சப்தத்தோடு தக்பீர், தஹ்லீல், சலவாத் ஓதி இரு கை உயர்த்தி வேண்டியதை துஆ செய். அதிலிருந்து பின் இறங்கி மைலைனில் அக்ழரைனில் சஈ செய்தவாறு மர்வாவுக்கு நேரே நடந்து அதிலேறு. சபாவில் செய்தது போல் செய். இது (தவாபில்) ஒரு சுற்று. (இது போல் 7 சுற்று சுற்று வேண்டும்.)

மைலைனில் அக்ழரைன் எனும் பச்சை அடையாளமிடப்பட்ட இடத்தில் ஓட்டமும் நடையுமாக சஈ செய்வதும், மற்ற இடத்தில் ஒடுங்கி நடப்பதும் சுன்னத். பின் இஹ்ராமோடே மக்காவில் தங்கி எவ்வளவு முடியுமோ க.்.பாவை தவா.்.ப் செய்வாய். (நபில்) தொழுவதை விட தவா.்.ப் சிறந்தது. பின் இமாம் (துல்)ஹஜ் 7ம் நாள் ளுஹருக்குப்பின் ஒரு குத்பா ஓதி அதில் ஹஜ் வணக்கம் பற்றி சொல்லிக் கொடுப்பார். பின் 8ம் நாள் மக்காவில் .்.பஜ்ர் தொழுத பின் மினாபோய் 9ம் நாள் .்.பஜ்ர் வரை தரிபபட்டிருந்து, உதயமான பின் அரபாத் போய் ஜவாலுக்கு பின் நமிரா பள்ளியில் இமாம் இரு குத்பா ஓதி ளுஹர், அசரை ஜம்.். செய்து தொழுத பின் கூடாரத்தில் போயிருந்து சலவாத், திக்ர், துஆவில் அழுது ஈடுபட்டு ஜபலுர் ரஹ்மாவுக்கு நெருக்கமாக (அராரத்தில்) தங்குதல் சிறப்பு.

எனினும் ப(த்)தன் உர்னாவைத் தவிர அரபாத் முழுதுமே தங்கலாம். பின் பொழுது அடைந்தபின் முஜ்தலிபா நோக்கி நடந்து குஜஹ் மலைக்கு பக்கமாக இறங்கி மக்ரிபு, இஷாவை ஜம்.'. செய்து தொழ வைக்கப்படும். பின் .'. பஜ்ரை இருளோடு தொழுது முஜ்தலிபாவில் தரிபட்டு தக்பீர், தஹ்லீல், தல்பியா, சலவாத் ஓதி துஆ செய்வீர். ப(த்)தன் முஹஸ்ஸராவைத் தவிர முஜ்தலிபாவில் எங்கும் தங்கலாம். பின் நன்றாக நிலம் தெளிந்த பின் மினாபோய் ப(த்)தனுல்வாதியில் நின்று 7 பொடிக்கற்களை பெருவிரல் -கலிமா விரல் நுனியால் பிடித்து தக்பீர் சொன்னவாறு ஜம்ரதுல் அகபாவில் கல்லெறிவீர். எறிந்த பின் நில்லாமல் வந்து விடுவீர். நாடினால் குர்பானி கொடுப்பாய். பின் தலையை மழிப்பாய் அல்லது முடியைக் குறைப்பாய். இப்போது ஜிமா.'.வைத் தவிர ஏனைய யாவும் ஹலால். பின் நஹ்ருடைய நாளிலோ அல்லது அதற்கடுத்த இரு நாட்களிலோ மக்கா போய் தவா.'.புல் ஜியாரத் செய். இப்போது உமக்கு ஜிமாஉம் ஹலால். பின் மினா போய் நஹ்ருடைய 2ம் நாள் குத்பா ஓதி அதிலே (கல்) எறியுதல் மற்றும் மற்ற இபாதத்களையும் படித்துக் கொடுப்பார். மஸ்ஜிதுல் கை.'.பை அடுத்து ஜம்ர(த்)துல் ஊலா, பின் ஜம்ரதுல் வுஸ்தா பின் ஜம்ரதுல் அகபா. இந்த மூன்றிலும் ஏழு, ஏழு கல்லெறிந்து அல்லாஹ்வைப் புகழ்ந்து தஹ்லீல், தக்பீர், சலவாத் சொல்லி யாவர்க்காகவும் துஆச் செய்வீர். 3ம் எறிதலுக்குப் பின் அங்கு நிற்பதோ, துஆவில் ஈடுபடவோ செய்யாமல் உடனே வந்து விடுவீர்.

பின் அடுத்த நாளும், அதற்கடுத்த நாளுமிருந்தாலும் அவ்வாறே செய்வாய். பின் முஹஸ்ஸபு எனுமிடத்தில் போய் இறங்கி மக்கா செல்வீர். அங்கிருந்து கிளம்ப நாடினால் பயணதவா.ஃ.பு (தவா.ஃ.புல் விதா.ஃ.) செய்வீர். (இதில் ரமல், ச.ஈ இல்லாமல் சாதாரணமாக நடந்தவாறு தவா.ஃ.பு செய்) இது (வெளியூர்காரர்களுக்கே) மக்கா காரர்களுக்கல்ல.

பின் தவாபுடைய 2 ரக்அத் தொழுது, மூச்சு விட்டு மூச்சு விட்டு வயிறு நிரம்ப கிப்லா நோக்கி நின்று ஜம்ஜம் அருந்துவீர். முல்தஜிமை பற்றி முகம், நெஞ்சை ஒற்றிக் கொள்வீர். அழுது, துஆ செய்து பிரியாவிடை தந்து முதுகைக் காட்டாது க.ஃ.பாவை முன்னோக்கியவாறு கண்ணீர் மல்க வெளியேறுவீர். அப்போது

اَللّٰهُمَّ إِنَّ هٰذَا بَيْتُكَ الَّذِيْ جَعَلْتَهُ مُبَارَكًا وَّهُدًى لِّلْعَالَمِيْنَ

اَللّٰهُمَّ كَمَا هَدَيْتَنِيْ لَهُ فَتَقَبَّلْ مِنِّيْ وَلَا تَجْعَلْ هٰذَا اٰخِرَ الْعَهْدِ

مِنْ بَيْتِكَ وَارْزُقْنِيْ الْعَوْدَ إِلَيْهِ حَتّٰى تَرْضٰى عَنِّيْ بِرَحْمَتِكَ

يَا أَرْحَمَ الرَّاحِمِيْنَ

“அல்லாஹும்ம இன்ன ஹாதா பை(த்)துகல்லதீ ஜஅல்(த்)தஹு முபாரகவ் வஹுதல்லில். ஆலமீன். அல்லாஹும்ம கமா ஹதை(த்)தனீ லஹு .ஃப(த்)த கப்பல் மின்னீ பிரஹ்மதிக யா அர்ஹமர்

ராஹிமீன். என்று கூறுவீர். பெண்ணுக்கும் இப்படித்தான். எனினும் அவர் முகத்தை வெளியாக்குவாள். தலையை வெளியாக்க மாட்டாள். சப்தமாக தல்பியா (போன்றதை) சொல்லாமல் தனக்கு மட்டும் கேட்குமளவு கூறுவாள். தவாபு குதூமில் தோளை அசைத்து நடப்பது, மைலைனில் அத்ழரைனில் (சஈ) தொங்கோட்டம் ஓடுவது, தலையை மழிப்பது பெண்ணுக்கில்லை. ஒரு சில முடிகளைக் களைவாள். தையல் உடுப்பு, ஆபரணங்கள் பெண்கள் அணியலாம். கூட்டமாக இருந்தால் பெண் ஹஜ்ருல் அஸ்வதை நெருங்க மாட்டாள். பெண் ஹைழானால் தவா.்.பின்றி மு.்.ப்ரிதுடைய ஹஜ் அவளுக்கு நிறைவேறிவிடும். சிறந்தது ஹஜ் கிரான். பின் தமத்து.்., பின் இ.்.ப்ராத்.

கிரானாகிறது மீகாதில் ஹஜ், உம்ரா இரண்டுக்கும் ஒன்றாக நிய்யத் செய்து இஹ்ராம் கட்டுவது. இஹ்ராமின் இரு ரக்அத்திற்குப்பின்

اَللّٰهُمَّ اِنِّيْ اُرِيْدُ الْحَجَّ وَالْعُمْرَةَ فَيَسِّرْهُمَا لِيْ وَتَقَبَّلْهُمَا مِنِّيْ

அல்லாஹும்ம இன்னீ உரீதுல் ஹஜ்ஜ வல் உம்ர(த்)த .்.பயஸ்ஸிர் ஹுமா லீ வதகப்பல்ஹுமா மின்னீ. (ஹஜ், உம்ரா இரண்டையும் லேசாக்கி, கபூல் செய்) என்பது. பின் தல்பியா கூறுவார். மக்காவில் உம்ராவை முதலில் செய்து அதில் தவாபின் முந்திய 3 சுற்றில் ரமல் செய்து (தோளை உலுக்கி நடந்து) மைலைனின் அக்ழனரனில் சஈ செய்து (தொங்கோட்டம் ஓடி) பின்பு முன்

சொன்னபடி ஹஜ் செய்வார். 10ம் நாள் ஜம்ரதுல் அகபாவை எறிந்தபின் குர்பானி கொடுப்பது அவர் மீது வாஜிப். குர்பானி தர வசதி இல்லாவிட்டால் நஹ்ருடைய நாளுக்கு முன்னால் 3 நாட்கள் நோன்பு வைப்பார். அதில் கடைசி நாளாக அரபா நாளிருப்பது முஸ்தஹப். ஹஜ் முடிந்த பின் அய்யா முத்தஷ்ரீக் கழிந்த பின் 7 நோன்பு வைப்பார். முந்திய 3 நோன்பு தவறி விட்டால் இரத்தம் குறிப்பாகிட்டது.

**தமத்து.்.  என்பது..** மீகாத்தில் உம்ராவுக்கு இஹ்ராம் கட்டி இரு ரக்அத் தொழுது (உம்ராவை நாடினேன். அதை லேசாக்கி கபூல் செய்வாய் என பொருள்பட)

اَللّٰهُمَّ اِنِّيْ اُرِيْدُ الْعُمْرَةَ فَيَسِّرْهَا لِيْ وَتَقَبَّلْهَا مِنِّيْ அல்லாஹும்ம

இன்னீ உரீதுல் உம்ரா .்.பயஸ்ஸிர்ஹா லீ வதகப்பல் ஹா மின்னீ என்று கூறி பின் தல்பியா கூறுவார். மக்கா வந்து மேற்படி தவா.்.பு செய்வார். உம்ரா முடிந்த பின் தலையை மழிப்பார். அல்லது முடி எடுப்பார். இஹ்ராமைக்களைவார். இனி அவருக்கு மனைவி உட்பட மற்றவையும் ஹலால். பின் மக்காவில் தங்கியிருந்து துல்ஹஜ் 8ம்நாள் ஹரமில் இருந்தவாறு ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டுவார். மு.்.ப்ரிது போல ஹஜ் செய்வார். எனினும் இவர் தவாபுஜ்ஜியாரத்தில் ரமல், சஈ செய்வார். காரின் போல குர்பானி கொடுப்பாார். முடியாவிடில் அவர் போல் நோன்பு வைப்பார். விட்டால் அதே சட்டம் (உம்ராவோடு சேர்ந்து) கிரான், தமத்து.். வெளியூர் வாசிகளுக்கே.

மக்காவாசிகளுக்கும், மீகாத்துக்குள் இருப்பவர்களுக்கும் இன்.'.பிராத் எனப்படும் ஹஜ் மட்டுமே.

## குற்றங்களின் விளக்கம்

அதாவது இஹ்ராம் கட்டியபின் எது குற்றம், (பொதுவாக) ஹரமில் இருக்கும்போது எது செய்தால் குற்றமாகும் என்பதை இங்கே பேசுகிறோம்.

இஹ்ராமில் குற்றம் நிகழ்ந்தால் சில., இரத்தத்தை வாஜிபாக்கும். சில.,அரை மரைக்கால் மணி கோதுமை சதகா கொடுப்பதை வாஜிபாக்கும். சில., அதை விட குறைவான வாஜிபாகும். சில., விலை கொடுப்பதை வாஜிபாக்கும். ஆக இஹ்ராம் கட்டியுள்ள பாலிகான நபர் நிரப்பமாக ஒரு உறுப்புக்கு நறுமணம் பூசினாலும் தலைக்கு மருதாணி பூசினாலும், நிரப்பமாய் ஒரு உறுப்புக்கு எண்ணை தடவினாலும், நிரப்பமாய் ஒரு பகலுக்கோ, ஒரு இரவுக்கோ தையல் ஆடை உடுத்தினாலும், தலையை மறைத்தாலும், தலையில் கால் வாசி மழித்தாலும், இரத்தம் குத்தி வாங்குமிடத்தை மழித்து ரத்தம் குத்தி வாங்கினாலும், இரு கம்கட்டில் ஒன்றை மழித்தாலும், அடிமுடி மழித்தாலும் பிடரியை மழித்தாலும், ஒரே இடத்தில் இரு கை, கால் நகங்களை நறுக்கினாலும், அல்லது ஒரு கை, கால் நகங்களை நறுக்கினாலும், குதூமுக்கு அல்லது சத்ருக்கு ஜுனுபாளியாக தவா.'.ப் செய்தாலும், முன் சொன்ன

வாஜிபுகளில் ஒன்றை விட்டாலும் இரத்தம் வாஜிப். ரத்தமென்பது ஒரு கிடாயை அறுப்பது (சதகா செய்வது) மு.ஃப்ரிது இஹ்ராமில் செய்த குற்றத்திற்கு ஒரு இரத்தம் வாஜிப். அதையே காரின் செய்தால் இரண்டு ரத்தம் வாஜிபாகும். குர்பானி ஓட்டிப்போன முதமத்திஉக்கும் இது தான் சட்டம்.

காரின் (குர்பானி) அறுக்கும் முன் தலை மழித்தாலும், (கல்) எறியும் முன் தலை மழித்தாலும் இரண்டு ரத்தம் வாஜிப். இது இரண்டிலும் மு.ஃப்ரிதுக்கு எதுவும் வாஜிபில்லை.

ஒரு உறுப்புக்கு குறைவாக மணம் பூசினாலும், ஒரு பகலுக்கு குறைவாக தையல் ஆடை அணிந்தாலும், தலையை மூடினாலும், தலையில் கால்வாசிக்கு குறைவாக மழித்தாலும், மீசையை மழித்தாலும், 5 நகத்துக்கு குறைவாக நறுக்கினாலும், (ஒரே இடத்தில் இல்லாமல்) மேற்பட்ட இடங்களில் நகத்தை நறுக்கினாலும், குதூமுக்கு அல்லது சத்ருக்கு வுளு இன்றி தவா.ஃப் செய்தாலும், சத்ரின் தவா.ஃபில் 3 சுற்றை விட்டாலும், 3 ஜம்ராவில் ஒன்றை விட்டாலும், மற்றவரது தலையை மழித்தாலும் அரை மரைக்கால் மணி கோதுமை சதகா செய்வார்.

தங்கடத்தோடு நறுமணம் பூசினாலும், மழித்தாலும், (தைத்த ஆடை) உடுத்தினாலும் (ஆடு) அறுப்பார் அல்லது 3 மரைக்கால் (மணி கோதுமை) ஒரு மிஸ்கீனுக்கு சதகா கொடுப்பார். அல்லது 3 நாட்களுக்கு நோன்பு வைப்பார். பேன், விட்டிலைக் கொன்றால் அவர் நாடியதை சதகா செய்வார்.

வேட்டை மிருகத்தைக் கொன்றாலும், அதன்பால் (காட்டி) அறிவித்தாலும் அதைக் கொன்ற இடத்தில் அல்லது அதற்கு பக்கமாக இரு நீதியானவர் விலை வைத்து அந்த விலை குர்பானி(ப் பிராணி) யின் விலையை எத்திவிட்டால் நாடினால் அதை வாங்கி அறுப்பார். அல்லது அந்த விலைக்கு மணிகோதுமை வாங்கி ஒவ்வொரு ஃபகீருக்கும் அரை மரைக்காலாக அல்லது தொலி கோதுமை அல்லது பேரித்தம்பழம் ஒரு மரைக்காலாக சதகா கொடுப்பார். அல்லது ஒவ்வொரு மிஸ்கீனுக்கு தர வேண்டிய தளவுக்கு நோன்பு வைப்பார். (10 மிஸ்கீன் கணக்கு வந்தால் 10 நோன்பு போல) அரை மரைக்காலுக்கு குறைவர்க வந்தால் சதகா கொடுப்பார். அல்லது ஒரு நாள் நோன்பு வைப்பார். (வேட்டை மிருகம்) அதை காயப்படுத்தினாலோ, அதன் ரோமத்தைப் பிடிங்கினாலோ, அதன் உறுப்பை துண்டித்தாலோ அதில் குறைவான விலை வாஜிப். அதன் இறகைப் பிடிங்கினாலோ, கால்களை முறித்தாலோ, முட்டையை உடைத்து அதனால் இறந்த குஞ்சு வெளிப்பட்டாலோ, இஹ்ராமில்லாதவர் ஹரமின் வேட்டை மிருகத்தை அறுத்தாலோ, அதில் பால் கறந்தாலோ, அதிலுள்ள புல்லை அறுத்தாலோ, யாருக்கும் சொந்தமில்லா மரத்தை அறுத்தாலோ, முறித்தாலோ அதன் விலை வாஜிப். எனினும் காய்ந்த, முறிந்த மரத்தை வெட்டினால் எதுவும் (குற்றமல்ல) பிணை வாஜிபல்ல.

அதிலுள்ள புற்களை பிடுங்கவோ, அறுக்கவோ கூடாது. இத்கர் எனும் புல்லைத் தவிர. அதிலுள்ள காளானை எடுப்பது குற்றமல்ல.

காகம், பருந்து, தேள், நட்டுவாக்களி, பாம்பு, வெறிநாய், கொசு, எறும்பு, ஈசல், முதலையை அல்லது (பொதுவாக) வேட்டை மிருகம் அல்லாததைக் கொன்றால் ஒன்றுமில்லை. எனினும் ஆடு, மாடு, ஒட்டகம், கோழியை அறுக்கலாம். இஹ்ராமில்லாதவர் வேட்டையாடி அதை (ஹரமல்லா)ஹில்லில் சாப்பிடலாம்.

மக்காவில் அதன் சங்கை, ஹக்கு பேணப்பட வேண்டும். க.்.பாவில் இறங்கும் 120 ரஹ்மத்தில் 60 தவா.்.ப் செய்வோருக்கு 40 தொழுபவர்களுக்கு 20 பார்ப்பவர்களுக்கென்று ஹதீஸ் வந்துள்ளது.

## ஹத்யு (ஹஜ்ஜில் அறுக்கப்படும்) குர்பானி

தாழ்ந்தது ஒரு ஆடு. ஆடு எனில் ஒரு வயதுடையதாக. மாடு இரு வயதுடையதாக. ஒட்டகம் 5 வயதுடையதாக இருக்க வேண்டும். பொதுவாக குர்பானிப் பிராணியின் சட்டமே ஹத்யு விற்கும். ஹஜ்ஜில் எல்லா காரியத்திலும் ஆடு கொடுக்கலாம். ஆனால் 'தவா.்.புஜ் ஜியாராவை ஜுனுபாளியாகவோ, பெண் ஹைழோடோ செய்தால், அரபாத்தில் தரிபட்டபின் மழிக்கும் முன் உடலுறவு செய்தாலும், புத்னா வாஜிப். (அதாவது ஒட்டகம் அல்லது மாடு வாஜிப்.)

**சுன்னத்தான குர்பானி:** முதமத்தி.்., கிரானுடைய குர்பானியை மட்டும் உண்பது முஸ்தஹப். மற்ற குர்பானிகளை (சதகா தரும் இறைச்சிகளை) உண்ணக்

கூடாது. அப்படி உண்டால் அதன் விலை பிணை தர வேண்டும். முதமத்தி.்., கிரானின் குர்பானியை குறிப்பாக நஹ்ருடைய நாளில் அறுக்க வேண்டும். அனைத்தும் ஹரமில் செய்யப்பட வேண்டும். அதன் தோல், மூக்கணாங்கயிறு, (மேலில்) போர்வை அணிவித்திருந்தால் அது யாவும் சதகா செய்யப்படும். அறுப்பவருக்கு கூலியாக்கப்படாது.

## பெருமானாரின் ரவ்ழா ஜியாரத்

புனித மக்கா புனித மதீனாவை விட சிறந்தது. எனினும் அங்கு பெருமானாரின் புனித உடலுள்ள நாயகத்தின் கப்ர் ஷரீப்., க.்.பா, அர்ஷ், குர்ஸி ஆகிய அத்துணை இடங்களையும் விட சிறப்பானது. அதை ஜியாரத் செய்வது முஸ்தஹப். வசதியுள்ளவர் நாயகத்தின் கப்ரை ஜியாரத் செய்ய வேண்டியது வாஜிபென்றும் வருகிறது.

வசதி வாய்ப்பிருந்தும் என்னை ஜியாரத் செய்யாதவர் என் வெறுப்பிற்காட்பட்டார், என் கப்ரை ஜியாரத் செய்பவருக்கு என் ஷ.்.பாஅத் வாஜிப். ஹஜ் செய்து ஜியாரத் செய்யாதவர் என் வெறுப்புக்காளானார். என்னை ஜியாரத் செய்யும் நோக்கில் மட்டும் வந்தவருக்காக நான் மன்றாட்டம் செய்ய வேண்டியது அல்லாஹ் எனக்கு கடமையாக்கியது என பல ஹதீஸ்களுண்டு.

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் ஹயாத்துன் நபி. அவர்களுக்கு ரிஜ்க் வழங்கப்படுகிறது. அவர்கள் உணர்வோடு , வணக்கத்தோடு வீற்றிருக்கிறார்கள்

அகப்பார்வையில்லா (வலிமார்களல்லா)தவர்களின் பார்வையை விட்டும் நாயகம் திரையிடப்பட்டுள்ளனர் என்பதே சத்திய வழி கண்ட, மெஞ்ஞானம் படைத்த ஆலிம் அறிஞர்கள் யாவரின் கொள்கை.

வலிமார்கள் ஷுஹதாக்களின் ஸ்தானத்தில் உள்ளனர். அவர்களது மறைவு அழியும் உலகிலிருந்து அழியா உலகிற்கு திரும்புவதே என்றிருக்க பெருமானாரின் மகத்தான ஜீவியத்தை நாம் சந்தேகிக்க வழியே இல்லை.

3 பள்ளிகளுக்கு தவிர பயணம் கூடாது என்ற ஹதீஸ் நபிமார்கள், வலிமார்களின் ஜியாரத்தைக் குறிக்காது. ஏனெனில் ஹதீஸில் பள்ளிவாசல்கள் குறித்தே பேசப்பட்டுள்ளது (புனித நபிமார்கள், வலிமார்களின் தர்கா ஷரீப்கள் குறித்தல்ல"காரணம்) மஸ்ஜிதுல் ஹராமில் தொழுவது ஒன்றுக்கு லட்சம் , மதீனா ஷரீபில் ஒன்றுக்கு ஆயிரம் (ஒன்றுக்கு 50,000 எனவும் உள்ளது) பைத்துல் முகத்தஸில் ஒன்றுக்கு ஐநூறு (25,000என்றும் உள்ளது) மடங்கு நன்மைகள் (கூடுதலாக கிடைப்பதால்) மற்ற பள்ளிகளில் ஒன்றே (எனவே நன்மை கூடுதலாக கிடைக்குமென இதர பள்ளிகளுக்கு பயணம் செய்ய முடியாது.) மற்ற இபாதத்க்ளிலும் இப்படித்தான்.

ஹஜ் ஃபர்ளானால் ஹஜ் செய்துவிட்டு ஜியாரத் செய்வார். ஜியாரத் செய்த பின் ஹஜ் செய்தாலும் கூடும். நபிலான ஹஜ் செய்பவருக்கு முதலில் ஜியாரத் செய்வது அவர் விருப்பம். எனினும் மதீனா அருகில் வர வேண்டி இருந்தால் முதலில் ஜியாரத் செய்வார். அத்தோடு புனித மஸ்ஜிதுன்

நபவி பள்ளியையும் ஜியாரத் செய்ய நிய்யத் செய்வார். எனினும் கப்ர் ஷரீபு ஜியாரத்துக்காகவே நிய்யத் செய்வதே ஏற்றம்.

புனித கப்ர் ஷரீ∴பை ஜியாரத் செய்ய சென்றாலே மஸ்ஜிதுன் நபவியின் ஜியாரத்தும் உண்டாகிவிடும். அல்லது மறுமுறைப் பயணத்தில் மஸ்ஜிதுன் நபவியின் ஜியாரத்தையும் சேர்த்து நிய்யத் செய்யலாம்.

நாயகத்தின் ஜியாரத்தை விரும்புவார் அதிகமதிகம் சலவாத் ஓதி வர வேண்டும். ஜியாரத் செய்ய வந்தவர் மதீனாவின் (எல்லையை, இடங்களை) கட்டிடங்களைக் கண்டதும் சலவாத் சொல்லிக் கொண்டே இருப்பார்.

## மதீனா மா நகர் நுழைகையில்..

اَللّٰهُمَّ هٰذَا حَرَمُ

نَبِيِّكَ وَمَهْبَطُ وَحْيِكَ فَامْنُنْ عَلَيَّ بِالدُّخُوْلِ فِيْهِ وَاجْعَلْهُ

وِقَايَةً لِّيْ مِنَ النَّارِ وَاَمَانًا مِّنَ الْعَذَابِ وَاجْعَلْنِيْ مِنَ

الْفَائِزِيْنَ بِشَفَاعَةِ الْمُصْطَفٰى يَوْمَ الْمَآبِ

“அல்லாஹும்ம ஹாதா ஹரமு நபிய்யிக வமஹ்ப(த்)து வஹ்யிக ∴பம்னன் அலய்ய பித்துகூலி∴பீஹி. வஜ்ஹல்ஹு விகாயத்தல்லீ மினன் நார். வ அமானம் மினல் அதாப் வஜ்அல்னீ மினல் ∴பாயிஜீன் பிஷ∴பா அ(த்)தில் முஸ்த∴பா யவ்மல் மஆப்“ என்பார்.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

மதீனா உள்ளே புகும் முன் அல்லது புகுந்த பின் முடிந்தால் குளித்து நறுமணம் பூசி நல்ல தூய உடை உடுத்தி ஒழுக்கத்தோடு, அடக்கத்தோடு. பயபக்தியோடு நடந்து போய் (முடியாவிட்டால் வாகனத்தில் போய் இறங்கி)..

بِسْمِ اللهِ وَعَلٰى مِلَّةِ رَسُوْلِ اللهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ، رَبِّ اَدْخِلْنِيْ مُدْخَلَ صِدْقٍ وَّاَخْرِجْنِيْ مُخْرَجَ صِدْقٍ وَّاجْعَلْ لِّيْ مِنْ لَّدُنْكَ سُلْطَانًا نَّصِيْرًا، اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ فِى الْعَالَمِيْنَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ، وَاغْفِرْلِيْ ذُنُوْبِيْ وَافْتَحْ لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ وَفَضْلِكَ

“பிஸ்மில்லாஹி வஅலா மில்ல(த்)தி ரசூலிலல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம். ரப்பி அத்கில் னீ முத்கல சித்கிவ் வ அக்ரிஜ்னீ முக்ரஜ சித்கிவ் வஜ்அல்லீ மில்லதுன்க சுல்தானன் நஸீரா. அல்லாஹும்ம சல்லி அலா சய்யிதினா முஹம்மத் வ அலா ஆலி சய்யிதினா முஹம்மத் கமா சல்லை(த்)த அலா சய்யிதினா இப்ராஹீம் வ அலா ஆலி சய்யிதினா இப்ராஹீம் ஃபில் ஆலமீன இன்னக ஹமீதும் மஜீத்“ என்று ஓதி மதீனா மா நகர் புகுவார். பின் பள்ளியில் புகுந்து 2 ரக்அத் தஹிய்யதுல் மஸ்ஜித் மிம்பரருகே தொழுது மிம்பரின் தூண்கள் வலது தோளுக்கு

நோக இருக்கும்படி தரிபடுவார். அது பெருமானார் தரிபட்ட புனிதஸ்தலமாகும். என் மிம்பர் ((பகுதி) என் ஹவ்ழில் நின்டுமுள்ளது என்பது ஹதீஸ். ஆக அங்கு தொழும் பாக்யம் கிட்டியமைக்காக ஷுக்ர் செய்து 2 ரக்அத் நபில் தொழுவார். பின் துஆ செய்வார். பின் சிறப்புமிக்க கப்ரின்பால் முகந்திருப்பி எழுந்து ஒழுக்கத்தோடு குப்பாவுக்கு 4 முழும் கிப்லாவை பின்னோக்கியவாறு பொருமானாரை நோக்கி நாயகம் பார்க்கிறார்கள். நம் பேச்சைக்கேட்கிறார்கள் என்ற உள்ளுணர்வோடு நாயகத்துக்கு சலாம் உரைப்பார்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَا سَيِّدِيْ يَا رَسُوْلَ اللّٰهِ، اَلسَّلَامُ عَلَيْكَ يَا نَبِيَّ اللّٰهِ،
اَلسَّلَامُ عَلَيْكَ يَا حَبِيْبَ اللّٰهِ، اَلسَّلَامُ عَلَيْكَ يَا نَبِيَّ الرَّحْمَةِ، اَلسَّلَامُ
عَلَيْكَ يَا شَفِيْعَ الْاُمَّةِ، اَلسَّلَامُ عَلَيْكَ يَا سَيِّدَ الْمُرْسَلِيْنَ،
اَلسَّلَامُ عَلَيْكَ يَا خَاتَمَ النَّبِيِّيْنَ، اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُزَّمِّلُ،
اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُدَّثِّرُ، اَلسَّلَامُ عَلَيْكَ وَعَلٰى اُصُوْلِكَ الطَّيِّبِيْنَ
وَاَهْلِ بَيْتِكَ الطَّاهِرِيْنَ، اَلَّذِيْنَ اَذْهَبَ اللّٰهُ عَنْهُمُ الرِّجْسَ
وَطَهَّرَهُمْ تَطْهِيْرًا، جَزَاكَ اللّٰهُ عَنَّا اَفْضَلَ مَا جَزٰى نَبِيًّا
عَنْ قَوْمِهٖ، وَرَسُوْلًا عَنْ اُمَّتِهٖ، اَشْهَدُ اَنَّكَ رَسُوْلُ اللّٰهِ

قَدْ بَلَّغْتَ الرِّسَالَةَ، وَأَدَّيْتَ الْأَمَانَةَ، وَنَصَحْتَ الْأُمَّةَ، وَ

أَوْضَحْتَ الْحُجَّةَ، وَجَاهَدْتَ فِي سَبِيْلِ اللهِ حَقَّ جِهَادِهِ،

وَأَقَمْتَ الدِّيْنَ حَتَّىٰ أَتَاكَ الْيَقِيْنُ، صَلَّى اللهُ عَلَيْكَ وَسَلَّمَ

وَعَلَىٰ أَشْرَفِ مَكَانٍ تَشَرَّفَ بِحُلُوْلِ جِسْمِكَ الْكَرِيْمِ فِيْهِ،

صَلَاةً وَسَلَامًا دَائِمَيْنِ مِنْ رَّبِّ الْعَالَمِيْنَ، عَدَدَ مَا كَانَ

وَعَدَدَ مَا يَكُوْنُ بِعِلْمِ اللهِ صَلَاةً لَا انْقِضَاءَ لِأَمَدِهَا يَا

رَسُوْلَ اللهِ نَحْنُ وَفْدُكَ وَزُوَّارُ حَرَمِكَ تَشَرَّفْنَا بِالْحُلُوْلِ

بَيْنَ يَدَيْكَ، وَقَدْ جِئْنَاكَ مِنْ بِلَادٍ شَاسِعَةٍ، وَأَمْكِنَةٍ بَعِيْدَةٍ

نَقْطَعُ السَّهْلَ وَالْوَعْرَ بِقَصْدِ زِيَارَتِكَ لِنَفُوْزَ بِشَفَاعَتِكَ

وَالنَّظَرِ إِلَىٰ مَآثِرِكَ وَمَعَاهِدِكَ، وَالْقِيَامِ بِقَضَاءِ بَعْضِ حَقِّكَ،

وَالْاِسْتِشْفَاعِ بِكَ إِلَىٰ رَبِّنَا، فَإِنَّ الْخَطَايَا قَدْ قَصَمَتْ ظُهُوْرَنَا،

وَالْأَوْزَارَ قَدْ أَثْقَلَتْ كَوَاهِلَنَا، وَأَنْتَ الشَّافِعُ الْمُشَفَّعُ الْمَوْعُوْدُ

بِالشَّفَاعَةِ الْعُظْمَىٰ وَالْمَقَامِ الْمَحْمُوْدِ وَالْوَسِيْلَةِ، وَقَدْ قَالَ اللهُ

تَعَالٰى وَلَوْ اَنَّهُمْ اِذْ ظَلَمُوْٓا اَنْفُسَهُمْ جَآءُوْكَ فَاسْتَغْفَرُوا اللّٰهَ وَ
اسْتَغْفَرَ لَهُمُ الرَّسُوْلُ لَوَجَدُوا اللّٰهَ تَوَّابًا رَّحِيْمًا، وَقَدْ جِئْنَاكَ
ظَالِمِيْنَ لِاَنْفُسِنَا مُسْتَغْفِرِيْنَ لِذُنُوْبِنَا فَاشْفَعْ لَنَا اِلٰى رَبِّكَ، وَ
اَسْئَلُهُ اَنْ يُّمِيْتَنَا عَلٰى سُنَّتِكَ وَاَنْ يَّحْشُرَنَا فِيْ زُمْرَتِكَ وَاَنْ
يُّوْرِدَنَا حَوْضَكَ، وَاَنْ يَّسْقِيَنَا بِكَاْسِكَ غَيْرَ خَزَايَا وَلَا نَدَامَا،
اَلشَّفَاعَةَ اَلشَّفَاعَةَ اَلشَّفَاعَةَ يَارَسُوْلَ اللّٰهِ، اِنِّيْ مَوْزُوْدٌ تَمَّحِلٍ
رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِاِخْوَانِنَا الَّذِيْنَ سَبَقُوْنَا بِالْاِيْمَانِ، وَلَا تَجْعَلْ فِيْ
قُلُوْبِنَا غِلًّا لِّلَّذِيْنَ اٰمَنُوْا رَبَّنَا اِنَّكَ رَءُوْفٌ رَّحِيْمٌ

தன் சலாமுக்கு நாயகம் பதிலுரைக்கிறார்கள், தன் துஆவுக்கு ஆமீன் சொல்கிறார்கள் என்ற முழு நம்பிக்கையோடு.

அத்தோடு பெருமானாருக்கு சலாம் உரைக்கும்படி வசிய்யத் செய்தவர்களின் சலாத்தை இன்னாரிடமிருந்து தங்களுக்கு சலாம் யா ரசூலல்லாஹ் என எத்தி வைத்து அவருக்காகவும், சகல மு.்.மின்களுக்காகவும் பெருமானாரிடம் ஷ.்.பாஅத்தை வேண்டி நிற்பார்.

பின் ஒரு முழம் அளவு நகர்ந்து வந்து ஹழ்ரத் சய்யிதுனா அபூபக்ர் சித்தீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் சலாம் உரைப்பார்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَا صَاحِبَ رَسُوْلِ اللهِ

وَاَنِيْسَهُ فِي الْغَارِ وَرَفِيْقَهُ فِي الْاَسْفَارِ وَاَمِيْنَهُ فِي الْاَسْرَارِ

جَزَاكَ اللهُ عَنَّا اَفْضَلَ مَا جَزٰى اِمَامًا عَنْ اُمَّةِ نَبِيِّهِ فَلَقَدْ

خَلَفْتَهُ بِاَحْسَنِ خَلَفٍ وَسَلَكْتَ طَرِيْقَهُ وَمِنْهَاجَهُ خَيْرَ مَسْلَكٍ

وَقَاتَلْتَ اَهْلَ الرِّدَّةِ وَالْبِدَعِ وَمَهَّدْتَّ الْاِسْلَامَ وَشَيَّدْتَّ

اَرْكَانَهُ فَكُنْتَ خَيْرَ اِمَامٍ وَوَصَلْتَ الْاَرْحَامَ وَلَمْ تَزَلْ قَائِمًا

بِالْحَقِّ نَاصِرًا لِلدِّيْنِ وَلِاَهْلِهِ حَتّٰى اَتَاكَ الْيَقِيْنُ سَلِ اللهَ

سُبْحَانَهُ لَنَا دَوَامَ حُبِّكَ وَالْحَشْرَ مَعَ حِزْبِكَ وَقَبُوْلَ زِيَارَتِنَا

اَلسَّلَامُ عَلَيْكَ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ

பின் அதே போல் ஒரு முழம் நகர்ந்து ஹழ்ரத் சய்யிதுனா உமர் ஃபாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும் சலாம் உரைப்பார்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَا اَمِيْرَ الْمُؤْمِنِيْنَ

اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُظْهِرَ الْاِسْلَامِ اَلسَّلَامُ عَلَيْكَ يَا مُكَسِّرَ الْاَصْنَامِ

جَزَاكَ اللهُ عَنَّا اَفْضَلَ الْجَزَاءِ لَقَدْ نَصَرْتَ الْاِسْلَامَ وَالْمُسْلِمِيْنَ
وَفَتَحْتَ مُعْظَمَ الْبِلَادِ بَعْدَ سَيِّدِ الْمُرْسَلِيْنَ وَكَفَلْتَ الْاَيْتَامَ
وَوَصَلْتَ الْاَرْحَامَ وَقَوِيَ بِكَ الْاِسْلَامُ، وَكُنْتَ لِلْمُسْلِمِيْنَ اِمَامًا
مَّرْضِيًّا، وَهَادِيًا مُّهْدِيًّا، جَمَعْتَ شَمْلَهُمْ، وَاَعَنْتَ فَقِيْرَهُمْ، وَ
جَبَرْتَ كَسْرَهُمْ، اَلسَّلَامُ عَلَيْكُمَا يَا ضَجِيْعَيْ رَسُوْلِ اللهِ صَلَّى اللهُ
عَلَيْهِ وَسَلَّمَ وَرَفِيْقَيْهِ وَوَزِيْرَيْهِ وَمُشِيْرَيْهِ وَالْمُعَاوِنَيْنِ لَهُ
عَلَى الْقِيَامِ بِالدِّيْنِ، وَالْقَائِمَيْنِ بَعْدَهُ بِمَصَالِحِ الْمُسْلِمِيْنَ جَزَاكُمَا
اللهُ اَحْسَنَ الْجَزَاءِ جِئْنَاكُمَا نَتَوَسَّلُ بِكُمَا اِلَى رَسُوْلِ اللهِ صَلَّى اللهُ
عَلَيْهِ وَسَلَّمَ لِيَتَشَفَّعَ لَنَا وَيَسْاَلُ اللهَ رَبَّنَا اَنْ يَتَقَبَّلَ سَعْيَنَا
وَيُحْيِيَنَا عَلَى مِلَّتِهِ وَيُمِيْتَنَا عَلَيْهَا وَيَحْشُرَنَا فِيْ زُمْرَتِهِ

பின் தமக்காகவும், தன் தாய், தந்தை, மனைவி, மக்கள், சொந்த பந்தங்கள், வசிய்யத் செய்தவர்கள், உலக முஸ்லிம்கள் யாவருக்காகவும் துஆ செய்வார். பின் மீண்டும் பெருமானாரின் திருவாசல் நோக்கி துஆ செய்து புனித கப்ருக்குதம், மிம்பருக்கும் இடையிலுள்ள அபூலுபானா எனும் தூணருகே வந்து நாடிய நபில் தொழுது

அல்லாஹ்விடம் தவ்பா செய்வார். பின் மீண்டும் ரவ்ழாவுக்கு வந்து நாடிய மட்டும் தொழுது, இஸ்திங்.ஃ.பார் செய்து, தஸ்பீஹ், தஹ்லீல், சலவாத் ஓதி பின் மிம்பருக்கு வந்து பெருமானாரின் புனிதக்கரம் பட்ட ரும்மானத்தில் கை வைத்து (ஆசையோடு முத்தி) சலவாத் கூறி துஆ செய்வார். இன்று அந்த ரும்மானத்திற்கு அடையாளமில்லை.

பெருமானாரின் பிரிவால் தேம்பித்தேம்பி அழுது பெருமானார் நெஞ்சோடு அணைத்து ஆசுவாசப்படுத்திய உஸ்துவானத்துல் ஹன்னானா எனப்படும் அசாவில் மிச்சமுள்ளது. அதையும் தரிசித்து, முத்தி பரகத் பெறுவார். மதீனாவில் இருக்கும்வரை முடிந்தளவு இரவு, பகல் எப்போதும் ஜியாரத் செய்து பரகத் பெறுவார். மற்றும் ஜன்னதுல் பகீ. கப்ருஸ்தானுக்கு வந்து ஜியாரத் செய்வதும், அங்கு விசேஷத்திற்குரிய பெருமானாரின் குடும்பத்தவர் களது கப்ருகளை குறிப்பாக ஜியாரத் செய்வதும் முஸ்தஹப். வியாழன் ஜியாரத் மிக ஏற்றம். "சலாமுன் அலைக்கும் பிமா சபர்(த்)தும்.ஃ.பநி.ஃ.ம உக்பத் தார்" என்று கூறி .ஃ.பாத்திஹா, ஆயத்துல் குர்ஸி, யாஸீன் ஷரீப், இக்லாஸ் போன்ற சூராக்களை ஓதி ஈசால் சவாபு (செய்து துஆ) செய்வார். மஸ்ஜிதுல் குபா ஜியாரத் குறிப்பாக சனிக்கிழமை ஏற்றம். அங்கு தொழுது துஆச் செய்வார். மதீனாவில் அதபோடு தங்கியிருத்தல் வேண்டும். அதில் சீதோஷ்ணம் போன்ற சங்கடங்களை பொறுத்துக்கொள்ள வேண்டும். அது பெருமானாரின் ஷ.ஃ.பாஅத்தை தருவிக்குமென ஹதீஸில் வந்துள்ளது.

இனி ஊர் திரும்ப நாடினால் தொழுது, துஆச் செய்து, புனித நாயகத்தின் கப்ருக்கு வந்து சலாம் உரைத்து, தான் நல்லபடியாக ஊர் வந்து சேர வேண்டி துஆ செய்து “வைரமவ்தஇன் யாரசூலல்லாஹ்“ பிரிய மனமின்றிப் பிரிகிறேன் யா ரசூலல்லாஹ் என கண்ணீர் மல்க விடை பெற்று கைசேதத்தோடு திரும்புவார். பெருமானாரின் வம்சத்தாருக்கு சதகா (தர்மம்) செய்யக் கூடாது. ஹதியா (அன்பளிப்பே) செய்யலாம். வரும்போது மேட்டில் ஏறும்போது தக்பீர் சொல்லி

آيِبُوْنَ تَائِبُوْنَ عَابِدُوْنَ سَاجِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ
صَدَقَ اللّٰهُ وَعْدَهُ، وَنَصَرَ عَبْدَهُ، وَهَزَمَ الْاَحْزَابَ وَحْدَهُ،

‘ஆயிபூன் தாயிபு’ன், ஆபிதூன், சாஜிதூன, லிரப்பினா ஹாமிதூன். சதகல்லாஹு வ.’.தஹ் வநசர அப்தஹ் வஹஜமல் அஹ்ஜாப வஹ்தஹ்“ என்பது முஸ்தஹப். ஊர் திரும்பும்முன் தகவல் தெரிவித்து தன் ஊர் வந்ததும் நேராக பள்ளிக்கு சென்று தொழுது அல்லாஹ்விற்கு ஷுக்ர் செய்து புகழ்ந்து புனித வாழ்வே மேற்கொள்ள சபதமெடுப்பார். ஹாஜிகளை ““மர்ஹபல்லக“ என வரவேற்று முஸா.’.பஹா, முஆனகா செய்வதும், ஹாஜி தான் பெற்றபேறு யாவரும் பெற துஆச் செய்தும் இல்லம் திரும்புவார்.

# இஸ்லாமுடைய வாஜிபுகள் 7

1. பித்ரா கொடுப்பது. 2. உறவுகளின் நலன் பேணல்.
3. வித்ர் தொழுகை. 4. குர்பானி.
5. உம்ரா, 6. பெற்றோருக்கு பணிவிடை செய்வது,
7. மனைவி கணவனுக்கு பணிவிடை செய்வது.

எஜமானுக்கு அடிமை பணிவிடை செய்வது போல பெற்றோருக்கு பணிவிடை செய்ய வேண்டும். (அவர்கள் முன்) அவர்களுக்கு மேல் சப்தத்தை உயர்த்தக் கூடாது. அதை பிறர் மீது சாட்டாமல் தானே பணிவிடை செய்ய வேண்டும். மார்க்கம் அனுமதித்ததில் அவர்களுக்கு அடிபணிய வேண்டும். தாயின் பாதத்தை பணிவன்போடு முத்தமிடுவார். தாயின் காலடி சுவனமென்கிறது நாயகத்தின் பொன்மொழி.

பெண் தன் பெற்றோரை விடவும் கணவன் நலனுக்கு முன்னுரிமை தர வேண்டும். வீட்டின் பணிகளை கவனிப்பதும், எதையும் கொடுக்கவும், வீட்டிலிருந்து வெளியே கிளம்பவும், நபில் நோன்பு வைக்கவும் கணவனிடம் அனுமதி பெறவும் வேண்டும். முக்கிய வேலைக்காக அலங்காரமின்றி பாதையில் பிறர் பார்வை படாதவாறு, சப்தம் எழுப்பாமல் வெளியில் சென்று வருவது குற்றமல்ல. அந்நியரைப் பார்க்கவோ, நலம் விசாரிக்கவோ, அவர்களிடம் சாப்பிடவோ கூடாதென்று உத்தரவிட்டு அனுப்புவார்.

(வீட்டின்) உள்ளே இருந்து வெளியே பார்க்க மாட்டாள். அது ஃபித்னாவை (குழப்பத்தை) உண்டாக்கும். கணவனின் இன்பத்திற்காக தன்னை தூய்மையாக்கி, அலங்கரிப்பாள். ரகசியத்திலும், பரகசியத்திலும் கணவனை சங்கடப்படுத்த மாட்டாள். கணவனை கோபப்படுத்தமாட்டாள். துக்கப்படுத்த மாட்டாள். கணவர் உச்சி முதல் பாதம் வரை ஊனமாயிருந்து அதை அவள் தன் நாவால் தொட்டாலும் கணவருக்கு பூரண நன்றி செலுத்திவள் ஆக மாட்டாள்.

**ஒழுக்கமுள்ள மனைவிக்கு அடையாளம்...** போதுமென்ற மனமும், பத்தினித்தனமும், ஃபர்ளுகளுக்கடுத்து கணவனுக்கு பணிவிடை செய்வதை முற்படுத்துவதும், (பின்) மவ்த்துக்கு (மறுமைக்கு) தயார் செய்வதுமாகும். பெண் ஐவேளை தொழுது, ரமழான் நோன்பு நோற்று, அபம் (மர்மஸ்தானம்) காத்து, கணவனுக்கு வழிப்பட்டால் சொர்க்கம் புகுந்திடுவாள்.

**கணவன் மீதான கடமையாகிறது...**

தன் உணவில், உடுப்பில், தான் வசிக்கும் வீட்டில் அவளுக்கு பங்களிப்பது. பிணக்கேற்பட்டால் படுக்கையில் பிரிப்பார். வீட்டிலிருந்து வெளியேற்ற மாட்டார். அவரும் வெளியேறிடக் கூடாது. அவளும் வெளியேறிடக் கூடாது. மனைவி கோபப்பட்டால்

أَيَّتُهَا الرِّجْسُ النَّجِسُ الْخَبِيثُ اُخْرُجْ مِنْ جَسَدٍ طَيِّبٍ

"அய்யுஹர் ரிஜ்சுன் நஜிசுல் கபீசுல் குப்சு உக்ருஜ்மின் ஜஸதின் தய்யிப்" என்று கூறி அவளது இரு தோள் புஜத்துக்கிடையில் அவர் தன் முன்கையால்

அடிப்பார். அப்போது ஷைத்தான் அவளை விட்டு வெளியேறுவான்.

# இஸ்லாமுடைய ஹக்குகள் (உரிமைகள்)

## முஸ்லிம் முஸ்லிமுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் 6.

**ஹதீஸில் வருகிறது...** முஸ்லிமை சந்தித்தால் சலாம் சொல். விருந்திற்கழைத்தால் பதில் சொல். உபதேசம் தேடினால் உபதேசம் செய். நோயுற்றால் நலம் விசாரி, மரணித்தால் பங்கு கொள். சலாம் உரைப்பது சுன்னத் முஅக்கதா. அதற்கு பதிலளிப்பது வாஜிப். எத்தனைமுறை சந்தித்தாலும் சலாம் கூறப்படும். யாவர்க்கும் சலாம் கூறப்படும். எனினும் வருபவர் வரப்பட்டவருக்கு, நடப்பவர் அமர்ந்திருப்பவருக்கு, வாகனிப்பவர் நடப்பவருக்கு, சிறியவர் பெரியவருக்கு, பின்னால் வருபவர் முன்னால் செல்பவருக்கு முந்தி சலாம் உரைப்பது சிறப்பு. அந்நியப் பெண் கிழவியாயிருந்தால் அவள் தும்மினாலும், சலாம் சொன்னாலும் பதில் கூறுவார். வாலிபப்பெண் சலாம் உரைத்தால் மனதிற்குள் பதில் சொல்லிக் கொள்வார். அவ்வாறே பெண்ணும் அந்நிய ஆண் சலாம் கூறின் மனதிற்குள் பதில் சொல்வாள்.

சலாமை கேட்கும்படி சொல்வது சுன்னத். பதிலை கேட்கும்படி சொல்வது வாஜிப். காதில் விழாவிட்டால் பதில் கூற வேண்டியது வாஜிபில்லை. சலாம் அலைகும் கூறலாம். அஸ்ஸலாமு அலைக்குமே சிறந்தது. பதிலில் அலைகுமுஸ்ஸலாம், வ அலைகுமுஸ்ஸலாம் இரண்டும் கூறலாம்.

எனினும் சிறந்தமுறை சலாம் கூறின் வரஹ்மத்துல்லாஹ் சேர்த்து பதில் கூறுவது, அதைச் சேர்த்து சலாமுரைத்தால் வபரகாதுஹூவைச் சேர்த்து பதில் கூறுவது. ஆக சலாமுக்கு அதைப் போல அல்லது கூடுதலாக பதில் சொல்வது. பதிலில் குறைப்பது ஏற்றமல்ல. அத்தோடு தக்வா உடைய நபரை முஸா∴பஹா செய்வார். பயணத்திலிருந்து வந்தவரை முஆனகாவும் (ஆலிங்கனமும்)செய்வார். மரியாதைக்காக ஆலிம்கள், வலிமார்களின் முட்டுக்காலை தொடுவார் (தொட்டு கையை முத்தமிடலாம்.)

தும்மியவர் அல்ஹம்துலில்லாஹ் சொல்வது சுன்னத் முஅக்கதா. கேட்டவர் யர்ஹமுகல்லாஹ் என்பது வாஜிப். அதற்கு பதிலாக தும்மியவர் "ய∴பரல்லாஹு லீ வலகும்" என்றோ சொல்வது முஸ்தஹப்.

அல்லாஹ் தும்மலை உவக்கிறான். கொட்டாவியை வெறுக்கிறான். ஆதவே முடிந்தளவு கொட்டாவியை அடக்க வேண்டும். கொட்டாவி விட்டால் ஷைத்தான் சிரிக்கிறான். (ஆகவே அஊதுபில்லாஹி மினஷ் ஷைத்தானிர்ரஜீம் என்க.)

# இஸ்லாமுடைய சுன்னத்துகள்

எப்போதும் இஸ்திங்.'.பார், தவ்பா செய்வதும், துஆ செய்வதும், ஆஷுரா நாளை சங்கை செய்வதும் நோயாளியை நலம் விசாரிப்பதும், ஒழுக்கமான உடைஅணிவதும், அல்லாஹ்விற்கு முன் தாழ்ச்சியை வெளிப்படுத்தி ஒரு சில நேரம் வெறுங்காலால் நடப்பதும், முஸ்லிமுக்கு செருப்பு வாங்கி கொடுப்பதும், முஸ்லிம் ஏழைகளை தன் உணவில் சேர்த்துக் கொள்வதும், விருந்து கொடுப்பதும், தம்மைப் பார்க்க வந்தவரை கண்ணியப்படுத்துவதும், அவர் அமர தலையணை, (பாய், விரிப்பு, இருக்கை போன்றதை) போடுவதும், அவருக்கு பணிவிடை செய்வதும், ஆயினும் சந்திக்க வந்தவர் அவரது பணிவிடையை தட்டாமலிருப்பது வாஜிப்.

தலையணை, எண்ணை, பால் ஆகியவற்றை மறுக்கக் கூடாதென ஹதீஸில் வந்துள்ளது. சந்திக்க வந்தவர் அல்லாஹ்வின் 'முன் தாழ்மையை விரும்பிபெற்ற தலையனையில் சிறிதமர்ந்து பின் கீழமர்வார். இருவரும் பரஸ்பரம் நலம் விசாரித்துக்கொள்வர். அல்லாஹ்வின் கிருபையால் நலமென்று கூறி அல்லாஹ்வைப் புகழ்வர். பின்பவருக்கு ஏதேனும் உண்ணக் குடுப்பார்.

விருந்தளிப்பது வாஜிபுக்கு நெருக்கமான சுன்னத் முஅக்கதா. அது நேசத்திற்கு வழிகோலும். விருந்தளித்தவர் விருந்துண்டவரின் திருப்தியை நாடுவார். பெயர், புகழ், பிர்தி உபகாரத்தை எதிர்பார்க்கக் கூடாது.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

விருந்து படைத்தவர்களில் ஹழ்ரத் சய்யிதுனா இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் முன்னோடியாவர். அவர்களுக்கு "அபுழ்ழீ.'.பான்" (விருந்தாளிகளின் தந்தை, முன்னோடி ) என பெயருண்டு. எனினும் தக்வா உள்ள மு.'.மின்களுக்கே விருந்தளிப்பார். தன்னிடமுள்ளதில் சிறந்ததை விருந்தளிப்பார். தானே விருந்தாளிகளை உபசரிப்பார். பிறரை ஏவார். விருந்தில் ஆலிம்கள், மூத்தவர்களை முற்படுத்துவார். வேண்டுமா என்று கேட்காமல் இருப்பதை முன் வைத்து அவர் விரும்பியதைப் பரிமாறுவார். விருந்தாளிகளை உபசரிக்க கடன் வாங்கினாலும் வருத்தப்பட வேண்டாம். விருந்தில் தன் உறவுகளையும், நல்லவர்களையும் (ஏழை, எளியவர்களையும்) சேர்த்துக் கொள்வார். வாசல்வரை வந்து விருந்தாளிகளை வழியனுப்புவார். விருந்தாளி அவருக்காக துஆச் செய்து செல்வார்.

விருந்தாளி பெருந்தன்மையோடு, அதபோடு நடந்து கொள்ள வேண்டும். விருந்தளிப்பவர் வீட்டில் நடக்கும் விஷயங்களைத் துருவக் கூடாது. பார்வையை தாழ்த்திக் கொள்ள வேண்டும். அவருக்கு அதிகம் செலவு வைக்கக் கூடாது. உணவைக் குறை சொல்லக் கூடாது. தன் வீட்டில் உண்பது போல அதை விட நன்றாக உண்பார். பால், எண்ணை, நறுமணம், தலையணை , ஜம்ஜம் நீரை(த் தந்தால்) மறுக்கலாகாது. உண்டபின் துஆச்செய்வார். உண்டு அங்கேயே அமர்ந்திருக்காமல் புறப்பட உத்தரவு கேட்பார்.

## உணவு, குடிப்பின் ஒழுக்கம்

பித்தட்டில் அமர்ந்து முட்டுக்காலை நட்டுவைத்துண்பது ஏற்றம். அதற்கடுத்து இரு முட்டுக்காலிலும் இரு கால்பட அமர்வது. அடுத்து சிறந்தது வலது காலை நட்டி இடது காலில் அமர்ந்துண்ணுவது. உணவு வணக்கத்திற்கு உடல் பலம்பெற என நினைக்க வேண்டும். இன்பம் பெருகுவதை நாடார். உண்டபின்

اَللّٰهُمَّ اجْعَلْهُ عَوْنًا عَلٰى طَاعَتِكَ وَلَا تَجْعَلْهُ عَوْنًا عَلٰى مَعْصِيَتِكَ

"அல்லாஹும்மஜ்அல்ஹு அவ்னன் அலா தாஅ(த்)திக வலா தஜ்அல்ஹு அவ்னன் அலா ம.்.சியதின் என்று துஆ கேட்பது முன்னோர்களின் நடைமுறை.

முடிந்தவரை பசித்த பின்பே சாப்பிட வேண்டும். செருப்பணிந்தவாறு சாப்பிடக் கூடாது. சு.்.ப்ராவில் (உணவு விரிப்பில்) வைத்து சாப்பிடுவார். சாயாமல், கை ஊன்றாமல் உண்பார். பாலல்லா உணவு வந்தால்

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْهِ وَاَطْعِمْنَا خَيْرًا مِنْهُ "அல்லாஹும்ம பாரிக்லனா .்.பீஹி வஅத்இம்னா கைரம்மின்ஹு" என்றும் பால் வந்தால்

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْمَا رَزَقْتَنَا وَزِدْنَا مِنْهُ

"அல்லாஹும்ம பாரிக் லனா .்.பீமா ரஜக்தனா வஜித்னா மின்ஹு" என்றும் துஆ செய்வார். சப்தமாக "பிஸ்மில்லாஹ்" சொல்லி உண்பார். பிஸ்மியை மறந்து

இடையில் நினைவுக்கு வந்தால் "பிஸ்மில்லாஹி அவ்வ லுஹு'வ ஆகிருஹு" என்பார். நடுவிலிருந்து எடுத்துச் சாப்பிடாமல் ஓரத்திலிருந்து உண்பார். சிறு பிடியாய் பிடித்து, நன்றாக மென்று 3விரல்களால் உண்பார். சூடானதை ஆறும்வரை மூடிவைத்து பிறகுண்பார். தக்வா உடையோர், நல்லோருடன் சேர்ந்து சாப்பிடுவார். கெட்டவர்களுடன் கூடார். காலை உணவை ளுஹருக்கு முன் இயன்ற வரை காலை சீக்கிரம் உண்பார். சு.ஃப்ராவில் விழுந்ததை உடன் எடுத்து (கழுவி) சாப்பிடுவார். உப்பால் துவங்கி உப்பால் முடிப்பார். அது 70 நோய்க்கு மருந்தாகும். முன், பின் மணிக்கட்டு வரை கை கழுவுவார். வலதுகையால் உண்பார். முடிந்தபின் விரல்களை சூப்புவார். உண்ட பாத்திரத்தை நாவாலோ, கையாலோ வழித்துண்பார். பின் பல் குத்தி வாய் கொப்பளித்து

اَلْحَمْدُ لِلّٰهِ حَمْدًا كَثِيْرًا طَيِّبًا مُبَارَكًا فِيْهِ كَمَا يُحِبُّ رَبَّنَا وَيَرْضٰى

"அல்ஹம்துலில்லாஹி ஹம்தன் கஸீரன் தய்யிபம் முபாரகன் ஃபீஹி கமா துஹிப்பு ரப்பனா வதர்ழா" என்றோ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنِيْ هٰذَا الطَّعَامَ وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِّنِّيْ وَلَا قُوَّةٍ

"அல்ஹம்து லில்லாஹில்லதீ அத்அமனீ ஹாதத்தஆம வரஜகனீஹி மின் ஙைரி ஹவ்லிம் மின்னீ வலா குவ்வஹ்" என்று புகழ்ந்து சூரா இக்லாஸ், குறைஷ் ஓதுவார். வழமைபோல் ஃபாத்திஹா ஓதுவதும் அழகான செயல்.

நீரருந்தும்போது வலக்கையால் பிடித்து பிஸ்மில்லாஹ் சொல்லி 3 மூச்சில் குடிப்பார். நீரினுள் மூச்சு விடக் கூடாது. சூப்புவது போல் கொஞ்சம், கொஞ்சமாக குடிப்பார். ஊத்துவது போல் நிறைய நிறையவாக குடிக்கக் கூடாது. நீர் நிறைய குடித்தால் உடல் செரிமானத்துக்கு இடையூறாகும். பார்த்த பின் குடிப்பார். சூடானதை வாயால் ஊதக் கூடாது. குடித்த பின்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ سَقَانَا عَذْبًا فُرَاتًا بِرَحْمَتِهٖ وَلَمْ يَجْعَلْهُ مِلْحًا اُجَاجًا بِذُنُوْبِنَا

“அல்ஹம்துலில்லாஹில்லதீ சகானா அத்பன் ஃபுராதன் பிரஹ்ம(த்)திஹி வலம் யஜ்அல்ஹு மில்ஹன் உஜாஜன் பிதுனூபினா“ என்று புகழ்வார். வெறும் வயிற்றில் தண்ணீர் குடிக்கலாகாது. தாகம் பொறுக்காவிட்டால் ஏதேனும் கொஞ்சம் உண்டு குடிப்பார். சாப்பாட்டுக்கிடையில் குடிக்கலாகாது. தாகம் மிகைத்தாலோ, விக்கினாலோ தவிர. மற்றவர் உணவளித்தால் உண்டபின்

اَللّٰهُمَّ بَارِكْ لَهُ فِيْمَا رَزَقْتَهُ وَيَسِّرْ لَهُ اَنْ يَّفْعَلَ خَيْرًا مِّنْهُ وَقَنِّعْهُ بِمَا اَعْطَيْتَهُ وَاغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَاجْعَلْنَا وَاِيَّاهُ مِنَ الشَّاكِرِيْنَ

“அல்லாஹும்ம பாரிக்லஹு ஃபீமா ரஜக்தஹு வயஸ்ஸிர்லஹு அய்யஃப் அல கைரம்மின்ஹு வகன்னிஃஹுமா அஃ(த்)தைத்தஹு பிமா வஃபிர்லஹு வர்ஹம்ஹு வஜ்அல்னா வ இய்யாஹு மினஷ்ஷாகிரீன்“,

اَللّٰهُمَّ اغْفِرْ لَنَا وَلِصَاحِبِ هٰذَا الطَّعَامِ

وَارْزُقْهُ مِنَ الْحَلَالِ وَجَنِّبْهُ مِنَ الْحَرَامِ وَتَمِّمْ نِيَّتَهُ وَتَقَبَّلْ

ضِيَافَتَهُ وَاشْفِ مَرْضَاهُ وَارْحَمْ مَوْتَاهُ مَعَ الْآكِلِيْنَ اَللّٰهُمَّ زِدْهُ وَ

لَا تَنْقُصْهُ وَإِنْ تَعُدُّوْا نِعْمَةَ اللّٰهِ لَا تُحْصُوْهَا إِنَّ اللّٰهَ لَغَفُوْرٌ رَّحِيْمٌ

"அல்லாஹும்மங்.ஃ.பிர் லனா வலிசாஹிபி ஹாதத் தஆம். வர்ஜுக்ஹு மினல்ஹலாலி வ ஜன்னிப்ஹு மினல் ஹராமி வதம்மிம் நிய்யதஹு வதகப்பல் ழியா.ஃ. பதஹு வஷ்.ஃ.பி மர்ழாஹு வர்ஹம் மவ்தாஹு மஅல்ஆகிலீன். அல்லாஹும்ம ஜித்ஹுவலா தன்குஸ்ஹு வ இன்தஉத்து நி.ஃ.ம(த்)தல்லாஹி லா துஹ்சூஹா இன்னல்லாஹ லங.ஃ.பூருர்ரஹீம்" போன்ற துஆக்களைச் செய்வார்.

## சுனனுல்ஹுதா, சுனனுஜ்ஜவாயித் விளக்கம்

சுன்னத்தென்பது தீனிலே நடக்கும் பாதை. அதாவது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் அவர்களுக்குப் பின் குலா.ஃ.பாயே ராஷிதீன்களும் தம் வாழ்வில் தொடர்ந்து பேணிய விஷயங்கள் எனும் சுன்னத் முஅக்கதாவாகும்.

அவை இமாம் ஜமாஅத், பாங்கு, இகாமத், கத்னா, மிஸ்வாக், வாய் கொப்பளிப்பது, நாசிக்கு நீர் செலுத்துவது போன்றன.

மற்றபடி ஒரு சில நேரங்களில் விட்டபோதும் தொடர்ந்து செய்து வந்தவை சுனனுஜ்ஜவாயித் எனப்படும் முஅக்கதா அல்லாத சுன்னத்தாயிருக்கும்.

அவை எழுதல், அமர்தல், ஆடை அணிதல், செருப்பணிதல், தலைவாருதல் போன்றன. இதற்கு “ஆதத்“ எனும் பழக்க வழக்கங்கள் என்றும் கூறப்படும். இது முஸ்தஹப்புக்கு மேலானது சுனனுல் ஹுதாவிற்கு அடுத்தபடியானது. இதையும், முஸ்தஹப்பையும் விடுவது மக்ரூஹல்ல. எனினும் கிலா.்.புல் அவ்லா ஏற்றத்திற்கு மாற்றம். எனினும் வுளு, முழுக்கு, தயம்மும் போன்றதிலும், ஆடை, காலணி, மோஜா (காலுறை) கிர்வால் (கீழாடை) அணிவதிலும், பள்ளியில் நுழைவது, மிஸ்வாக், சுர்மா, நகம்களைவது, கம்கட்டு முடி பிடுங்கல், தலையை மழித்தல், தொழுகையில் நிறைவாக சலாம் கூறுதல், உண்ணல், குடித்தல், முசா.்.பஹா செய்தல், ஹஜ்ருல் அஸ்வதை முத்தமிடல், கலாவிலிருந்து (மல, ஜலம் கழித்துவிட்டு) புறப்படுதல், எதையும் எடுத்தல், கொடுப்பதிலிருந்தும் இது போன்றதில் வலது புறமிருந்து துவங்குவார். இதற்கு மாற்றமான விஷயத்தில் இடது புறமிருந்து துவங்கிடுவார். அதாவது சளி சிந்துவது, எச்சில், காரலை வெளியேற்றுவது, கலாவில் புகுவது, பள்ளியிலிருந்து வெளியேறுவது, மோஜா, காலணி, ஆடை களைவது, இஸ்தின்ஜா துப்புரவு செய்வது, அருவருப்பானவற்றைச் செய்வது போன்றன.

பள்ளிக்குள் புக நாடின்

أَعُوْذُ بِاللّٰهِ الْعَظِيْمِ وَ بِوَجْهِهِ الْكَرِيْمِ وَسُلْطَانِهِ الْقَدِيْمِ

مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ

"அஊதுபில்லாஹில் அளீம் வபிவஜ்ஹிஹில் கரீம், வசுல்(த்)தானிஹில் கதீம் மினஷ் ஷைத்தானிர் ரஜீம்" என்பார். நுழையும்போது

بِسْمِ اللّٰهِ وَالسَّلَامُ عَلٰى رَسُوْلِ اللّٰهِ اَللّٰهُمَّ

صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى اٰلِ مُحَمَّدٍ اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ ذُنُوْبِيْ وَافْتَحْ

لِيْ اَبْوَابَ رَحْمَتِكَ

"பிஸ்மில்லாஹ், அஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ்- அல்லாஹும்ம சல்லி அலா சய்யிதினா முஹம்மத் வஅலா ஆலி சய்யிதினா முஹம்மத். அல்லாஹும்மங்.பிர்லீ துநூபீ வ.ப்தஹ் அப்வாப .பழ்லிக (அல்லது ரஹ்மதிக)" என்பார். பள்ளியில், வீட்டில் எவருமில்லாத போது நுழைந்தால்

اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ

"அஸ்ஸலாமு அலைனா வஅலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன்" என்பார். மலக்குகள் பதில் கூறுவர். உள்ளே யாருமிருந்தால் அவர்களுக்கு சலாம் உரைப்பார். தொழுபவருக்கு சலாம் சொல்ல மாட்டார்.

ஒருவரது வீட்டிற்குச் சென்றால் புகும்முன் உத்தரவு தேடுவது வாஜிப். உள்ளே போனால் முந்தி சலாம் கூறி பின்பே

பேசுவார். பெருமானாருக்கு மிகப்பிரியமானது தூய வெள்ளை ஆடை. ஒரு சில நேரங்களில் பச்சை ஆடை. ஒரு சில நேரம் கம்பளி ஆடை அணிவார்கள். சிகப்பு அல்லது பச்சை அல்லது நீல கோடிட்ட "புர்த்" எனப்படும் ஆடை நாயகத்திற்கு மிகப் பிரியமாய் இருந்தது. (உடல் தெரியும் படியான) மெல்லிய ஆடையை யார் உடுத்துகிறாரோ அவரது மார்க்கம் பலகீனப்பட்டுவிடும் என ஹதீஸ் எச்சரிக்கிறது. (அதைக் தவிர்ப்பது அவசியம்.)

ஆடை கிழியும் வரை போட்டுக் கொண்டிராமல் (கொஞ்சம் பழசானதும்) ஏழைகட்கு தந்து விடுவார்கள். ஆடையை அவ்ரத்தை மறைக்கவும், (காணும்) முஸ்லிம் சகோதரர்கள் விரும்பவும் வேண்டி அணிவாகள். (அணியும்போது) பிஸ்மி கூறி உடுத்தி பின்

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ كَسَانِيْ هٰذَا وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّيْ وَلَا قُوَّةٍ

"அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ ஹாதா வரஜகனீஹி மின் ஙைரி ஹவ்லிம்மின்னீ வலா குவ்வஹ்" என்பார்கள். சிர்வாலை (கீழாடையை) அமர்ந்து அணிவார்கள். எந்த உடுப்பையும் கரண்டைக்குக் கீழ் இறக்க மாட்டார்கள். அரை கெண்டைக்கால் வரை உயர்த்திக் கொள்வார்கள். சட்டையை முந்தி அணிவார்கள். பெருமானாரின் சட்டையின் முன் கை நீளமாகவும், சில பொழுது குட்டையாகவும் இருந்து வந்தது. தலைப்பாகை மிகச் சிறந்த உடுப்பு. பெருமானார் கருப்பு தலைப்பாகை

அணிந்துள்ளார்கள். அது ஏழு முழமாகவும், 12 முழமாகவும், (சிலசமயம்) அதைவிடக் குறைவாகவும் இருந்து வந்தது.

தலைப்பாகையை இரு புஜத்துக்கிடையில் (பின்புறம்) ஒரு ஜான் அளவு தொங்க விடுவார்கள். இரு புறத்தில் எந்த ஒரு புறமும் விடலாம். பெருமானார் புத்தாடையை வெள்ளி கிழமை பகலில் அணிவார்கள். ஒரு வீட்டிலிருந்து (தம்)மறு வீட்டுக்கு வெள்ளி இரவு செல்வார்கள். பெரும்பாலும் அத்தஹிய்யாத் இருப்பில் அமர்வது போன்றே அமர்ந்திருப்பார்கள்.

வெளியே கிளம்பும்போது

بِسْمِ اللّٰهِ وَتَوَكَّلْتُ عَلَى اللّٰهِ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ اَللّٰهُمَّ اِنِّيْ اَعُوْذُ بِكَ مِنْ اَنْ اَزِلَّ اَوْ اُزَلَّ اَوْ اَضِلَّ اَوْ اُضَلَّ اَوْ اَجْهَلَ اَوْ يُجْهَلَ عَلَيَّ

“பிஸ்மில்லாஹ் வ(த்)தவக்கல்து அலல்லாஹ் வலாஹவ்ல வலா குவ்வ(த்)த இல்லா பில்லாஹ். அல்லாஹும்ம இன்னீ அஊதுபிக மின் அன் அஜில்ல அவ் உஜல்ல அவ் அழில்ல அவ் உழல்ல அவ்அஜ்ஹல அவ் யுஜ்ஹல அலய்ய“ என்று கூறி ஆயத்துல்குர்ஸி ஓதுவார்கள். முன்புறம் சாய்ந்தவாராக சரியாக நடப்பார்கள். பெருமையாய் (நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு) நடக்கமாட்டார்கள். இரு பெண்களுக்கிடையில் நடக்க மாட்டார்கள். பாதையில்

ஓரங்களை பெண்கள் நடக்க விட்டு விடுவார்கள். பாதையில் (நடக்க) இடைஞ்சலாகக் கிடப்பதை (கல், முள் போன்றதை) அகற்றுவார்கள். தேவையின்றி கடைத்தெரு போகமாட்டார்கள். மஞ்சள் செருப்பு, காலுறை மகிழ்ச்சி தரும்.

மு.்.மினின் காரியங்களில் மிகச்சிறந்தது மௌனம். சலாமத்தில் (நிம்மதியில்) 10ல் 9 பங்கு வாய்மூடி இருப்பதில் உள்ளது. 1 பங்கே பேசுவதில் உள்ளது. தேவையில்லாத இடத்தில் பேசக் கூடாதென

சய்யிதுனா அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு தம் வாயில் பொடிக்கற்களை போட்டுக்கொள்வார்கள். 13 வருடங்கள் அப்படி இருந்தார்கள் என ரிவாயத் வருகிறது. ஆக பேசிட அவசியம் ஏற்பட்டால் அல்லாஹ்வின் நினைவு கூறலை, நன்மையை எடுத்தோதுவதை, தீமையை தட்டுவதைப்பற்றி பேசுவார்கள். தனக்கு தேவையில்லாததை தவிர்ந்து கொள்ளவும். பெருமானார் வெகுநேரம் கூட மௌனமாயிருப்பார்கள். பேச நாடினால் சிறிது தாமதித்து, யோசித்து , பலன்தரும் பேச்சை மட்டுமே பேசுவார்கள்.

பேச்சை அல்லாஹ்வின் புகழ்கொண்டு, சலவாத், அஊது, பிஸ்மி கொண்டு துவங்குவார்கள்.

வயதில், கல்வியில் மூத்தவர்கள் பேசிய பின் பேச வேண்டும். சப்தத்தை தாழ்த்திட வேண்டும். நிறைய பேசக் கூடாது. வெளியிலிருந்து வீட்டிற்கு வரும்போது ஆயத்துல்குர்ஸி, இக்லாஸ், ்.பாத்திஹா ஓதுவார்கள். இரவில் பிஸ்மி கூறி கதவை அடைப்பார்கள். இரு கதவெனில் வலப்புறம் முந்தி

அடைப்பார்கள். கதவிலா வீட்டில் திரை போடுவார்கள். தீயை அணைத்து விடுவார்கள். தூங்க வுளு செய்து, மிஸ்வாக் செய்வார்கள். வுளுவிற்கு நீரையும், மிஸ்வாக்கையும் தயாராக பக்கத்தில் வைத்துக் கொள்வார்கள். விழிக்கும்போதெல்லாம் மிஸ்வாக் செய்வார்கள். வசிய்யத் (நாமா) எழுதி தலைக்குக் கீழ் வைத்துக்கொள்வார்கள். பாவங்களைவிட்டு தவ்பா செய்து மீளுவார்கள். இஷாவிற்குப் பின் உலகப்பேச்சு பேசக் கூடாது. முக்கியமான தீன் சம்பந்தப்பட்ட விஷயங்களைப்பேசலாம். ஒரு சமயம் பாயிலும், ஒரு சமயம் தரையிலும் படுத்துறங்க வேண்டும். விரிப்பை 3 முறை 3குர்ஆன் ஆயத் ஓதியவாறு உதற வேண்டும். பின் இக்லாஸ், ஃபலக், நாஸ் ஓதி இரு கையில் ஊதி முகம், சரீரத்தில் தடவ வேண்டும்.

அத்தோடு ஆயத்துல்குர்ஸி, ஆமனர்ரசூல், ஷஹிதல்லாஹு, அடுத்த இன்னத்தீன இன்தல்லாஹில் இஸ்லாம் ஆயத்வரை, கஹ்பின் கடைசி 4 வசனம் ஆகியவற்றையும் ஓதி உறங்க எந்த நேரம் விழிக்க நினைக்கிறாரோ அந்த நேரம் அல்லாஹ் எழுப்புவான். சூரா தகாசுர், காஃபிரூன் ஓதி பிஸ்மில்லாஹில்லதீ லா யழுர்ரு மஅஸ்மிஹி ஷைஉன்ஃபில் அர்ழி வலா ஃபிஸ்ஸமாஇ வஹுவஸ் ஸமீஉல் அலீம், ரப்பி கினீ அதாபக யவ்ம துப்அசு இபாதக ஆமன்(த்)து பிகிதாபிகல்லதீ அன்ஜல்(த்)த வநபிய்யிகல்லதீ அர்சல்(த்)த என்று கூறி தன் விலாவை இருப்பில் வைத்து

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

بِاسْمِكَ رَبِّي وَضَعْتُ جَنْبِي وَبِكَ أَرْفَعُهُ إِنْ أَمْسَكْتَ نَفْسِي فَاغْفِرْ لَهَا وَإِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ بِهِ عِبَادَكَ الصَّالِحِينَ

பிஸ்மிக ரப்பீ வழ.்.(த்)து ஜன்பீ வபிக அர்.்.பஉஹு இன் அம்ஸக்(த்)த ந.்.ப்ஸீ .்.பங்.்.பிர்லஹா வஇன் அர்ஸல்(த்)தஹா .்.பஹ்.்.பள்ஹா பிஹா தஹ்.்.பளு பிஹி இபாதகஸ்ஸாலிஹீன் என்று கூறுவார்கள். வலது கையை கன்னத்துக்கு கீழே வைத்து வலப்பாகம் கிப்லா நோக்க படுப்பார்கள். வலதுபுறம் கொஞ்ச நேரம் படுத்து பின் இடப்புறம் திரும்புவார்கள். தூக்கம் வரும்வரை திக்ர் (தஸ்பீஹ்) செய்வார்கள். இடையில் விழித்தால் 4ம் கலிமாவும் 3ம் கலிமாவும் ஓதி துஆ செய்வார்கள். வீட்டறையில் தனித்துறங்க மாட்டார்கள். வாசல்படியிலும், கையில் கெட்ட நாற்றம் வீசும் நிலையிலும் சுற்றுக் கட்டில்லா (தடுப்பில்லா) மெத்தையிலும், கதவோ, திரையோ இல்லாவீட்டிலும், சுபுஹ், அசருக்குப் பின்பும் தூங்கக் கூடாது. நல்ல கனா கண்டால் சரியான வழிகாட்டும் ஆலிமிடம் மட்டுமே கூற வேண்டும். கெட்ட கனா கண்டால் இடப்புறம் துப்பி (துப்புவது போல் சைக்கினை செய்து) அல்லாஹ்விடம் மும்முறை காவல் தேடி அப்புறம் விட்டு திரும்பி படுப்பார்கள். பின் எழுந்து 2 ரக்அத் தொழுவார்கள். (கெட்ட கனவை) மனிதரிடம் கூறார். சதகா செய்வார்கள்.

அதன் பரகத்தால் அல்லாஹ் அதன் தீங்கை விட்டும் காப்பான். கனாவை கண்டது போல் கூறுவார்கள். பொய் சொல்லார். சாலிஹானவருக்கு வரும் நல்ல கனவு நுபுவ்வத்தில் 40ல்

ஒன்று என்றும், கனவில் மிக உண்மையானது சஹர் நேரக் கனவென்றும் ஹதீஸ்களில் வந்துள்ளது.

பெருமானாரைக் கனவில் கண்டால் அக்கன்வு நிஜம் என நம்ப வேண்டும். ஹதீஸ் கூறும்.. ஷைத்தான் எனைனப் போலவோ, க.ஃ.பா போலவோ தோற்றமெடுக்க முடியாது. எனை கனாவில் கண்டவர் எனையே கண்டார்.

பெருமானாரை கனவில் காண நாடின் அவர்கள் மீது அளப்பரிய நேசத்தோடு அதிகமதிகம் சலவாத் ஓதுவார். பின்

اَللّٰهُمَّ رَبَّ الْبَلَدِ الْحَرَامِ وَالشَّهْرِ الْحَرَامِ وَالْحِلِّ وَالْحَرَامِ

وَالرُّكْنِ وَالْمَقَامِ اِقْرَأْ عَلٰى رُوْحِ مُحَمَّدٍ مِّنَّا السَّلَامَ

“அல்லாஹும்ம ரப்பல் பலதில் ஹராம். வஷ்ஷஹ்ரில் ஹராம் வல் ஹில்லில் ஹராம் வர்ருக்னி வல் மகாம் இக்ர.ஃ. அலா ரூஹி முஹம்மதிம் மின்னஸ்ஸலாம்“ என்பார். “சலாத்துல் அப்ஹர்“ தொழுது பெருமானாரை கனவில் காணாவிட்டால் உமர் உமரல்ல. உமரின் ஆன்மா எவன் வசமோ அவன் மீதானை. அதைத் தொழுதால் அல்லாஹ் அவனது தேவைகளை நிறைவேற்றி வைத்து, பூமி நிரம்பிய அளவு இருந்தாலும் அவன் பாவத்தை மன்னிப்பான். என ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு கூறுகிறார்கள். (சலாத்துல் அப்ஹர்... ஒரு சலாமில் 4 ரக்அத். ஒவ்வொரு ரக்அத்திலும் .ஃ.பாத்திஹா ஓதிய பின் இன்னா அன்ஜல்னா சூரா 10 முறை பின் சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்

15 முறை. பின் ருகூ., சிறு நிலையில் தஸ்பீஹிற்குப் பின் மேற்கண்ட 3ம் கலிமாவின் முந்திய பாதியை 3 முறை வீதம் சொல்வார்.சிறு இருப்பில் ஒன்றுமில்லை. தொழுததும் எவரிடமும் பேசாமல் இன்னா அன்ஜல்னா 10 முறை, மேற்கண்ட 3ம் கலிமா முதற்பகுதி 33 தடவை ஓதி ஜஜல்லாஹு முஹம்மதன் அன்னா மாஹுவ அஹ்லுஹு என்பார்.)

திடுக்கமான கனவுகள் வராதிருக்க விழிப்பில் அல்லாஹ்வை பயந்து கொள்வீர். நித்திரையில் கண்டதை பாராட்டாதே (பகிரங்கப்படுத்தாதே) என இமாம் முஹம்மத் பின் சிரின் ரஹிமஹுல்லாஹ் சொல்லியிருக்கிறார்கள்.
ஒவ்வொரு இரவிலும் ஒவ்வொரு கண்ணிலும் மும்முறை சுர்மா இடுவார்கள். அது பார்வையை பாதுகாக்கும். கண் ரோமத்தை முளைவிக்குமென ஹதீஸில் வருகிறது. ஆஷுரா நாள் சுர்மா இட்டால் இரு கண்ணுக்கும் எப்போதும் நோக்காடு (துன்பம்) வராதென ஹதீஸில் வருகிறது.
கஸ்தூரி (அத்தர்) போன்ற நறுமணம் பூசுவார். ஆண் மணம் வெளிவரும் அத்தர் பூசுவார்கள். பெண் அதற்கு மாற்றமாய். கணவன் விரும்பின் (கணவன் முன்பு மட்டும்) மணம் வெளியாகும் அத்தர் பூசுவாள்.
கை, காலில் மருதாணி பெண்ணிற்கு சுன்னத். ஆண் அதை தவிர்த்துக் கொள்வார். தலை, தாடியில் எண்ணை தடவி பேன், பொடுகை நீக்கி சீப்பால் சீவுவார். எண்ணை தடவினால் புருவத்திலிருந்து துவக்குங்கள். அது தலை

வலியைப் போக்குமென ஹதீஸில் வருகிறது. பெருமானார் இடது கையில் எண்ணை ஊற்றி முதலில் புருவத்தில் பின் மீசையில் பின் தாடியில் பின் தலையில் தடவுவார்கள்.

ஒருநாள் முடியை சீவுவார்கள். ஒரு நாள் விடுவார்கள். எனினும் பரட்டைத் தலையாய் இருக்கலாகாது. தலைமுடி வளர்ப்பது மூளைக்கு பயனளிக்கும், சூட்டை, குளிரை தடுக்கும். ஆனபோதும் (ஆண்)கொண்டை கட்டாமல் (நடுவில் வாங்கெடுத்து) இருபுறம் விடுவார். எனினும் சய்யித் மார்களுக்கு ஒப்பாகுமளவு விட மாட்டார். முழுக்கில் துப்புரவை, பேணுதலை நாடினால் தலைமுடி மழிக்கலாம். ஜும்ஆ நாளில் தலைமுடி மழித்து, ஒரு பிடிக்கு மேலுள்ள தாடியை தரிப்பார். தாடியை மழிப்பது ஹராம். பெண் தலைமுடி சிரைத்தால் பாவியாகிடுவாள். சாபத்திற்குரியவளாகி விடுவாள். ஆண், பெண் நரைத்த முடிக்கு சிகப்பு, மஞ்சள் சாயம் பூசலாம். கருப்பு சாயம் பூசக் கூடாது. எனினும் எதிரிகளை மிரளவைக்கவோ, மனைவிக்கு தன்னை அழகாக காட்டவோ கருப்பு சாயம் பூசலாம் (எனினும் மார்க்கம் அனுமதிக்காத பொருட்கள் கலந்த சாயங்கள் கூடாது).

நரை முடியை பிடுங்கலாகாது. அது மு.'.மினுக்கு ஒளி. மீசை குறைப்பு, கீழ் முடி தரிப்பு, கம்கட்டு முடி பிடுங்கல் சுன்னத் முஅக்கதா. உதட்டின் அருகு (ஓரம்) வெளியாகும்படி, புருவம் போலாகும்படி மீசையை தரிப்பார். மீசையின் இரு புற (ஓர)த்தையும் விடுவது குற்றமல்ல. மூக்கு முடியை தரித்து விடுவார். பிள்ளை தாடியின் இருபுற ரோமத்தைப் பிடுங்குவது பித்அத்.

நகத்தை வலக்கை கலிமா விரலில் துவங்கி, இடது கை சிறு விரலில் முடித்து, வலது கால் சிறு விரலில் துவங்கி பெரு விரலில் முடித்து அவ்வாறே இடது காலிலும் தரிப்பது ஏற்றம். இவற்றை ஒவ்வொரு வாரமும் குறிப்பாக ஜும்ஆ நாளில் செய்வது சிறப்பு. ஜும்ஆவுக்குப் போகும்முன் செய்வார். இவற்றை வியாழனும் செய்வது சிறப்பே என வந்துள்ளது. 15 நாட்களுக்கு ஒரு முறையும் செய்யலாம். 40 நாட்களுக்கு மேல் விடுவது மக்ரூஹ் தஹ்ரீம்.

கண்ணாடியில், தண்ணீரில் தன் கோலத்தை சீா செய்யப் பார்ப்பார். அப்போது

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ سَوّٰى خَلْقِيْ فَعَدَّلَهُ وَكَرَّمَ صُوْرَةَ وَجْهِيْ وَحَسَّنَهَا، وَجَعَلَنِيْ مِنَ الْمُسْلِمِيْنَ، اَللّٰهُمَّ كَمَا حَسَّنْتَ خَلْقِيْ فَحَسِّنْ خُلُقِيْ وَحَرِّمْ وَجْهِيْ عَلَى النَّارِ

"அல்ஹம்து லில்லாஹில்லதீ சவ்வா கல்கீ. ஃபஅத்தலஹு வ கர்ரம சூர(த்)த வஜ்ஹீ வஹஸ்ஸனஹா வஜஅலனீ மினல் முஸ்லிமீன். அல்லாஹும்ம கமா ஹஸ்ஸன்(த்)த கல்கீ ஃபஹஸ்ஸின் குலுகீ வஹர்ரிம் வஜ்ஹீ அலன் நார் " என்பார்.

ஸ.ஃபர் (பயணம்) ஒன்று உலக ரீதியானது. மற்றொன்று மார்க்க ரீதியானது. மார்க்கம் கற்க ஆலிம்களிடம் செல்வது மனக்கட்டுப் பாட்டுப் பயிற்சிக்காக (ஷைக் மார்களிடம் செல்வது) குழப்பம் உண்டாவதை விட்டும் போவது, கா.ஃ.

பிர்களிடம் ஜிஹாத் செய்ய செல்வது தீன் பயணம். இல்ம் (மார்க்கம்)கற்க பயணிப்பதை ஜிஹாதுடைய பயணத்திற்கு ஒப்பிடுகிறது ஹதீஸ் ஷரீப். தன் தீனைக் காத்துக்கொள்ள பூமியில் இடம் மாறினால் (ஹிஜ்ரத் செய்தால்) அது ஒரு ஜானாயினும் சரி அவர் சொர்க்கவாதி என்கிறது ஹதீஸ். அத்தோடு அவர் ஹழ்ரத் இப்ராஹீம் நபிக்கும், பெருமானாருக்கும் தோழராகிட்டார் என்றும் வருகிறது.

பஞ்சத்தால் போவது, சம்பாதிக்கப் போவது, திருமணம் புரியப் போவது போன்றன உலக ரீதியான பயணம். அதில் பிறரிடம் யாசிக்காமல் வாழ வேண்டும், பத்தினித்தனமாய் இருக்க வேண்டும், குடும்பம் தம்மை பிரியப்பட வேண்டும் என்பதை நாடுவார். நிய்யத் செய்வார்.

பயணத்துக்கு வியாழன், திங்கள், சனி சிறந்தது. அதிகாலை பரகத் மிக்கது. மாதத்தில் கடைசி 3 நாட்களிலும், சந்திரன் விருச்சகத்தில் சஞ்சரிக்கும்போதும் பயணம், நிகாஹ் போன்ற (சுப) காரியங்களை பொருத்தமற்றதாக ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு கருதினார்கள் என ரிவாயத் வருகிறது.

வெள்ளிக்கிழமை (மாலை) கிழக்கு வெளுத்த பின் பயணம் போகலாம். புறப்படும் முன் ஏதேனும் சிறிது சதகா செய்வார். வீட்டில் 2 ரக்அத் தொழுவார். திரும்பி வந்த போதும் 2 ரக்அத் தொழுவார்.

புறப்படும்போது,.

بِسْمِ اللّٰهِ وَاٰمَنْتُ بِاللّٰهِ وَاعْتَصَمْتُ
بِاللّٰهِ وَتَوَكَّلْتُ عَلَى اللّٰهِ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ اَللّٰهُمَّ اِنِّيْ
اَعُوْذُبِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ وَكَاٰبَةِ الْمُنْقَلَبِ وَسُوْءِ الْمَنْظَرِ فِى الْاَهْلِ
وَالْمَالِ اَللّٰهُمَّ اَنْتَ الصَّاحِبُ فِى السَّفَرِ وَالْخَلِيْفَةُ فِى الْاَهْلِ اَللّٰهُمَّ
اطْوِلَنَا الْاَرْضَ وَهَوِّنْ عَلَيْنَا السَّفَرَ اَللّٰهُمَّ زَوِّدْنِي التَّقْوٰى وَاغْفِرْ
لِيْ ذَنْبِيْ وَوَجِّهْنِيْ لِلْخَيْرِ اَيْنَمَا تَوَجَّهْتُ

பிஸ்மில்லாஹி வ ஆமன்(த்)து பில்லாஹி வ.ஃ.(த்)தசம்(த்)து பில்லாஹி வ(த்)தவக்கல்(த்)து அலல்லாஹி. அல்லாஹும்ம இன்னீ அஊது பிக மின் வ.ஃ.சாஇஸ்ஸ.ஃ.பரி வ க.ஃ.ப(த்)தில் முண்கலபி வ சூஇல் மன்ளரி .ஃ.பில் அஹ்லி வல்மால். அல்லாஹும்ம அன்(த்)தஸ் ஸாஹிபு .ஃ.பிஸ்ஸ.ஃ.பரி. வல்கலீ.ஃ.ப(த்)து .ஃ.பில் அஹ்லி அல்லாஹும்ம(த்)த்வி லனல் அர்ழ. வஹவ்வின் அலைனஸ்ஸ.ஃ.பர. அல்லாஹும்ம ஜவ்வித்னியத்தக்வா வங்.ஃ.பிர்லீ தம்பீ வ வஜ்ஜிஹ்னீ லில்கைரி ஐனமா தவஜ்ஜஹ்(த்)து என்று கூறி குல்யா அய்யுஹல் கா.ஃ.பிரூன் முதல் அனைத்து சூராக்களையும் பிஸ்மி கூறி ஓதிச் செல்வார்.

புறப்படும்போது வீட்டிலுள்ளவர்களுக்கு..

أَسْتَوْدِعُكُمُ اللهَ الَّذِي لَا يُضِيعُ وَدَائِعَهُ

"அஸ்(த்)தவ்உகு முல்லாஹல்லதீ லா யுழீஉ வதாஇ அஹு" என்பார். உடன்பிறப்புகளிடம் பயணம் சொல்லிக் கொள்வார். முகீம் முஸா.ஃ.பிரின் (இருப்பவர் புறப்படுபவரின்) கை பிடித்து முஸா.ஃ.பஹா செய்து

أَسْتَوْدِعُكَ اللهَ تَعَالَى دِينَكَ وَأَمَانَتَكَ وَخَوَاتِيمَ عَمَلِكَ زَوَّدَكَ اللهُ التَّقْوَى وَغَفَرَ ذَنْبَكَ وَوَجَّهَكَ لِلْخَيْرِ أَيْنَمَا تَوَجَّهْتَ

"அஸ்தவ் தி உகல்லாஹ தஆலா தீனக வ அமானதக வ கவாதீம அமலிக ஜவ்வதகல்லாஹுத் தக்வா வ ங.ஃ.பர தம்பக வ வஜ்ஜஹக லில்கைரி ஐனம தவஜ்ஜஹ்த" என்று கூறி சலாம் கூறுவார். முஸா.ஃ.பிர் முகீமிடம் வீட்டாருக்குச் சொன்னது போல் சொல்வார். சுர்மா, மிஸ்வாக், சீப்பு, மீசை முடி நறுக்கும் கத்திரி, கத்தி, நகம்வெட்டி, ஊசி, நூல், கயிறு (போன்ற அத்தியாவசிய சாமான்களை) எடுத்துக் கொள்வார். நல்ல பயணத் தோழனை தேடிக் கொள்வார். 4 பேர் சேர்ந்து போவது ஏற்றம். மூவர் இருந்தால் அவர்களில் ஆலிமான, புத்திசாலியை அமீராக்கிடுவர். அமீருக்கு மாற்றம் புரியாது கட்டுப்படுவர். அமீர் தக்வா உள்ளவராக, உலகப்

பற்றற்றவராக, கொடைத்தன்மை உள்ளவராக, அன்புடையவராக இருக்க வேண்டும்.

வாகனத்தில் பிஸ்மி கூறி ஏறி அமர்ந்து அல்ஹம்து லில்லாஹ் கூறுவார். வாகனம் கிளம்பியதும் "சுப்ஹானல்லதீ சக்கரலனாஹாதா வமாகுன்னாலஹு முக்ரினீன் வ இன்னா இலா ரப்பினா லமுன் கலிபூன்" என்பார். படகு, கப்பலில், ஏறம்போது "பிஸ்மில்லாஹி மஜ்ரேஹா வ முர்சாஹா இன்ன ரப்பீ ஃகபூருர் ரஹீம். வமா கதருல்லாஹ ஹக்க கத்ரிஹி வர்அர்ழு ஜமீஅன் கப்ழ(த்)துஹு யவ்மல் கியாம(த்)தி வஸ்ஸமாவாத்து மத்விய்யாத்தும் பியமீனிஹி சுப்ஹானஹு வதஆலா அம்மாயுஷ்ரிகூன்" என்பார். ஒவ்வொரு நிறுத்தத்திலும் இக்லாஸ் 11 முறை, ஆயத்துல் குர்ஸி1 முறை (மேலே வந்த) வமா கதருல்லாஹ ஆயத் 1 முறை ஓதி பயங்கரங்களை விட்டு காவல் தேடுவார். யாதொரு ஊரில் புகுந்தால் "அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக மின் கைரிஹாதிஹில் கர்ய(த்)தி வ கைரி மாஃபீஹா வ நஊதுபிக மின் ஷர்ரிஹா வ ஷர்ரி மாஃபீஹா" என்பார்.

இறங்கும்போது பிஸ்மி கூறி இறங்குவார். மேட்டில் அல்லாஹு அக்பர் மிகுதம் கூறி "அல்லாஹும்ம லகஷ் ஷரஃபு அலா குல்லி ஷரஃப். வலகல்ஹம்து அலா குல்லி ஹால்"என்பார். பள்ளங்களில் சுப்ஹானல்லாஹ் கூறுவார். மேலும் ஹயாத்தான உலமாக்கள், வலிமார்களையும், மவ்த்தான நபிமார்கள், வலிமார்களையும் ஜியாரத் செய்து பரகத் பெறுவார். கச்சவடத்தின் (வியாபார) பயணத்தை தூரமாக்குவது மக்ரூஹ். ஊருக்கு திரும்பும் போது தன்

வீட்டில் உள்ளவர்களுக்கும், உறவுகளுக்கும் ஹதியா (அன்பளிப்பு)களை கொணர்வார். தன் குடும்பத்திற்கு சதி முட்டாகவும், (வெளிச்சம் இல்லாத நேரத்திலும்) இரவிலும் வரார். முந்தியே அறிவித்து ளுஹருக்கு முன்போ, பின்போ வருவார். ளுஹர் வக்த் மிக ஏற்றம். தன் ஊரில் புகுந்தால் 4ம் கலிமா ஓதி ஆயிபூன், தாயிபூன், ஆபிதூன, சாயிஹூன லிரப்பினா ஹாமிதூன் என்பார். முதலில் பள்ளிக்கு வந்து 2 ரக்அத் தொழுவார். வீட்டில் புகும்போது “தவ்பன் தவ்பல் லிரப்பினா அவ்பன் லாயுநாதிரு அலைனா ஹவ்பன்“ என்பார். வீட்டிலுள்ள சிறுபிள்ளைகளை அவர் முன் முற்படுத்தப்படும். அவரிடம் அல்ஹம்து லில்லாஹில்லதீ சல்லமக (தங்களை சலாமத்தாக சேர்ப்பித்த அல்லாஹ்விற்கே புகழெலாம்) என்பன போன்றதை சொல்லப்படும். அவருக்கு இறைச்சி போன்றதை உண்ண வழங்கப்படும்.

நேர்வழி, புத்திமதி சொல்லிக்கொண்டு, நேசத்தோடும், கிருபையுடன் மக்களைச் சேர்ந்து வாழ்வதே தனித்து வாழ்வதை விட, நபிலான வணக்கங்களை விட மேல். தனக்கு விரும்புவதையே தன் முஸ்லிம் சகோதரருக்கும் விரும்புவார். அவர்களின் இன்ப, துன்பங்களில் பங்கு கொள்வார். கஷ்ட, நஷ்டங்களில் கை கொடுப்பார். எனினும் நல்லவர்கள், புத்தியுள்ளவர்கள், பொறாமை, பேராசையில்லா பரந்த மனப்பான்மையுடையவர்களோடு சேர்ந்திருக்க வேண்டும். அத்தகையோருக்கு செலவு செய்வதில் மகிழ்வார். உபகாரத்தை ஏற்பார்.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

ஒருவரை நேசித்தால் அவரது பெயர், குடும்பம், ஊர் பற்றியெலாம் கேட்டு (அளவுக்கு மீறாமல்) நடுத்தரமாக புகழ்ந்து பாராட்டிப் பேசுவார். ஊண், உடுப்பில் அவரை தனியாக விட்டுச் செல்லார். அவர் பிரிவை சலிப்பார். நியாயமான எல்லா காரியத்திலும் அவருக்கு ஒத்துழைப்பார். நல்ல நண்பனிடம் ரகசியத்தையும் பகிர்ந்து கொள்வார். மு..மின் மு..மினை உவத்தலின் நோக்கம் அல்லாஹ் அதை விரும்புகிறான் என்பதனால் என்றிருக்க வேண்டும். மு..மின் மு..மினை உவந்தால் அவரது நாயையும் உவப்பர். அவரது எதிரியை விரும்ப மாட்டார். அவரிடம் குறை கண்டால் (பகிரங்கபடுத்தார்) தனிமையில் கிருபையாக எடுத்துச் சொல்லி உணர்வூட்டுவார். அவருக்கு உபதேசித்து ஏற்கமாட்டார் எனத் தெரிந்தால் அவரது நட்பை முறிப்பதே நல்லது. பின் அவரை விமர்சிக்காமல் அவரைப்பற்றி தெரியாதது போல நடந்து கொள்வார். ஒருவரையும் புறம்பேசார். மற்றவருக்கு வரும் துன்பம் கண்டு மகிழார். அன்றி அதற்காக வருந்தி அதைப்போக்க முயல்வார். மு..மின் ஓருடல் போல். ஒன்றுக்கு துன்பமென்றால் மற்ற உறுப்புகள் வாளாவிருக்காதென ஹதீஸில் வந்துள்ளது. தனை ஏசியவர், வெறுத்தவர், கஷ்டப்படுத்தியவரையும் நன்னயஞ்செய்து நண்பராக்குவார்.

இருவருக்கிடையில் சண்டையிருந்தால் சமாதானம் செய்து சேர்ப்பார். அதற்காக கூடுதலாக பேசினாலும் தகும். மக்களுக்கு பயன்தருபவரே அல்லாஹ்விற்கு உவப்பானவர்.

என்றும், உனை துண்டித்து வாழ்பவரை சேர்ந்து வாழ் என்றும் ஹதீஸில் வருகிறது. பழிவாங்கும் எண்ணம் கொள்ளார். தொழும் வேளை நண்பர்கள் வந்தால் துரிது நிறைவேற்றிவிட்டு அவர்களை கவனித்துவிட்டு அமல்களைத் தொடர்வார். மனிதர்களை அவரவர் தகுதிக்கேற்ப சங்கை செய்வார். ஜாஹிலிடம் (அறியாதவரிடம்) கல்வியைத் தேடார். அறிஞரல்லாதாரிடம் மார்க்கச் சட்டம் கேளார். பயான் செய்ய தகுதியில்லாதவரை பயான் செய்யச் சொல்லார். எனினும் ஹலாலைப் பேண வேண்டும், ஹராமைத் தவிர்ந்திட வேண்டும். (அல்லாஹ்வை அஞ்சி நடக்க வேண்டும் என்பன போன்ற விஷயங்களை எவரும்) பேசிடுவார்.

வாக்குறுதியை நிறைவேற்றுவார். முனா∴பிக்கே வாக்கு மாற்றம் செய்வார். வாக்குறுதியை நிறைவேற்ற நிய்யத் செய்து, அல்லாஹ் போதுமானவன். இன்ஷா அல்லாஹ் என்பார். அப்படிக் கூறாமல் யாருக்கும் வாக்குறுதி அளிக்கமாட்டார். ஒருவேளை முடியாமல் போனால் அச்சொற்களால் பேதகம் (பாவம்) ஏற்படாது. உலகப்பற்று இல்லாமல் இருப்பார். துன்யா அல்லாஹ்விடம் ஒரு கொசுவின் இறக்கையளவுக்கு மதிப்புடையதாக இருந்திருந்தாலும் கா∴பிருக்கு அல்லாஹ் ஒரு மிடர் நீரையும் குடிப்பாட்டி இருக்க மட்டான் “எல்லா உம்மத்திற்கும் ∴பித்னா இருந்தது. என் உம்மத்தின் ∴பித்னா (குழப்பம்) செல்வம்“ என ஹதீஸில் வருகிறது.

யாரையும் கேவலக்கண் கொண்டு பாராது தானே யாவரிலும் தாழ்ந்தவர் எனக் கருதுவார். அதற்காக திமிர் பிடித்தவர் முன் பணிந்து நடக்கார். ஆக தம் வேலையாட்களோடு சேர்ந்துண்ணுவதும், சிறுபிள்ளைகளுக்கும் முந்தி சலாம் சொல்வதும், ஏழை. எளியவர்களுடன் இருப்பதும், வீட்டுக்கு தானே சாமான் வாங்கி வருவதும் போன்ற எளிமையானவராக நடப்பார். உலமாக்களுக்கு, சய்யித்மார்களுக்கு உரிய சங்கை செய்வார். அவர்களை மனதாலும் விரும்பி, நாவாலும் நல்லபடி பேசி நடப்பார். அவர்களை ஆலோசித்து காரியம் ஆற்றுவார். முஸ்லிம் பெரியவர்களை மதித்து நடப்பார்.

நலவு விசாரிப்பதில் பெரியவர்களை முற்படுத்துவார். ஏதேனும் கொடுத்தால் சிறுபிள்ளைகளை முதன்மைபடுத்துவார். யதீம் (அநாதை)களை பேரன்போடு தன் வசம் வைத்து கவனிப்பார். வேலையாட்களிடம் மென்மையாக நடந்து கொள்வார். தன் உணவை, தன் போன்ற உடுப்பை தருவார். அவரது சக்திக்கு மேல் வேலை வாங்க மாட்டார். ஒரே நேரத்தில் பல வேலைகள் கொடுத்து சிரமப்படுத்த மாட்டார். ஒரு நாளில் 70 முறைகள் கூட அவரது பிழைகளை பொறுப்பார். அவரை அடிக்கமாட்டார். அடிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டால் கூட கோபம் தணிந்த பின் அடிப்பார். அதன் நோக்கம் அவரை திருத்துவதாக இருக்க வேண்டும். (தண்டிப்பதாக அமையக் கூடாது.) 3 அடி வரை மட்டுமே அடிப்பார். அவர் சாப்பிட ஏதேனும் கொணர்ந்தால் அதில் அவருக்கும்

உண்ணக் கொடுப்பார். அருகில் அமர வைத்து உண்ண வைப்பார். எனினும் தனிப்பட்ட தம் சொந்த விஷயங்களில் அவரை ஆலோசிப்பதை தவிர்ப்பார். அது நல்லதுக்கல்ல. அது போல வேலைக்காரர் தன் எஜமானருக்கு உண்மையாக, விசுவாசமாக, அடிபணிந்து நடப்பார். தன் முதலாளிக்கும் விசுவாசமாக இருந்து தன் ரப்புக்கும் விசுவாசமாக நடக்கும் அடியார் இரட்டிப்பு நன்மை பெறுவார் என்பது நாயகத்தின் பொன்மொழி.

அன்பளிப்பு வழங்கியவருக்கு அதைவிடச் சிறந்த அன்பளிப்பை வழங்கிடுவார். மு'.மின் மு'.மினை 3 நாளைக்கு மேல் வெறுத்து பேசாமலிருக்கமாட்டார்.

ஒரு வீட்டில் நுழைய 3 முறை வரை உத்தரவு தேடுவான். ஒவ்வொரு உத்தரவுக்குமிடையில் 2 அல்லது 4 ரக்அத் தொழும் நேரம் தாமதிப்பார், உத்தரவின்றி நுழையார். வாசலுக்கு நேர் நில்லார். வெளியிலிருந்து உள்ளே எட்டிப்பார்க்கார். கதவை மெல்ல தட்டுவார். யாரென்றால்... நான் எனாமல் தன் பெயர் விபரத்தைக் குறிப்பிடுவார்.

மு'.மினின் காரியங்களில் மிக சிறப்பானது அல்லாஹ்விற்காக நேசிப்பது, அவனுக்காகவே வெறுப்பது. இது ஈமானின் நிரப்பத்தையும், அல்லாஹ்வின் நேசத்தையும் உண்டாக்கும்.

மு'.மின் நண்பர்களை அதிகமாக்கிக் கொள்ளுங்கள். உங்கள் ரப்பு கியாம நாளில் தன் மு'.மின் அடிமையை அவரது நண்பர்களுக்கு மத்தியில் வேதனை செய்ய

வெட்கப்படுவான் என ஹதீஸில் வருகிறது. ஒரு மு.்.மின் தோழரை புதிதாக இணைத்துக்கொள்ளும் போது அவருக்கு சுவனத்தில் ஒரு தரஜா கூடுமென்பது ஹதீஸ். மு.்.மின் மு.்.மின் சகோதரரை நேசத்தோடு பார்ப்பதும் வணக்கம். முஸ்லிம் சகோதரர்கள் புண்முறுவல் செய்து அன்பை வெளிப்படுத்துவது வணக்கமென ஹதீஸில் வருகிறது. நண்பரை சந்திக்க நல்ல விதமாக கிளம்புவார். சந்தித்ததும், பிரிகையிலும் சலாம், முஸா.்.பஹா, முஆனகா செய்வார். அல்லாஹ்வைப் புகழ்ந்து இஸ்திங்.்.பார் செய்வார். ஒரே நாளில் பலமுறை சந்தித்துப் பிரிந்தாலும் சரி.

சபையில் நட்ட நடுவில் போய் உட்காராமல் மக்களோடு அமர்வார். வயதில் மூத்தவர்களுக்கு முன்னுரிமை வழங்குவார். கிப்லா நோக்கி சபையார் அமர்வர். சபையில் மக்களை விலக்கிக் கொண்டு போய் அமரார். எனினும் அவரை முன் வர அழைக்கப்பட்டால் பரவாயில்லை. மஜ்லிஸ் (சபை) எனில் திக்ர், உபதேசமுள்ளதாக இருக்கும். அவர்களிலுள்ள ஆலிம்கள், தக்வா உடையவர்களை நண்பர்களாக்கிக் கொள்வார். அல்லாஹ் ஒருவருக்கு நன்மை செய (நல்வழி காட்ட) நாடின் அவருக்கு நல்ல நண்பரை உண்டாக்குகிறான் என்கிறது ஹதீஸ் ஷரீப். இரு முஸ்லிமின் சந்திப்பு இரு கை கழுவிக்கொள்வது போல என்கிறது ஹதீஸ். அதாவது இரு கைகளும் சுத்தமாகி விடும்.

நேசம் உலகில் மட்டும் பயன்தரக் கூடியதாக அமைந்தால் போதாது. மறுமைப் பலனளிக்க வேண்டுமென்பதற்காகத்

தான். இறையச்சமுடைய, அகப்பார்வை உடைய ஆலிம்கள், நல்லடியார்களை நண்பர்களாக்கிட வேண்டும் எனப்படும்.

**அறிவீர் !** மக்களோடு பழகுவது யாருக்கு அனுமதிக்கப்பட்டுள்ளதெனில்.. மக்களிடம் பழகினாலும் கல்பு (இதயம்) எப்போதும் அல்லாஹ்வை நினைத்துக் கொண்டேயிருக்குமே அத்தகையவருக்குத்தான். மக்களோடு சேர்ந்தால் அல்லாஹ்வை மறந்து விடுபவர் தனித்திருப்பதே மேல். முப்பது வருடங்களாக நான் அல்லாஹ்வோடு பேசிக்கொண்டிருக்கிறேன். ஆனால் மக்கள் தம்மிடம் பேசுவதாகக் கருதுகிறார்கள் என ஹழ்ரத் ஜுனைத் பக்தாதி ரஹிமஹுல்லாஹ் கூறுகிறார்கள். எனினும் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் முன்னறிவுப்புச் செய்ததுபோல் தீனைக்காக்க மக்களை விட்டு வெருண்டோடி தனித்து வாழ வேண்டிய இந்த இறுதிக்கால கட்டத்தில் தனிமை அவசியமாகி விட்டது. ஃபித்னா நிறைந்த காலகட்டத்தில் எப்படி நடந்து கொள்வதென பெருமானாரிடம் வினவப்பட்ட போது.. உன் வீட்டில் இருந்து கொள். நாவைப் பேணிக்கொள். அறிந்ததை வைத்து அமல் (நன்மை) செய். உன் சொந்த வேலைகளை கவனி. உனக்கு அவசியமில்லா தவர்களின் காரியத்தில் சம்பந்தப்படாதே என்று அறிவுறுத்தினார்கள்.

நோயாளியைச் சந்தித்தால் அவர் முட்டுக் காலருகில் அமர்ந்து அவரை கூர்மையாக நோக்காமல், வலமிடம்

பார்க்காமல், தேவையற்றதைப் பேசாமல் அவர் நலம் விசாரித்து அவருக்காக ஷி.ஃ.பா கிடைக்க துஆச்செய்து திரும்புவார். அவ்விடம் மலக்குகள் ஆமீன் கூறுவர். நோயாளியின் துஆ பெறுவார். அது அம்மலக்குகளின் துஆவைப் போன்றது. நோயாளிக்காக 7 முறை துஆச்செய்வார். அவருக்கு மவ்த் அப்போதில்லையெனில் அந்த துஆவின் பரகத்தால் நலம் பெறுவார். நோயாளியை ஒரு முறை சந்திப்பது .ஃப்ளு கி.ஃ.பாயா, அடுத்தடுத்து சந்திப்பது முஸ்தஹப். எனினும் ஒரு நாள் விட்டு ஒருநாள் சந்திப்பார்.

ஆயினும் கண் வலி, கட்டி, பல் வலி, வங்கு, நரம்பு சிலந்தி உள்ள நோயாளியை பேசி,(பேச வைத்து) சிரமப்படுத்த மாட்டார். மவ்த் ஆஜரானவர் காது கேட்கும்படி கலிமா ஓதுவார். அவரை ஓதும்படி ஏவார். ஜனாஜாவை ஆயத்தமாக்கினால் ஒரு கீராத் (உஹது மலையளவு) நன்மை என்றும் அடக்கம் செய்யப்படும் வரை இருந்தால் இரு கீராத் நன்மை என்றும் ஹதீஸில் வந்துள்ளது.

யாருடைய சொந்தக்காரராவது மரணித்துவிட்டால் அவருக்கு முஸா.ஃ.பஹா செய்து, பொறுமையை உபதேசித்து மய்யித்தானவர் குறித்து நல்லவைகளை நினைவு கூறி ஆறுதல் சொல்வார். மரணித்தவருக்காக துஆச் செய்து வருவார்.

செல்வந்தர்கள் அநியாயக்காரர்களின் செல்வத்தை கண்டு கொள்ளாது தவிர்ந்து கொள்வார். அதெலாம் அவர்களை சோதிக்க என்பதை புரிந்து கொள்ள வேண்டும். துன்யா

விஷயத்தில் தனக்கு கீழுள்ளவரைக்கண்டு தன் மனதை பேராசையிலிருந்து காத்துக் கொள்ள வேண்டும். தீன் விஷயத்தில் தனக்கு மேல் நற்காரியம் புரியவரைக் கண்டு தானும் முயல வேண்டும். அல்லாஹ் அத்தகைகயவரை பொறுமையும், நன்றியுமுடையவரென பாராட்டி எழுதுகிறான் என்கிறது ஹதீஸ் ஷரீப்.

கா.்.பிர், பெரும்பாவி, பித்அத்காரன் (வழிகெட்ட மூதேவி, வழிகெடுக்கும் ஷைத்தான்) போன்றோரை புன்முறுவலோடு பார்க்கான். மாறாக கடுகடுப்போடு காண்பான். அவன் காரியத்தை அல்லாஹ் அளவில் சாட்டி விடுவார். சபிக்க மாட்டார். அத்தகையோர் தவ்பா செய்து திருந்துவதை ஆதரவு வைப்பார். (நன்மைக்கு உதவுவார். தீமைக்குதவார்) அநியாயக்காரனுக்கு உதவார். தன் பெற்றோருக்கு நன்றி செய்து எனக்கு நன்றி செய்யாதவனைக் கூட நன்றியுள்ளவன் என்பேன். ஆனால் எனக்கு நன்றி செய்தும் பெற்றோருக்கு நன்றி கெட்டவனை நன்றிகெட்டவனே என்பேன் என அல்லாஹுத் தஆலா ஹழ்ரத் மூசா அலைஹிஸ்ஸலாமுக்கு அறிவித்தான். ரப்பின் பொருத்தம் பெற்றோரின் பொருத்தத்திலுள்ளது. பெற்றோரை "சீ " என்றும் சொல்லக் கூடாதென்கிறது குர்ஆன். தன் பெற்றோரை விட மனைவி மக்களை பெரிதாக கருதுபவனின் இபாதத் ஏற்கப்படாதென ஹதீஸ் கூறுகிறது.

பெற்றோர் வரும்படி அழைத்தால் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் வர வேண்டும். பதிலளித்தல் போதாது.

அவர்களுக்குப்பின் அண்ணன், பாட்டன், பூட்டன்களுக்கு மரியாதை தர வேண்டும். தந்தையுடன் பிறந்த மாமி தாய்போல. பெற்றோரின் மரணத்திற்குப் பின்பும் அவர்களுக்காக துஆச் செய்வார். அவர்களது வசிய்யத்துகளை நிறைவேற்றுவார். அவர்களின் சிநேகிதர்களை சங்கை செய்வார். இருவருக்காக (ஈசால் சவாபாக) சதகா செய்வார். ஹயாத்திலும், மவ்த்தான பின்பும் அவர்களை ஜியாரத் செய்வார். குறிப்பாக ஜும்ஆ நாளில் ஜியாரத் செய்வது. அதனால் அவர் பாவம் மன்னிக்கப்பட்டு, நன்றி செய்தவராக எழுதப்படுவார். அவர்களுக்காக தினமும் ஐவேளை (தொழுத பின்) துஆச் செய்வார்.

கல்வியை ஞானத்தை கற்றுத்தரும் குருமார்களின் ஹக் பெற்றோரின் ஹக்கை (கடமையை) விட முந்தியது. இல்ம் (கல்வி, ஞானம்) ஆன்மாவை உயிர் பெறச் செய்கிறது. குருவிடம் அடிமை போல நடப்பார். அவர் வீட்டு வாசலைக் கூட தட்டமாட்டார். அவர்களாகவே வரும் வரை காப்பார். அடுத்து உறவுகளைப் பேணுவது வாஜிபானது. அவர்களில் பெரியவர்களை பெற்றோர் போலவும் சிறியவர்களை தம் பிள்ளை போலவும் காண்பார். அடுத்ததாக அக்கம்பக்கத்தினர் மீது கரிசனம் காட்டுவார். அது இஸ்லாத்தின் வழிமுறை (சுன்னத்). சாலிஹான பக்கத்து வீட்டாரைத் தேட வேண்டியது முக்கியமானது. பக்கத்து வீட்டாருக்கு பசித்திருக்க இவர் உண்ணார். தம்மால் இயன்றதை வழங்குவார். அவரை சிரமப்படுத்தார்.



 

சங்கடப்படுத்தார். அண்டை வீட்டார் இல்லாத போது அவர் வீட்டை, குடும்பத்தை பாதுகாப்பார். அடுத்த வீடென்பது (நாலாபுறத்திலுமுள்ள) 40 வீடுகள் என வந்துள்ளது.

தன் மனைவிக்கு உண்மையாக இருப்பார். மனைவியை நல்ல விதமாக நடத்துவார். அந்நியப்பெண்ணைக் காணார். அளவளாவார். பெண்ணும் அந்நியரைக் காணாள். அந்நியரிடம் பேசாள். அவர் கணவரின் நண்பராயினும் சரியே. கணவரில்லாத போது அலங்காரத்தையோ, உயர்தர உணவையோ விரும்பாள். அவர் தம் குழந்தைகளை பொறுப்புடன் வளர்ப்பாள். ஏசாள், அடியாள், பேசத்து வங்கியதுமே கலிமாவை கற்பிப்பாள். பிள்ளைகளுக்கு கல்வி வழங்குவதும், தற்காப்புப் பயிற்சிகளை , நீச்சலை கற்பிப்பதும் தந்தையின் பொறுப்பு. ஆறு வயதில் அதனைக் கற்பிப்பார். ஏழு வயதில் ஆண், பெண் பிள்ளைகளை தனியே பிரித்து உறங்க வைப்பார். 10 வயதில் தொழா விட்டால் அடிப்பார். ஏதேனும் பண்டமெனில் பிள்ளைகளிடையே சரியாக பங்கிட்டு வழங்குவார். பிள்ளை மரணித்தால் வுளு செய்து 2 ரக்அத் தொழுவார்.

படைப்புகளின் (மனிதர்களின்) நலம் பேணல் அவசியம், அதே சமயம் தன் மரணத்தை, மறுமையை மறந்து விடக்கூடாது. மக்களுக்கு உதவ நினைக்க வேண்டுமே தவிர மக்களிடமிருந்து எதிர்பார்க்கக் கூடாது. ஒருவர் அல்லாஹ் அளவில் மட்டுமே எதிர்பார்த்தால்

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

தேவையாவதைதவிர்ந்து கொள்வது கொள்வது தக்வாவிலுள்ள விஷயம். தேவைக்கு மக்களை நாடுவது முசீபத்தை உண்டாக்கும். தேவை ஏற்படில் பொறுமை காத்து தொழுது அல்லாஹ்விடம் யாசிப்பார். அல்லாஹ் அவரது தேவைகளை நிறைவேற்ற போதுமானவன். அவரது தேவைகளை நிறைவேற வழிகாட்டுவான். அத்தியாவசியத்திற்கு அடுத்தவரை நாட வேண்டி வந்தாலும் தவக்குல் அல்லாஹ்வின் மீதே உறுதியாக இருக்க வேண்டும். அத்தகைய சமயம் வியாழனன்று காலையே. ஆலஇம்ரானின் கடைசி (ருகூ.ஃ), ஆயத்துல் குர்ஸி, இன்னா அன்ஜல்னா, இக்லாஸ், பாத்திஹா ஓதி மிக பேணுதலுள்ள தக்வா உடைய மனிதரை நாடுவார். இன்றேல் நல்ல குடும்பம் சார்ந்தவரை நாடுவார். இன்றேல் தாராள மனம் படைத்தவரை நாடிச் செல்வார். அவர்கள் உதவினாலும்,உதவாவிட்டாலும் இன்முகத்தோடு திரும்புவார். அல்லாஹ்வை இரு நிலையிலும் புகழ்வார். அவருக்காக துஆச் செய்வார். அவரை பழிக்க மாட்டார். முஸ்லிம் சகோதரருக்கு உதவுவதை அவரும் பெரும் பாக்யமாகக் கருதுவார். அது அவருக்கு நன்மைகளை அந்துஸ்துகளை பெருக்கித் தரும். யாரும் கஷ்டப்படுவதை எண்ணி வருந்த வேண்டாம். கஷ்டத்திற்குப் பின் லேசுள்ளது.

முக்கியமான காரியங்களை இஸ்திகாரா செய்து முடிவெடுப்பார். பின் நல்ல புத்திசாலிகளான ,

அனுபவசாலிகளான நல்லோர் பத்து நபர்களை ஆலோசிப்பார். அல்லது ஒருவரிடம் 10 முறை (வரை) ஆலோசிப்பார். அத்தகையோர் இல்லாவிடில் தன் மனைவியிடமோ, தன் பெண்களிடமோ ஆலோசிப்பார். ஒருபோதும் தவறான போக்குள்ளவரிடமோ, தீய எண்ணம் படைத்தவரிடமோ, கஞ்சரிடமோ ஆலோசனை கேட்க மாட்டார். ஒன்றைச் செய்ய முடிவெடுத்த பின் நன்மை கண்டால் தொடர்வார். நஷ்டம் கண்டால் அவ்விஷயத்தில் (மீண்டும் யோசித்து, ஆலோசித்து) பொறுமையாய் நடப்பார் (அகலக் கால் வைக்க மாட்டார்). அவருக்கு ஒத்துவரக்கூடிய, இலகுவானதை தேர்வு செய்வார். செய்யும் காரியங்களில், உலகாதாய நோக்கமின்றி மறுமைப் பலனை உறுதி கொள்வார். அஊது, பிஸ்மி கூறி காரியத்தைத் துவங்குவார். காரியம் ஜெயமானாலும் அல்ஹம்துலில்லாஹ் சொல்வார். மாற்றமாக நடந்தாலும் அதன் உள்ளார்ந்தத்தை அல்லாஹ்வே நன்கறிந்தவன் என்றெண்ணி அல்ஹம்து லில்லாஹ் சொல்வார்.

காரியத்தில் மற்றவரின் நற்சொல் ஃபால் பார்ப்பார். ஒரு செய்தி சொல்லும்போது தும்மலை நல்ல ஃபாலாக கருதுவார். குர்ஆன் மூலம் ஃபால் பார்ப்பது பற்றி இரு வேறு கருத்துள்ளது (எனினும் அது நல்வழியே காட்டுமென்ற நம்பிக்கையோடும், அவ்வழியில் செயல் பட்டு அதில் சிரமம் தெரிந்தாலும் நன்மைக்காகும் என நினைத்தால் பரவாயில்லை. அன்றிஅப்படி பார்த்துத்தான் நான் நஷ்டப்பட்டு விட்டேன் என்று கருதக் கூடாது. இது போன்ற சொல்

வந்து விடலாம் என்பதால் தான் அதை ஆகாதென்று சொல்லப்படுகிறது. புரிந்து கொள்வீர்.) அவ்விதம் பார்க்க நாடினால் "அல்லாஹும்ம லா கைர இல்லா கைருக வலா தைர இல்லா தைருக வலாஇலாஹ கைருக" என்று கூறி நன்மையாவும் அல்லாஹ்வின் வசமே என்றெண்ணிப் பார்ப்பார். அதில் திருப்தியில்லா முடிவு தெரிந்தால் அல்லாஹும்ம லா யஃ(த்)தீ பில்ஹஸனா(த்)தி இல்லா அன்(த்)த வலா யத்ஹபு பிஸ் சய்யிஆ(த்)தி இல்லா அன்(த்)த வலா ஹவ்ல வலா குவ்வ(த்)த இல்லா பிக என்பார்.

ஒரு பிராணியை வாங்கினால் அதன் முன் நெற்றி ரோமத்தைப் பிடித்து "அல்லாஹும்ம பாரிக் லனா ஃபீஹி வர்ஜுக்னாகைரஹு வக்ஃபினா ஷர்ரஹு வஜ்அல்ஹு தவீலல் உம்ரி கஸீரர்ரிஜ்கி. அல்லாஹும்ம அஃ(த்)தினீ கைரமா அன்த ஆகிதும் பிநாஸிய திஹா இன்னக அலா சிராத்திம் முஸ்தகீம்" என்று கூறி அதன் நன்மையை நாடி துஆச்செய்வார். மாட்டில் பொதி ஏற்றலாம். மாட்டைக் கொண்டு நிலம் உழலாம். அதில் சவாரி செயலாகாது. கழுதையை பொதி சுமக்க, வாகனிக்க பயன்படுத்தலாம். பறவைகளை நேசிப்பார்.

கால்நடைகள் மிருகத்தை பயன்படுத்தலாம். துன்புறுத்தலாகாது. அதன் முகத்தில் அடிக்க மாட்டார். துன்புறுத்திக். கொல்லலாகாது. (உணவுக்காக துன்புறுத்தாது அறுக்கலாம்.) எந்த ஒன்றையும் தீயிட்டு கொல்லலாகாது. நெருப்பால் சூடோ, சுவடோ போட லாகாது.

(விஷ ஜந்துக்களை அடித்து தான் கொல்ல வேண்டும்.) அவற்றையும் சுத்தமாக வைப்பார். தினமும் 70முறை அவற்றுக்கு தண்ணீர், இறை போடுவார். நோவினை செய்தால் தவிர எறும்பை கொல்லார். தேனீயை, ஹுத்ஹுத் பறவையைக் கொல்லார். தவளை, பூச்சிகளை கொல்லார். கூட்டில் வைத்து இரவில் பறவையைப் பிடிக்கலாகாது.

எலி, தேள், பருந்து, காகம், வெறிநாயை மக்காவிலும் சரி, வேறெங்கும் சரி கொல்லலாம். பேனைக் கொல்லலாம். உணவுக்காக (ஆகுமான)மருந்துக்காக அன்றி எப்பிராணியையும் கொல்லார். எப்பிராணியையும் காலால் மிதியார். பல்லி ஹழ்ரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாமை எரிக்க மூட்டிய நெருப்பை நன்றாக பற்ற வேண்டுமென ஊதியதற்காக மட்டுமின்றி அது விஷமுடைய ஜந்து. எனவே அதனை கொல்ல வேண்டும். ஒரே அடியில் கொன்றால் 100 நன்மை. இரு, மூன்று அடியில் கொன்றால் அதைவிடக்குறைவு.

வீட்டில் பாம்பைக் கண்டால் " இன்னா நஸ்அலுக பிஅஹ்தி நூஹிவ் வ சுலைமானிப்னி தாவூத அலைஹி முஸ்ஸலாம் அல்லாதூதீனா வலா தக்ருஜீ அலைனா" என 3 முஜற கூறி (போகாவிட்டால்) அடித்து விடுவார். பாம்பு போன்ற விஷ ஜந்துக்களை பயந்தால் "சலாமுன் அலா நூஹின் ஃபில் ஆலமீன்" என்றால் எதுவும் செய்யாது.

பூனைக்கும், வீட்டைச் சுற்றித்திரியும் (வெறி பிடிக்காத நாய்) போன்றதுக்கும் உணவளிப்பார். வெள்ளைச் சேவலை

திட்டார். அது தொழுகைக்கு அழைக்கிறது. செல்லை சபிக்கார். தன் பிராணிகளையும் சபிக்கார். குறை சொல்லார். படைப்புகளின் உருவத்தைக் குறை பேசுவது, கேலி செய்வது அதைப் படைத்த அல்லாஹ்வையே சாரும். எச்சரிக்கை.

ஆட்டை காதைக் கொண்டு பிடித்து வராமல் பிடரியின் முன்புறம் பிடித்து வருவார். ஆடு, மாடுகளை நல்ல தரையில் மேய்ப்பார். கல், முள் பூமியிலோ, பொத பொதவென்ற மணலிலோ விட்டு கஷ்டம் தரமாட்டார். கடும் வெயிலிலும் மேய்க்கார். ஆடு, மாடு பாலுக்கும், உணவுக்கும். கோழி உணவுக்கு. எனினும் செல்வந்தர் ஆடு மாட்டை வாங்குவார். ஏழை கோழி வாங்குவார்.

பிறரை யாசிக்காது, உழைத்து சம்பாதிப்பார். ஹலாலான சம்பாத்தியம் தேடுவது ஃபர்ளு. அதற்காக பேராசை பிடித்து அலையக் கூடாது. பெருமையாய், படோடாபமாய் வாழவும், நிறைய சொத்து சேர்க்கவும் சம்பாதிப்பினை அல்லாஹ் வெறுக்கிறான். அன்றி தமது மற்றும் தம் குடும்பம், உறவுகள், சமுதாயத் தேவைக்காக சம்பாதிப்பார்.

மறுமை, இம்மையை விட மேல். ஆகவே அல்லாஹ்வின் திக்ரை, தொழுகை போன்ற கடமைகளை விட்டும் பராகாக்கும் தொழிலை, வேலையைச் செய்யார். விற்க நிஜமாகவோ, பொய்யாகவோ சத்தியம் செய்யார். கூலியை கூலியாள் வேர்வை உலரும் முன் கொடுப்பர். (அதாவது

சரியாக, நிரப்பமாக முறையாக தாமதமின்றி தருவார்.) அந்நியரிடம் விற்பது போல் தன் தோழர்களுக்கு லாபம் வைத்து விற்க மாட்டார். (எந்த தொழிலையும், வேலையையும் கேவலமாகக் கருதார். ஆகவே அது போன்ற வேலைகளை செய்துவந்த போதும்) தம் முன்னோர்களின் தொழிலை கற்பார். வியாபாரத்தில் சிறந்தது ஜவுளி. கைத்தொழிலில் சிறந்தது காலணி தைப்பது என ஹதீஸில் வந்துள்ளது. எந்த வியாபாரத்தில், தொழிலில் பரகத் உள்ளதோ அதைப்பற்றிக் கொள்வார். ஒரு தொழிலில் மூன்று முறை முயன்றும் நஷ்டப்பட்டால் அதை விட்டு விடுவார்.

வீட்டை தனக்கு போதுமான அளவுக்கே கட்டுவார். அதை ஞாயிறு துவக்கம் செய்வார். ஆறு, ஏழு முழத்திற்குள் வீடு கட்டுவார். அதைவிட கூடுதலாகக் கட்டியவர் கியாமநாளில் அதைச் சுமந்து வருவார். வீடு கட்டுவதில் (ஆடம்பரம் விரும்பாமல்) பூமியின் சீதோஷ்ணத்திலிருந்து தம்மை, தன் குடும்பத்தைக் காக்கவும், வணக்கம் புரியவும், இல்லறம் மேற்கொள்ளவுமே என நிய்யத் செய்வார். வீடு கட்ட பணத்தை இறைக்கார். வீட்டில் கழிப்பிடம், வுளு, குளிப்பிடம், உணவு தலம், பெண் தொழ தனியறை, ஆண் நபில் தொழ ஒரு அறை என கட்டுவார். வெள்ளி இரவு குடி புகுவார். ஹராமான பணத்தால் வீடு கட்டி புகுந்தால் அது முசீபத்தை உண்டாக்கி விடும். அழிவை, கஷ்டத்தை உண்டாக்கும். வீட்டில் உருவம் பதிக்கலாகாது. மலக்குகள் வர மாட்டார்கள். தலையற்ற உருவம்

பதிக்கலாம். மரம் செடி போன்றதின் உருவத்தை பதிக்கலாம். வீட்டில் நாய் வளர்க்க மாட்டார். (கரடி) போன்ற ஜவாய் மிருகங்களையும் வளர்க்க மாட்டார். வேட்டை, காவல் நாய் வளர்க்கலாம் (வீட்டுக்குள் அல்ல)

வீட்டையும், முற்றத்தையும் (தினமும் கூட்டி பெருக்கி) சுத்தமாக்குவார். சுத்தம் ஈமானிலுள்ளது. அது சீமான்தனத்தை உண்டாக்கும். வீட்டை, பண்ட, பாத்திரங்களை ஆடைகளை சுத்தமாக வைப்பது, நல்ல பேச்சை பேசுவது, தஹஜ்ஜுத் வரை தொழுவது, ஃபஜ்ருக்கு பின் அலம் நஷ்ரஷ், வாகிஆ (யாசீன்) ஓதுவது பரகத் தரும். உள்ளத்தோடு ஐவேளை தொழுவது ரிஜ்கை விஸ்தீரனமாக்கும். நிர்வாணமாக தூங்குவது, சிறுநீர் கழிப்பது, ஜுனுபாளியாக உண்பது, (சாப்பிடும் போது), கீழே தவறிவிழுந்ததை அப்படியே விடுவது, பூண்டு, வெங்காயத்தைச் சுடுவது, வீட்டை இரவில் கூட்டுவது, குப்பையை வீட்டில் போடுவது, குவிப்பது, பெற்றோர் முன், ஷைக் மார்கள் முன் நடக்கிறது, அவர்களை பேர் சொல்லி அழைப்பது, சொரசொரப்பான வஸ்தால் பல் குத்துவது, கையை மண்ணால் கழுவுவது, வாசல்படியில் அமர்வது, நிலையில் சாய்வது, ஆடையை உடுத்தியிருக்கையில் தைப்பது, முகத்தை ஆடையால் துடைப்பது, ஒட்டடையை விட்டு வைப்பது, தொழுகையில் பொடு போக்காயிருப்பது, சுப்ஹு தொழுதபின் பள்ளியிலிருந்து தேவையின்றி அவசர அவசரமாக கிளம்புவது, காலையே கடைத்தெரு போவது,

வெகு நேரம் தேவையின்றி அங்கிருப்பதும், யாசகர்களின் பொருட்களை விலைக்கு வாங்குவதும், பெற்றோரை சபிப்பதும், பாத்திரங்களை திறந்து போடுவதும், விளக்கை மூச்சால் அணைப்பதும் வறுமையை உண்டாக்கும். பாத்திரத்தை பிஸ்மி சொல்லி மூடி வைப்பார்.

வீட்டில் நுழையும் போதெலாம் சலாம் உரைப்பார். ஒருவருமில்லா வீட்டால் குல்ஹுவல்லாஹு 1 முறை அல்லது 3 முறை ஓதுவார். (முன்பே சொன்னது போல் தமக்கும், மலக்குகளுக்கும் சலாம் கூறுவார்.) பத்தி, சாம்பிராணி போடுவது முஸ்தஹப். 3 விரிப்பு வைத்துக் கொள்வார். ஒன்று மனைவிக்கு மற்றொன்று விருந்தாளிக்கு. காய், பழங்களை வாயருகில் வைத்து "அல்லாஹும்ம பாரிக்லனா ஃபீ சமரினா வ பாரிக் லனா ஃபீமதீன(த்)தினா வ பாரிக்லனா ஃபீசாஇனா வ பாரிக்லனா ஃபீமுத்தினா" என துஆ செய்து சிறு பிள்ளைகளுக்கு தருவார். பழங்களை மற்ற காலங்களில் விட அதன் வரத்துள்ள (சீசன்) காலத்தில் நிறைய சாப்பிடுவார். ஒற்றைப் படையாய் உண்பார். வெள்ளரிக்காயை உப்பைத் தொட்டும், அக்ரோட் பழத்தை பேரீத்தம் பழத்துடன் வெள்ளரியை கீழிருந்தும் உண்பார். புட்டு பழத்தை தேன் தொட்டும் சாப்பிடுவார்.

கத்தரிக்காயை நோய் உண்டாக்குமென நினைத்துண்டால் நோயுண்டாக்கும். மருந்தென உண்டால் ஷிஃபாவாக்கும். அதை ஜைத்தூன் எண்ணையில் போட்டு மென்மையாக்கி

மிகுதம் உண்ணுங்கள். அது அல்லாஹ்வை ஈமான் கொண்ட முதல் செடி. அது நீர்த்தானத்தை கெட்டியாக்கும், அறிவாற்றல், தாது சக்தி தரும். என்று நாயகம் கூறியுள்ளனர். பெருமானார் சுரைக்காயை விரும்பி உண்டனர். அது இதயத்தை மிருதுவாக்கும். பெருமானாருக்கு பருப்பு கீரை மிக பிடிக்கும். கர.:.ப்ஸ் எனும் ஊமைக்கீரை ஹழ்ரத் கிள்ர், ஹழ்ரத் இல்யாஸ் அலைஹிஸ்ஸலாமின் உணவாக இருந்தது. அது அறிவைப் பெருக்கும். மனத்தை தூய்மையாக்கும். பூண்டு, வெங்காயத்தை சமைத்து சாப்பிடலாம். பச்சையாக சாப்பிடுவது மலக்குகளுக்கு நோவினை தரும். அத்திப்பழம் இதயத்தை மென்மையாக்கும். கொடி முந்திரியை ஒவ்வொரு பழமாக சாப்பிடுவார். தேன் சஞ்சீவி. பரகத் செய்யப்பட்டது. அதன் பரகத்திற்கு 70 நபிமார்கள் துஆ செய்துள்ளனர். கருஞ்சீரகம் அத்துணை பிணிகளுக்கும் மருந்தாகும். சிர்கா மிக பயன்தரும். எனினும் ஷஹ்வத்தை நீக்கி விடும்.

பெருமானார் இரவில் நின்று தொழ முதுகு பலத்திற்கு ஹரீஸா சாப்பிடும்படி ஹழ்ரத் ஜிப்ரீல் கூறினர். (ஹரீஸா இறைச்சி, மணி கோதுமை, நெய் கலந்து அல்வா போல் செய்வது). அதனால் 40 ஆண்களின் பலம் தரப்பட்டது. மாதுளம் பழத்தில் சுவனத்து நீர்த்துளி ஒரு சொட்டுள்ளது. ஒரு பழத்தை முழுவதுமாக, ஒரு சுளையையும் வீணாக்காமல் உண்பார். அதன் குடலுடன் உண்பது முஸ்தஹப். பெருமானார் இனிப்பையும், நறுமணத்தை

விரும்பியுள்ளார்கள். தன் சகோதரருக்கு அன்போடு இனிப்பூட்டியவர் கியாம நாளில் கசப்பை அனுபவியார்.

சுப்ஹ் நேரம் 7 நல்ல பேரிச்சம்பழம் சாப்பிட்டால் அன்றைய நஞ்சும், சிஹ்ரும் (சூனியமும்) அவரை பாதிக்காது.

வத்தக்காய் 70 நோய்க்கு மருந்தாகும். பெருமானார் ஈத்தம்பழம், வத்தக்காய், ஆட்டின் முன்னங்கால் சட்டை, குளிர்ந்து மதுரமான பானத்தை விரும்பியிருக்கிறார்கள். வத்தக்காய் பற்றி அநேக பிரயோஜனங்கள் சொல்லப்பட்டிருக்கிறது.

இறைச்சியில் சிறந்தது முதுகுப் பக்கத்துண்டு. செம்மறி ஆட்டிறைச்சி சம குளிர்ச்சி, சூடுள்ளது, வயிற்றை லேசாக்கும், மனியை (இந்திரியத்தை)ப் பெருக்கும். வெள்ளாட்டிறைச்சி கெடுதல். கருப்பு ரத்தத்தை அதிகமாக்கும்.

பறவைக் குஞ்சுகளின் இறைச்சி ஷஹ்வத்தை, சக்தியைப் பெருக்கும். அடிவயிறு வலியை நீக்கும்.

முட்டையிடா வெடக்கோழி சிறந்தது. அது மூளைபலத்தை, தாதை விருத்தியாக்கும். நிறத்தை அழகாக்கும். அதே போல கூவாத சேவல். தாரா இறைச்சி குரலை, நிறத்தை அழகாக்கும். ஜிமாஉ அதிகமாக்கும். வஜீபனத்தை புஷ்டியாக்கும். பெருமானார் முட்டை சாப்பிட்டார்கள். அதில் சக்தி உண்டு. பிள்ளை மிகுதமாகும். கோழி முட்டை சிறந்தது. அரைவேக்காடான மஞ்சள் கருவுடன் சாப்பிட வேண்டும். பெருமானாருக்கு மேல் பெரிய வைத்தியர்

உலகில் ஒருவருமிலர். (நாயகம் சொல்வதைக் கேள். நலமுடன் வாழ்).
அரிசி உணவு உண்ணும்போது அதிகம் சலவாத் ஓதுவார். அது பெருமானாரின் ஒளிவில் நிண்டுமான இரத்தினத்தினில் நிண்டுமாயிருக்கும். பயிர்களை (இயற்கையான) உரமிட்டு பாதுகாப்பார். பூமியின் பசுமையை, இயற்கையை ரசித்து இறைவனை மெச்சுவார்.
பூக்களைக் கண்டால் "மன் தஅஜ்ஜஜ பில் குத்ர(த்)தி வல் பகாஇ வகஹ்ஹால் இபாத பில்மவ்(த்)தி வல் ∴ பனாஇ" என்பார்.

## பல துஆக்கள்

**பிறை கண்டால்....**

اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُمَّ اَهِلَّهُ عَلَيْنَا بِالْيُمْنِ وَالْاِيْمَانِ، وَالسَّلَامَةِ وَالْاِسْلَامِ،

وَالتَّوْفِيْقِ لِمَا تُحِبُّ وَتَرْضٰى رَبِّيْ وَ رَبُّكَ اللّٰهُ

அல்லாஹு அக்பர் அல்லாஹும்ம அஹில்லஹு அலைனா பில்யும்னி வல். ஈமான். வஸ்ஸலாமத்தி வல் இஸ்லாம். வத்தவ்∴பீகி லிமா துஹிப்பு வதர்ழா ரப்பீ வரப்புகல்லாஹ். 3 நாள் வரை, (மூன்றாம் பிறை வரை)
நிலா பார்த்தால்:

اَعُوْذُ بِاللّٰهِ مِنْ شَرِّ هٰذَا اِذَا غَسَقَ

அஊது பில்லாஹி மின்ஷர்ரி இதா நஸக.

**லைலத்துல் கத்ரில்:**

اَللّٰهُمَّ اِنَّكَ عَفُوٌّ تُحِبُّ الْعَفْوَ فَاعْفُ عَنَّا

அல்லாஹும்ம இன்னக அஃ.புவ்வுன் துஹிப்புல் அஃ.ப்வ ஃ.ப.ஃ.புஅன்னா.

**கிரகணம் கண்டால்:** தக்பீர் சொல்லி, கிரகணத் தொழுகை தொழுது சதகா செய்வர்.

**மேகம் முன்னோக்கி வரக்கண்டால்:**

اَللّٰهُمَّ اِنَّا نَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا اُرْسِلَ بِهٖ اَللّٰهُمَّ سَيْبًا نَافِعًا

அல்லாஹும்ம இன்னா நஊதுபிக மின் ஷர்ரி மா உர்சில பிஹி அல்லாஹும்ம சய்யிபன் நாஃ.பிஆ.

**மழை வந்தால்:**

اَللّٰهُمَّ صَيِّبًا نَافِعًا அல்லாஹும்ம சய்யின் நாஃ.பிஆ.

**மிகைத்தால்:**

اَللّٰهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا اَللّٰهُمَّ عَلَى الْاٰكَامِ وَالْاٰجَامِ وَالظِّرَابِ وَبُطُوْنِ الْاَوْدِيَةِ وَمَنَابِتِ الشَّجَرِ

அல்லாஹும்ம ஹவாலைனா வலா அலைனா.

அல்லாஹும்ம அலல் ஆகாமி வல் ஆஜாமி வழ்ழிராபி வபு(த்)தூனில் அத்விய(த்)தி வமனாப(த்)திஷ் ஷஜர்.

**இடி இடித்தால்:**

اَللّٰهُمَّ لَا تَقْتُلْنَا بِغَضَبِكَ وَلَا تُهْلِكْنَا بِعَذَابِكَ وَ عَافِنَا قَبْلَ ذٰلِكَ

அல்லாஹும்ம லாதக்துல்னா பிஙழபிக வலா துஹ்லிக்னா பிஅதாபிக வ ஆ.ஃ.பினா கப்லதாலிக.

**சூறாவளி ஏற்பட்டால்:**

முட்டுக்காலின் மீது அமர்ந்து,

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ خَيْرَهَا وَخَيْرَ مَا فِيْهَا وَخَيْرَ مَا اُرْسِلَتْ

بِهٖ وَاَعُوْذُبِكَ مِنْ شَرِّهَا وَشَرِّ مَا فِيْهَا وَشَرِّ مَا اُرْسِلَتْ بِهٖ

அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரஹா வ கைர மா.ஃ.பீஹா வகைர மா உர்சிலத் பிஹி வ அஊது பிக மின் ஷர்ரிஹா வஷர்ரி மா.ஃ.பீஹா வ ஷர்ரி மா உர்சிலத் பிஹி.

**காற்றோடு இருளானால் : ஃ.பலக், நாஸ் ஓதி**

اَللّٰهُمَّ اِنَّا نَسْئَلُكَ مِنْ خَيْرِ

هٰذِهِ الرِّيْحِ وَخَيْرِ مَا فِيْهَا وَخَيْرِ مَا اُمِرَتْ بِهٖ وَنَعُوْذُبِكَ مِنْ

شَرِّ هٰذِهِ الرِّيْحِ وَشَرِّ مَا فِيْهَا وَشَرِّ مَا اُمِرَتْ بِهٖ

அல்லாஹும்ம இன்னா நஸ்அலுக மின் கைரி ஹாதிஹிர் ரீஹி வகைரி மா.ஃ.பீஹா வ கைரி மா உமிரத் பிஹி. வ நஊது பிக மின் ஷர்ரி ஹாதிஹிர்ரீஹி வ ஷர்ரிமா.ஃ.பீஹா வஷர்ரி மா உமிரத் பிஹி.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

**சாவல் சப்தம் கேட்டால்:** ஹம்த் செய்வார்.

**நாய், கழுதை கணைத்தால் :** அஊது கூறுவார்.

**சந்தோஷ செய்தி கேட்டால்:** அல்லாஹ்வை ஹம்து செய்வார். ஷுக்ர் செய்வார். சஜ்தா ஷுக்ரும் செய்யலாம்.

**தொழில் முன்னேற்றம் கண்டால்:** பரகத்துக்காக துஆச் செய்வார். தன்னிடம் முன்னேற்றம் கண்டால் பாரகல்லாஹு ∴பீந.∴ப்ஸீ

**செல்வம் வந்தால்:** பாரகல்லாஹு ∴பீ மாலீ

**மற்றவருக்கு வந்தால்:** பாரகல்லாஹு ∴பீ நப்ஸிஹி அவரது செல்வம் பரகத்தானால் பாரகல்லாஹு லஹு ∴. பீமாலிஹி

**முதல் அதிகமானால்:** சலவாத் ஓதுவார்.

**முஸ்லிம் சந்தோஷமாக சிரிக்கக் கண்டால்:** அழ்ஹகல்லாஹு சின்னக.

**பிரியத்தை வெளிப்படுத்த:** அஹப்பகல்லதீ அஹ்பப்(த்)தனீ லஹு ஙு.∴.பரல்லாஹுலக என்றால் - வலக என பதிலிருப்பார்.

**தன்னை அழைத்தால்:** லப்பைக என்பார்.

**நலவு, உபகாரம் செய்தவருக்கு:** ஜஜாகல்லாஹு கைரா

**கடன் வந்தால்:** அவ்.∴.பைதனீ அவ்.∴.பல்லாஹு பிக.

**பிரியமானதைக் கண்டால்:** அல்ஹம்துலில்லாஹில்லதீ பிநி.∴.மதிஹி த(த்)திமுஸ்ஸாலிஹாத்.

**வெறுப்பானதைக் கண்டால்:** அல்ஹம்து லில்லாஹி அலா குல்லி ஹால்.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

**கடனுள்ளவர்:** اَللّٰهُمَّ اكْفِنِيْ بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ وَاَغْنِنِيْ بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ اَللّٰهُمَّ فَارِجَ الْهَمِّ كَاشِفَ الْغَمِّ مُجِيْبَ دَعْوَةِ الْمُضْطَرِّيْنَ، وَرَحِيْمَهَا اَنْتَ تَرْحَمُنِيْ بِرَحْمَةٍ تُغْنِيْنِيْ بِهَا عَنْ رَحْمَةِ مَنْ سِوَاكَ

அல்லாஹும்மக்ஃபினீ பிஹலாலிக அன் ஹராமிக வ அங்னினீ பிஃபழ்லிக அம்மன் சிவாக்அல்லாஹும்ம ஃபாரிஜல் ஹம்மி காஷிஃபல் ஙம்மி முஜீப தஃவ(த்)தில் முழ்(த்)தர்ரீன். வரஹீமஹா அன்(த்)த தர்ஹமுனீ பிரஹ்ம(த்)தின் துங்னீனீபிஹா அன் ரஹ்ம(த்)தி மன் சிவாக.

**உறங்கும் முன்:** சுப்ஹானல்லாஹ் 33, அல்ஹம்துலில்லாஹ் 33, அல்லாஹு அக்பர் 33 முறை கூறுவார்.

**வஸ்வாஸ் (மனக்குழப்பம்)உண்டானால்:**

அஊது கூறுவார். நீங்காவிடில் வேறு வேலையில் கவனம் செலுத்துவார். இல்லாவிடில் ஆமன்(த்)து பில்லாஹி வருசுலிஹி அல்லாஹு அஹத். அல்லாஹுஸ்ஸமத். லம் யலித் வலம் யூலத். வலம் யகுல்லஹு குஃபுவன் அஹத் சொல்லி இடது பக்கம் 3 முறை துப்பி (அப்படி சைக்கினை செய்து) அஊது பில்லாஹி மினஷ்ஷைத்தானி வமின் ஃபித்ன(த்)திஹி என்பார்.

**மவ்த் போன்ற முசீபத் நேரும் சூழலில்:**

இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன். அல்லாஹும்ம இன்தக அஹ்தஸிபு முசீப(த்)தீ ..பஅஜிர்னீ வ அப்தில்னீ கைரம் மின்ஹா.

**மவ்த் நடந்து விட்டாலோ:**

إِنَّا لِلَّهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ، اَللّٰهُمَّ ارْفَعْ دَرَجَتَهُ فِي الْمَهْدِيِّيْنَ

وَاكْتُبْهُ فِي عِلِّيِّيْنَ، وَاخْلُفْهُ فِي عَقِبِهِ فِي الْغَابِرِيْنَ، اَللّٰهُمَّ

لَا تَحْرِمْنَا أَجْرَهُ وَلَا تُضِلَّنَا بَعْدَهُ

இன்னா லில்லாஹி யோடு அல்லாஹும்மர்..ப.. தரஜ(த்)தஹு ..பில் மஹ்திய்யீன் வக்துப்ஹு ..பில் இல்லிய்யீன். வக்லு..ப்ஹு ..பீ அக்பிஹி ..பில் ஙாபிரீன். அல்லாஹும்ம லா தஹ்ரிம்னா அஜ்ரஹு வலா துழில்லனா ப..தஹ்.

**ஒருவர் தீங்கு செய்வாரென பயந்தால்:**

அல்லாஹும்மக்..பினாஹு பிமா ஷி..(த்)த.

**அநீதக்கார ஆட்சியாளர், அதிகாரி தீங்கிழைப்பார் என பயந்தால் :**

اَللّٰهُ أَكْبَرُ اَللّٰهُ أَعَزُّ مِنْ خَلْقِهِ جَمِيْعًا اَللّٰهُ أَعَزُّ

مِمَّا أَخَافُ وَأَحْذَرُ أَعُوْذُ بِاللّٰهِ الَّذِيْ لَا إِلٰهَ إِلَّا هُوَ

الْمُمْسِكُ السَّمَاءَ أَنْ تَقَعَ عَلَى الْأَرْضِ إِلَّا بِإِذْنِهِ مِنْ شَرِّ عَبْدِكَ

فُلَانٍ وَجُنُودِهِ وَاَتْبَاعِهِ وَاَشْيَاعِهِ مِنَ الْجِنِّ وَالْاِنْسِ اَللّٰهُمَّ
كُنْ لِي جَارًا مِنْ شَرِّهِمْ جَلَّ ثَنَاءُكَ وَعَزَّ جَارُكَ وَلَا اِلٰهَ غَيْرُكَ

.அல்லாஹுஂ அக்பர். அல்லாஹுஂ அவுஜ்ஜுஂ மின் கல்கிஹி ஜமீஆ. அல்லாஹுஂ அஅஜ்ஜுஂ மிம்மா அகா.்.பு வ அஹ்தரு அஊதுபில்லாஹில்லதீ லா இலாஹ இல்லா ஹுஂவல் மும்சிகுஸ்ஸாமாஇ அன் தகஅ அலல் அர்ழி இல்லா பிஇத்னிஹி மின் ஷர்ரி அப்திக------ ----------வஜுஂனூதிஹி வ அத்பாஇஹி வ அஷ்யா இஹி மினல் ஜின்னி வல் இன்ஸ். அல்லாஹுஂம்ம குல்லீ ஜாரம் மின் ஷர்ரிஹிம் ஜல்ல சனாஉ_க வஅஜ்ஜ ஜாருக வலா இலாஹ னைருக. என 3 முறை கூறுவார். (கோடிட்ட இடத்தில் தான் பயந்த அந்த நபர் பெயரை குறிப்பிடுவார்.)

**ஷைத்தான் போன்றதை பயந்தால்:**

اَعُوْذُ بِوَجْهِ اللّٰهِ الْكَرِيْمِ، بِكَلِمَاتِ اللّٰهِ التَّامَّاتِ الَّتِي لَا يُجَاوِزُ
هُنَّ بَرٌّ وَّلَا فَاجِرٌ مِنْ شَرِّ مَا خَلَقَ وَذَرَاَ وَبَرَاَ وَمِنْ شَرِّ
مَا يَنْزِلُ مِنَ السَّمَآءِ وَمِنْ شَرِّ مَا يَعْرُجُ فِيْهَا وَمِنْ شَرِّ مَا ذَرَاَ
فِي الْاَرْضِ وَمِنْ شَرِّ مَا يَخْرُجُ مِنْهَا وَمِنْ كُلِّ طَارِقٍ اِلَّا
طَارِقًا يَطْرُقُ بِخَيْرٍ يَا رَحْمٰنُ

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

அஊது பிவஜ்ஹில்லாஹில் கரீம். பிகலிமா(த்)தில் லாஹித் தாம்மாத்தில்ல(த்)தீ லா யுஜாவிஜுஹுன்ன பர்ருவ் வலா ஃபாஜிரும் மின் ஷர்ரி மா கலக வ தரஅ வபரஅ வ மின்ஷர்ரி மா யன்ஜிலு மினஸ்ஸமாஇ வமின்ஷர்ரி மா யஃருஜு ஃபீஹா வமின் ஷர்ரி மா யஃருஜு ஃபீஹா வமின் ஷர்ரி மதரஅ ஃபிர்அர்ழி வ மின் ஷர்ரி மாயக்ருஜு மின்ஹா வமின் குல்லி தாரிகின் இல்லா தாரிகல் யத்ருகு பிகைரின் யாரஹ்மான்.

**ஜின் ஷைத்தான் போன்ற கொடிய, பயங்கரங்களைக் காண நேர்ந்தால் :** சப்தத்தோடு பாங்கு சொல்லி ஆயத்துல் குர்ஸி ஓதுவார்.

**மனதில் திடுக்கம் உண்டானால்:**

أَعُوْذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّةِ مِنْ غَضَبِهِ وَشَرِّ عِبَادِهِ وَمِنْ هَمَزَاتِ الشَّيَاطِيْنِ وَأَنْ يَّحْضُرُوْنِ

அஊது பிகலிமாத்தில்லாஹித் தாம்ம(த்)தி மின் ஙழபிஹி வஷர்ரி இபாதிஹி வமின் ஹம ஜா(த்)திஷ் ஷயா(த்)தீனி வ அய்யஹ்ழுரூனி.

**தனை மீறி ஒரு விஷயம் நடந்து விட்டால்:**

ஹஸ்பியல்லாஹு வ நிஃமல் வகீல்.

**சங்கடம் நேர்ந்தால் :** இப்படி செய்ததால் தான் இப்படி நேர்ந்தது என்றிடாமல் அல்லாஹ் நாடியது நடந்தது என்பார்.

**ஒரு காரியம் வருத்தத்தை ஏற்படுத்தினால்:**

اَللّٰهُمَّ لَاسَهْلَ اِلَّا مَاجَعَلْتَهُ سَهْلًا وَاَنْتَ تَجْعَلُ الْحَزْنَ سَهْلًا اِذَاشِئْتَ

அல்லாஹும்ம லா ஸஹ்ல இல்லா மா ஜஅல்(த்)தஹு சஹ்லா. வ அன்(த்)த தஜ்அலுல் ஹஜன சஹ்லன் இதா ஷ.ஃ.(த்)த.

**துக்கம் உண்டானால்:**

لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ الْعَظِيْمُ الْحَلِيْمُ، لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ

رَبُّ السَّمٰوَاتِ وَالْاَرْضِ رَبُّ الْعَرْشِ الْكَرِيْمِ

லாஇலாஹ இல்லல்லாஹுல் அளீமுல் ஹலீம். லாஇலாஹ இல்லல்லாஹு ரப்புஸ்சமாவா(த்)தி வல்அர்ழி ரப்புல் அர்ஷில் கரீம்.

**பதவியால், பணத்தால் ஒருவருக்கு முசீபத் பீடிக்கும் என அஞ்சினால்:**

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ عَافَانِيْ مِمَّا ابْتَلَاكَ بِهٖ وَفَضَّلَنِيْ عَلٰى كَثِيْرٍ مِّمَّنْ خَلَقَ تَفْضِيْلًا

அல்ஹம்து லில்லாஹில்லதீ ஆ.ஃ.பானீ மிம்மப்தலாக பிஹி வ.ஃ. பழ்ழலனீ அலா கஸீரிம் மிம்மன் கலக த.ஃ.ப்ழீலா.

**காய், கனி விளைச்சல் கண்டால்:** பரகத்துக்காக துஆச் செய்வார். பழம். காய்களை பெருமானாரிடம் கொண்டு வரப்பட்டால் அதைக் கண்களில் ஒற்றி இன்னஹு கரீபு அஹ்திம் பிரப்பினா என்பார்கள்.

**மாப்பிள்ளையை நோக்கி:**

بَارَكَ اللّٰهُ لَكَ وَ بَارَكَ اللّٰهُ عَلَيْكُمَا وَجَمَعَ بَيْنَكُمَا فِي خَيْرٍ

பாரகல்லாஹு லக வ பாரகல்லாஹு அலைகுமா வ ஜமஅ பைனகுமா ∴பீகைர்.

**மனைவியிடம் புகுந்தால்:** அவளது முன் நெற்றி முடி பற்றி..

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ خَيْرَهَا وَخَيْرَ مَا جَبَلْتَهَا عَلَيْهِ وَاَعُوْذُ بِكَ مِنْ شَرِّهَا وَشَرِّ مَا جَبَلْتَهَا عَلَيْهِ

அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக கைரஹா வ கைரமா ஜபில்(த்)தஹா அலைஹி வ அஊது பிக மின் ஷர்ரிஹா வ ஷர்ரிமா ஜபில்(த்)தஹா அலைஹி.

**தாம்பத்யத்தை நாடின்:**

بِسْمِ اللّٰهِ اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطٰنَ وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا

பிஸ்மில்லாஹி அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வ ஜன்னிபிஷ் ஷை(த்)தான மா ரஜக்தனா.

**அறிவீர்.** நபிமார்கள், மலக்குகளுக்கு- அலைஹிஸ்ஸலாம், இருவரைக்குறிப்பிட்டால் அலைஹிமஸ்ஸலாம், பலரைக் குறிப்பிட்டால் அலைஹிமுஸ்ஸலாம் என்பார்.

சஹாபாக்களைக் குறிப்பிட்டால் ரழியல்லாஹு அன்ஹு. பெண் சஹாபி எனில் அன்ஹா என அன்ஹுவை மாற்றுவார்.

இருவர் எனில் (ஆணாயினும், பெண்ணாயினும்) அன்ஹுமா என மாற்றுவார். பலரெனில் அன்ஹும் என மாற்றுவார்.

பின் வந்த தாபிஈன்கள், இமாம்கள், வலிமார்கள் போன்றோரைக் குறிப்பிட்டால் ரஹ்மத்துல்லாஹி அலைஹி (ஹியை ஹாவாக மாற்றினால் பெண்பால்) இருவரெனில் அலைஹிமா பலரெனில் அலைஹிம் என்று குறிப்பிடுவது முஸ்தஹப்.

தும்மும் போதும், பிராணியை அறுக்கும் போதும் பெருமானார் பெயரைக் குறிப்பிடமாட்டார்.

# அறுக்கப்பட்டவை, வேட்டையாடப்பட்டவை

**அறுப்பின் ஃபர்ளு 4.**

1. முடிச்சிற்கும், பதுப்பிற்குமிடையில் அறுப்பது. அறுக்கப்பட வேண்டிய நரம்புகளாவது..

குரல்வளை, ஊதான் பட்டைக் கழுத்து, முன்புறம் இரு பக்கமுள்ள வஜ்தைன் எனும் இருபுற காம்பு ஆகிய 4. இந்நான்கில் மூன்றை தரித்தாலும் ஹலாலாகி விடும். முடிச்சிற்கு மேலே அறுத்து மூன்று அறுபட்டாலும் சரி. இவை ஆடு, மாடு, ஒட்டகம் கோழி போன்ற பிடித்து அறுக்க முடிந்த பிராணிகளிலாகும். மற்றபடி பிடித்து அறுக்க முடியாத அடக்க முடியா மாடு, ஒட்டகம் போன்றதில் ஏதேனுமொரு இடத்தில் காயப்படுத்தினால் போதும். அதே

போல கிணற்றில் விழுந்து தூக்க முடியாமல் போனாலும், பிடி கொடுக்காமல் விரண்டோடினாலும், கோழி மரத்தில் இருந்து கொண்டு இறங்காமல் பயந்தாலும் காயப்படுத்தினால் போதும்.

2. அறுப்பவர் முஸ்லிமாக இருக்க வேண்டும். அவர் பிஸ்மி சொல்வதை அறிந்திருக்க வேண்டும். அவர் அதை விளங்கிச் செய்யும் சிறுவராகவும் இருந்தாலும் ஆகும். அவ்வாறே (கொஞ்சம்) புத்தி சரியில்லாதவராய் இருந்தாலும் ஆகும். பெண்ணும் அறுக்கலாம். ஊமையானவரும் அறுக்கலாம். ஆனால் வேட்டை மிருகத்தை இஹ்ராமில் இருந்தோ, ஹரமுக்குள் இருந்தோ அறுத்தால் ஆகாது.

3. அறுக்கப்பட வேண்டிய நான்கையும் தரித்து, ரத்தத்தை ஒட்டும்படியான (கத்தி போன்ற) வஸ்தால் அறுக்க வேண்டும். மூங்கில் போன்ற கூர்மையான குச்சியானாலும் கூடும். பல்,நகம், தவிர. எனினும் அவை கழற்றப்பட்டதாக இருந்தால் அதைக் கொண்டு அறுக்கலாம். மஹ்ரூஹ் ஆனாலும் (இறைச்சி) ஹலால்.

அறுக்கும்போது அப்பிராணி கொஞ்சமாவது உயிரோடிருப்பது உறுதி செய்யப்பட வேண்டும். அது உசும்பாவிட்டாலும், ரத்தம் ஓடாவிட்டாலும் பரவாயில்லை. அப்பிராணி உயிரோடிருப்பது சந்தேகமானால் அப்போது அறுத்து உசும்ப வேண்டும். ரத்தம் ஓட வேண்டும். அப்போது தான் ஹலாலாகும்.

ஆக நோய் கண்டதிலும், கிணற்றிலோ, மலை போன்ற

உயரமானதிலிருந்து விழுந்ததிலும், வேறொரு பிராணி அடித்துப் போட்திலும் கழுத்தில் சுறுக்குப் போட்டதிலும், அடித்துப் போட்டதிலும், பூனை நாய் போன்ற மிருகம் கடித்துப் போட்டதிலும் இதுவே சட்டம்.

வேட்டைப் பிராணியில் இரத்தம் வெளியேறி ஓட வேண்டுமென்பது ஷர்த். எனவே கல், கம்பு போன்றதில் எறிந்து (காயம்பட்டு ரத்தம் வெளியேறாது) இறந்தால் ஹலாலாகாது. ஏனெனில் அவை காயப்படுத்தாது. அதே போல கனமான கல்லால் எறிந்து, துப்பாக்கியால் சுட்டு இறந்தாலும் ஹலாலாகாது. ஆனால் அதன்பின் அப்பிராணி (கொஞ்சமாவது) உயிரோடு இருந்து (முறைப்படி) அறுக்கப்பட்டால் ஹலால்.

கூர்மையான லேசான கல்லால் எறிந்து காயப்படுத்தி இறந்தாலும் ஹலால்.

அதே சமயம் (பிராணி) தம் பார்வையை விட்டு மறையாமல் இருக்க வேண்டியது, (அடித்து விட்டு) தேட வேண்டி இல்லாமல் இருக்க வேண்டியது ஷர்த்.

அதற்கு மாற்றமாக தம் பார்வையை விட்டு மறையா விட்டாலோ, தேட வேண்டியாகா விட்டாலோ அதை உண்ணலாம்.

4. அறுக்கும் போது பிஸ்மில்லாஹ் சொல்வது. எனினும் மறந்து விட்டால் பிரச்சினையில்லை. வேட்டை மிருகமாயிருந்தால் அம்பு போன்றதை எறியும் போதும்,



 

வேட்டைநாய், இராஜாளி போன்ற (வேட்டையாடும் பிராணிய)தை அனுப்பும் போதும் பிஸ்மில்லாஹ் சொல்வார். வீரப்பல்லுடைய நாய், செந்நாய், நகமுடைய இராஜாளி போன்றதை வேட்டைக்கு பழக்கியிருக்க வேண்டியது ஷர்த். அப்படி (அது வேட்டையாடி தான் திண்ணாமல் பிராணியை முழுவதுமாக தன் எஜமானரிடம் கொண்டு வந்தால்) வேட்டையாடப்பட்டது ஹலால்.

வேட்டைக்கு பழக்கியிருப்பது என்பதாவது... நாய் போன்றது திண்பதை 3 முறை விட்டிருக்க வேண்டும். (3 முறை பயிற்சியிலும் பிராணியை திண்ணாமல் அடித்து மட்டும் இருக்க வேண்டும்.)

ராஜாளி போன்றது.. அழைத்தால் திரும்பி வர வேண்டும். நாய் போன்றது இரத்தத்தைக் குடித்தால் ஒன்றுமில்லை. வேட்டை மிருகமென்பது.. மனிதரைக் கண்டு விரண்டோடும் படியான உண்ண ஆகுமாக்கப்பட்ட பிராணியாகும். வேட்டைக்கு அனுப்பிய நாய் போன்றது வேட்டையாடி அதில் கொஞ்சத்தை திண்றாலும் ஹலாலாகாது. ஆனால் இராஜாளி போன்றது திண்றால் மிச்சத்தை திண்பது கூடும். அறுக்கப்பட்டது மீண்டும் உயிரோடு எழும்பி விட்டல் அதை (மீண்டும்) அறுக்க வேண்டியது வாஜிப். அறுக்காமல் விட்டு அது இறந்துவிட்டால் அதை சாப்பிடக் கூடாது.

(அறுக்கப்பட்டு எழுந்த) அது (உடனே) தரையில் விழுந்து இறந்தால் உண்ணலாம். அன்றி நீரில் விழுந்து இறந்தாலும், மெத்தையில், மலையில் விழுந்த பின் தரையில் விழுந்து

இறந்தாலும் உண்ணப்படாது. அறுக்கப்படுவதை கிப்லா நோக்கி முகம் திருப்பி வைப்பதும், ஒட்டகத்தை இடது முன்னங்காலை கட்டி நிற்கவைத்து அறுப்பதும், ஆடு, மாட்டை படுக்கப்போட்டு அறுப்பதும், ஒட்டகம், தாரா போன்ற கழுத்து நீளமானதை கீழ் கழுத்தில் அறுப்பதும், ஆடு, மாடு போன்றதை மேல் கழுத்தில் அறுப்பதும் சுன்னத்.

அதை ஒருக்கணித்துப் போடும் முன் கத்தியை கூர்மையாக்கிக் கொள்வதும், இடது பக்கமாக மெதுவாக படுக்கப் போடுவதும், மூன்று கால்களையும் கட்டிக் கொள்வதும், வலது கையால் தீபரமாக (வேகமாக) அறுப்பதும் பிஸ்மில்லாஹி (உடன்) அல்லாஹு அக்பர் சொல்லி அறுப்பதும், நான்கு நரம்புகளையும் சரியாக அறுப்பதும், பகலில் அறுப்பதும் முஸ்தஹப்.

அறுக்குமிடத்திற்கு காலைப் பிடித்து இழுப்பதும் ஒருக்கனித்து (படுக்க)ப் போட்டபின் கத்தியை கூர்மையாக்குவதும், பிடரி பக்கமாக அறுப்பதும், பிடரி எலும்புக்குள்ளுள்ள வெள்ளை நரம்பை அடையும் வரைஅறுப்பதும், தலையை துண்டிப்பதும், உயிர் அடங்கும் முன் தோலை உரிப்பதும், தேவையில்லாமல் பிராணியை சிரமப்படுத்துவது யாவும், கிப்லா அல்லாத திசைநோக்கி முகத்தை வைப்பதும் மக்ரூஹ்.
பிடரி பக்கமாக அறுத்து 4 நரம்பையும் தரிக்கும் வரை உயிரோடிருந்தால் தான் மக்ரூஹ். (என்பதோடு

ஹலாலாகும்.) அதற்கு முன் மவ்த்தாகி விட்டால் ஹலாலாகாது.

அறுக்கப்பட்டது இறக்கும் முன் அதிலிருந்து ஒரு உறுப்பை தரித்தால் இறைச்சியை உண்ணலாம். எனினும் மக்ரூஹ்.

## பிராணியில் 7 உறுப்பு ஹராம்

1. ஓட்டப்பட்ட இரத்தம். 2. ஆண்குறி
3. இரு விதர்க்கொட்டை 4. அபம் 5. கழலை
6. நீர்ப்பை 7. பித்துப்பை.

## பொதுவாக உண்ண ஹராமாக்கப்பட்டவை

வீரப்பல்லால் வேட்டையாடும் வீரப்பல்லுடைய மிருகமும், நகத்தால் வேட்டையாடும் நகமுடைய பறவையும் ஹலாலல்ல.

அவ்வகையில் பூமியில் கொள்ளையிட்டு ஆகாயத்தில் இறாய்ஞ்சிச் சென்று காயப்படுத்திக் கொல்லும் யாவும் ஹராமாகும்.

அதே போல காகம், கழுகைப் போல் நஜீஸை, செத்ததை திண்ணக் கூடியதையும் உண்ணக்கூடாது.

நஜீஸை மட்டும் உண்ணும் ஆடு, மாடு, ஒட்டகம் போன்றது (ஹலால் எனினும்) அதன் பால், இறைச்சி மக்ரூஹ். அதன் இறைச்சியின் நாற்றம் போவதற்காக கோழியை 3

நாட்களுக்கும், ஆட்டை 4 நாட்களுக்கும், ஒட்டகம், மாட்டை 10 நாட்களுக்கும் கட்டி வைத்து இறைபோட்டு அறுக்கப்படும்.

பூமியில் ஊறும் பூச்சிகளில் சிறியதை உண்பது மக்ரூஹ். எனினும் உடும்பு, வெள்ளை எலி போன்றதையும் உண்ண மாட்டார். கழுதை, கோவேரிக் கழுதையை சாப்பிடலாகாது. குதிரையை சாப்பிடுவது மக்ரூஹ். மரை, முயல், பயிர்க்காகம், அக்அக் எனும் காகம் ஆகியவற்றை சாப்பிடலாம். அது அக்அக் எனும் சப்தமிடும் காகத்தின் தோற்றத்திலுள்ள புறாவாகும். அதன் சிறகுகள் புறாவின் சிறகுகளை விட பெரிதாக இருக்கும். வாலும் நீளமாக இருக்கும். அதில் கருப்பும், சிவப்பும் கலந்திருக்கும். அது மணிக்காகை, அன்டங் காக்கையோ அல்ல. புல்புலையும், கூகை ஆந்தையும் சாப்பிடலாம். சுரத் எனும் கள்ளிச்சிட்டும், ஹுத்ஹுதும் மக்ரூஹ். கருப்பும், சிவப்பும் கலந்த ஒருவகை புறாவும், மணிப்புறாவும், அக்அக்கும் நாரையும், லஜ்னா எனும் குருவியும் ஹலால். எனினும் அதை உண்பது முஸ்தஹப்பல்ல. ஏனெனில் அது உடலுக்கு உகந்ததல்ல. ஷா.்.பியிய்யாக்களிடம் புல்புல், கிளி, மயில், ஹுத்ஹுத் ஹராம். நம்மிடம் ஹலால். ரத்தமில்லாத வஸ்தில் விட்டில் தவிர யாவும் மக்ரூஹ். விட்டில் தாமாக இறந்தாலும் ஹலால் தான். நீர்வாழ் உயிரினங்களில் மீனைத்தவிர செத்து மிதக்கும் யாவும் ஹராம். தானாக செத்தது வயிர் மேலாக மிதக்கும். தங்கடத்தால் செத்தது முதுகு மேலாக மிதக்கும். எனினும்

நீரின் சூட்டினாலோ, குளிர்ச்சியாலோ, அதற்குள் கட்டி வைப்பதினாலோ பள்ளத்தில் நெருக்கடியாலோ, யாதொரு வஸ்தை போட்டதினாலோ, யாதொரு ஆபத்தினாலோ, செத்து மிதந்ததை திண்ணப்படும்.

ஜிர்ரீதையும், விலாங்கையும் திண்பது குற்றமல்ல. ஜிர்ரீதென்பது கருப்பான, கேடயம் போன்ற வட்டமான மீன். அதை திருக்கை எனப்படும். அதன்முகம் சிறிதாகவும், வால் கட்டையாகவுமிருக்கும். இரு பிளவாகவுமிருக்கும். அதன்றி மற்ற திருக்கைகளும் ஹலால் தான். சுறாவும், வேலாவும், ஊங்கியும், கனவாயும், சங்கு சதயும், சிப்பி சதையும் மீனில் உள்ளதல்ல.

இன்னும் கடல் பன்றி, கடல் நாய், கடல் கழுதை கடல் மனிதனை திண்ணப்படாது. ஏனெனில் மீன் வகைகளைத் தவிர மற்ற யாவும் கெட்டதாயிருக்கும். சிங்கீல் எனப்படும் இறால் பற்றி இரு வேறு கருத்துள்ளது. அதை தவிர்ந்து கொள்வது ஏற்றம்.

ஷா.்.பிய்யாக்களிடம் கடல் பிராணிகளில் தவளையையும், விஷமுள்ளதையும் தவிர ஏனைய யாவும் ஹலால்.

கடலிலும், கரையிலும் ஜீவிக்கும் தவளை, நண்டு, முதலை, பாம்பு மற்றும் நஞ்சுள்ளது, ஆமை, ஒற்றைக்காலன் ஹராம்.

விட்டிலையும், மீன் வகைகளையும் தக்பீர் செய்யாமல் உண்பது ஹலால். மீன் வயிற்றுக்குள் உள்ள மீன் பேதகமாகாமல் (கலங்காமல்) நல்லதாக இருந்தால்

இரண்டையும் சாப்பிடலாம். பேதகமானால் உள்ளே பேதகமான மீனை சாப்பிடக் கூடாது.

எந்த ஒன்றையும் அறுப்பதால் அதன் வயிற்றுக்குள் இருக்கும் குட்டி ஹலாலாகாது. அதை தனியாக அறுத்தால் ஹலாலாகும்.

அறுத்த கோழியை குடலை எடுக்கும் முன் கொதி நீரில் போட்டால் அதை சாப்பிடப்படாது. குடலெடுத்த பின் மூன்று முறை நீரில் கொதிக்க வைத்து 3 முறை ஆற வைத்த பின் உண்ணலாம். சிறு மீன்களை குடலெடுக்காமல் ஆக்கினால் திண்ணப்படாதென்று வந்தாலும் ரத்துல் முக்தார் சட்ட நூலில் சாப்பிடலாம் என வந்துள்ளது.

# கெட்ட பேச்சை, சாபமிடலை தவிர்வதின் விளக்கம்

கொச்சையான வார்த்தைகளை தவிர்ந்து கொள்ள வேண்டியது மிக அவசியம்.

மல, ஜல குறித்து அதன் கொச்சையான, அருவருப்பான வார்த்தைகளை சொல்லக் கூடாது. (மல,ஜல) கழா ஹாஜத் (அவசியத்தேவை) எனலாம்.

குஷ்ட ரோகிகளைக் குறிப்பிடும்போது அவ்விதம் சொல்லாமல் நோயாளி எனலாம்.

மனைவியை மனைவி, வீட்டுக்காரி, பிள்ளைகளின் தாய் என கூறலாம்.

அதேபோல எந்த மனிதரையும், உயிரினத்தையும் கேவலமான பார்வை பார்கக் கூடாது.

ஹழ்ரத் ஈசா அலைஹிஸ்ஸலாம் பன்றியை நோக்கி நலவோடு நடவாய் என்ற போது அவர்களின் தோழர்கள் ஆச்சர்யப்பட்டபோது எந் நாவால் நான் எதற்கும் நலத்தையும் நாடுவேன் என்றார்கள்.

ஒரு இறந்த நாயைக் கடந்த போது அவர்களின் தோழர்கள் நாற்றம் தாங்க முடியவில்லை என்றபோது அதன் பற்களைப் பாருங்கள் எவ்வளவு அழகாக உள்ளதென்றார்கள்.

நெருப்பு மூட்டிக்கொண்டிருந்த ஒரு கூட்டத்தாரைக் கண்ட ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள்.. அஸ்ஸலாமு அலைக்கும் யா அஹ்லழ் ழவ்இ என்றார்கள். அஹ்லன் நார் என்றால் தீ மூட்டக்கூடியவர்களையும் குறிக்கும். நரக வாசிகளையும் குறிக்கும். ஆனால் அஹ்லழ்ழவ்இ (பிரகாசம் செய்வோரே)என்றால் அது நல்லதை மட்டுமே குறிக்கும்.

ஆக படைப்புகளை நல்ல விதமாகவே பேச வேண்டுமென்பதை இது உணர்த்துகிறது.

அதே போல யார் குறித்தும் அபசகுணம் என்று கூறவோ, கருதவோ கூடாது. முஸ்லிமைத் திட்டுவது ப்ாவம். எனினும் குணங்கெட்டவனை வெட்கமாக இல்லையா? முட்டாள். மடையனே என்று ஏசலாம். (அருவருப்பான சொற்களால் ஏசக் கூடாது.)

மரணித்தவர் கா.ஃ.பிரான போதும் அவரை ஏசலாகாது. அதே போல பாவியான, பித்அத் காரனான வழிகெட்ட, கா.ஃ.பிரான மய்யித்தையும் சபிக்கலாகாது.

காரணம் (அவன் வாழ்ந்த நிலை யாவரும் அறியலாம். ஆனால்) அவர் மரணித்த நிலையை அல்லாஹ்வே நன்கறிந்தவன். அவர் ஈமானோடு மரணித்திருக்க வாய்ப்புள்ளது. அன்றி அவர் கா.ஃ.பிராக மரணித்ததை குர்ஆன், ஹதீஸில் தெளிவாக சொல்லப்பட்டிருப்பின் பரவாயில்லை. அபூலஹப், அபூஜஹ்ல், ஃபிர்அவன் போன்ற கா.ஃ.பிர்களின் மரணம் போன்றது.

உயிரோடுள்ள கா.ஃ.பிரையும் சபிக்கலாகாது. ஏனெனில் மரணிக்கும் முன்பு வரை அவர் எப்போது வேண்டுமானாலும் ஈமான்கொள்ள வாய்ப்புண்டு.

எனினும் முஸ்லிமுக்கு அருள்பாலிக்க ஆண்டவனை வேண்டுவார். (கா.ஃ.பிருக்காக துஆ செய்ய மாட்டார்.)

அன்றி தனி நபரைக் குறிக்காமல் பொதுவாக கா.ஃ.பிர்கள், அநீதர்கள், வட்டி தின்போர், குடிகாரர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும் என்று கூறலாம். ஆகுமானதே எனினும் ல.ஃ.னத் செய்வதை (சாபமிடுவதை) விடுவதே சிறந்தது. மு.ஃ.மின் ல.ஃ.னத் செய்பவராக இருக்கமாட்டார் என்கிறது ஹதீஸ். மேலும் கா.ஃ.பிரிலோ, முஸ்லிமிலோ எவரையும் குறிப்பிட்டு இவர் சொர்க்கவாசி, இவர் நரகவாதி என்று கூற மாட்டோம்.

பொதுவாக முஸ்லிமாக (ஈமானோடு) மரணித்தவர்

சொர்க்கவாதி, கா.ஃ.பிராக (கு.ஃ.ப்ரோடு) மரணித்தவர் நரகவாதி என்று கூறுவோம்.

எனினும் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள் சொர்க்கவாசிகள் என குறிப்பிட்டு கூறிய சஹாபாக்களை சொர்க்கவாசிகள் என்போம் (அவர்கள் குறித்து விமர்சிக்க மாட்டோம்.)

எனினும் மவ்த்தான மு.ஃ.மின்கள் அனைவருக்காகவும் சொர்க்கத்தை ஆதரவு வைப்போம் துஆச் செய்வோம்.

மு.ஃ.மின்கள், அல்லாஹ், ரசூலின் விரோதி (கா.ஃ.பிராக) தம் தந்தை, பிள்ளை, சொந்த, பந்தம் யாராக இருந்தாலும் அவர்களை விரும்ப மாட்டார்கள் என்கிறது குர்ஆன் ஷரீப். ஆகவே கா.ஃ.பிர் எவரையும் நாம் விரும்ப மாட்டோம், நேசிக்க மாட்டோம். அவர்களை ஒதுங்கியே இருப்போம்.

கா.ஃ.பிருக்கு சலாம் சொல்ல மாட்டோம். தேவை எனில் அஸ்ஸலாமு அலா மனித்தபஅல் ஹுதா (நேர்வழியைப் பற்றியவருக்கு சலாம்) என்று கூறி விடுவோம்.

கா.ஃ.பிர் சலாம் கூறினாலோ “வ அலைக்“ என்று மட்டும் கூறுவோம்.

கா.ஃ.பிரை முஸா.ஃ.பஹா செய்ய மாட்டோம். அவ்விதம் செய்தவர் கையை கழுவுவார்.

இதே போல பித்அத் காரர் (குழப்பவாதி).ஃ.பாஸிக் (பெரும்பாவி)விஷயத்திலும் நடப்பதே ஈமான் நிரப்பமானதின் அடையாளமாகும். பாவியைப் புகழ்ந்தால் அல்லாஹ் கோபப்படுவான். அர்ஷ் குலுங்கும் என ஹதீஸில் வருகிறது. பித்அத்காரருக்கும், பகிரங்க பாவிக்கும் சலாம் சொல்வது

மக்ருஹ்.

மேலும் முஸ்லிம்களின் அந்தரங்கத்தை, குறைகளை ஆராயக் கூடாது.

முஸ்லிம்களிடம் பகைமை பாராட்டக் கூடாது. பிறர் அவரை தவறாக பேசினாலும் அவர் மீது தவறான அபிப்ராயம் கொள்ளலாகாது.

சிரிப்பை மிகுதமாக்காதீர். அது கல்பை மவ்த்தாக்கிவிடும். முகத்தின் ஒளிவைப் போக்கி விடும். காரணமின்றி சிரிப்பது பைத்தியம். மிதமிஞ்சிய தர்க்கம் வழிகெடுத்து விடும். பகையை திறந்து விடும்.

யாரையும் இகழாதீர். அது இருவருக்குமிடையிலுள்ள அல்லாஹ் வைத்துள்ள (சங்கை எனும்) திரையை கிழித்து விடும்.

ஒருவரது முகத்திற்கு முன்பும் புகழாதீர். அதை மார்க்கம் வெறுக்கிறது. (மீறி) ஒருவர் புகழ்ந்து கேட்க வேண்டிய சூழ்நிலை உண்டானால்

اَللّٰهُمَّ اجْعَلْنِي خَيْرًا مِّمَّا يَظُنُّوْنَ، وَاغْفِرْ لِي مَا لَا يَعْلَمُوْنَ، وَلَا تُؤَاخِذْنِي بِمَا يَقُوْلُوْنَ، فَإِنَّكَ تَعْلَمُ مَا فِي نَفْسِي وَهُمْ لَا يَعْلَمُوْنَ،

“அல்லாஹும்ம ஜ்அல்னீ கைரம் மிம்மா யளுன்நூன். வங்.்.பிர்லீ மிம்மா லா ய.்.லமூன். வலா துஆ கித்னீ பிமா யகூலூன் .்.ப இன்னக த.்.லமு மா.்.பீ ந.்.ப்ஸீ வஹும் லா ய.்.லமூன்“ என்று கூறி விடுவார்.

ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை அவர்கள் முன் ஒருவர் புகழ்ந்த போது நீ உன்னையும் ஹலாக்காக்க (அழிக்க) நினைக்கிறாயோ? என்றார்கள்.

எனினும் ஒருவரை அவர் மென்மேலும் நற்காரியம் புரிய உற்சாகப்படுத்தும் நோக்கில் அளவுக்கு மீறிய பொய்யான இல்லாத விஷயத்தைக் கூறாமல் புகழ்ந்துரைக்கலாம்.

## பாவங்கள் பற்றிய விளக்கம்

ஐயமின்றி ஆதாரப்பூர்வமாக எது பாவமென்பது உறுதியாகிவிட்டதோ அது சிறியதாயினும், பெரியதாயினும் அதை ஹலால் எனக் கருதுவதோ, அதை சாதாரணமாக எண்ணி பொருட்படுத்தாதிருப்பதோ, அதை மார்க்கம் பாவம் என்றிருக்கும் விஷயத்தில் பரிகசிப்பதோ, மாறாக விமர்சிப்பதோ கு.்.ப்ராகும்.

மார்க்கம் எவற்றை ஹராமென்று தெளிவாகக் குறிப்பிட்டுள்ளதோ, எவற்றை எல்லைமீறல் என அறிவிக்கப்பட்டுள்ளதோ, எவற்றைச் செய்தால் நரகில் கடும் வேதனை உண்டென்கிறதோ, எவற்றைச் செய்தால் கா.்.பிர் என்று கூறப்பட்டுள்ளதோ அத்தகைய யாவும் பெரும் பாவங்களாகும்.

கு.்.ப்ர் (ஈமான் நிராகரிப்பு) தான் ஆகப்பெரிய பாவம். ஒரு உயிரை அநியாயமாக கொலை செய்வதும், விபச்சாரம் புரிவதும், ஓரினச்சேர்க்கை புரிவதும், முஸ்லிமான பத்தினிப்

பெண் மீது இட்டுக்கட்டுவதும், அவ்வாறே முஸ்லிமான உத்தமனான ஆண் மீது இட்டுக்கட்டுவதும், ஒரு துளி மது அருந்தினாலும், போதை வஸ்துக்களை அருந்துவதும், திருடுவதும், அடுத்தவருக்கு உரியதை அநியாயமாக அபகரிப்பதும், பொய் சாட்சி சொல்வதும், வட்டி திண்பதும், ரமழான் மாதத்தில் காரணமின்றி நோன்பை விடுவதும், பொய் சத்தியம் செய்வதும், உறவுகளை முறிப்பதும், முஸ்லிமான பெற்றோரை மனம் நோகச் செய்வதும், சிஹ்ர் (சூனியம்) செய்வதும், ஹரமில்-மக்கா வினுள்- வெட்டுவதும், படையில் கா.'.பிர்கள் இரு மடங்கும் முஸ்லிம்கள் ஒரு மடங்கோ அல்லது அதற்கு மேலாகவோ இருக்க படை ஒருங்கிணைந்து அடர்ந்தேறும் போது படையை விட்டு புறமுதுகு காட்டி ஓடுவதும், அநாதையின் முதலை அநியாயமாக திண்பதும், அளவு, நிறுவை, முழம் போடுவதில் குறைப்பதும், (ஐவேளை கடமையான) தொழுகையை விடுவதும், வக்த் வரும் முன் தொழுவதும், காரணமின்றி வக்த் போன பின்பும் பிற்படுத்துவதும், உரிமையின்றி முஸ்லிமை அடிப்பதும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பெயரில் ஞாபகத்தோடே (தெரிந்தே)பொய் பேசுவதும், சஹாபாக்களை ஏசுவதும் (தவறாக விமர்சிப்பது)- நபி என்பதில் இரு வேறு கருத்துள்ள ஹழ்ராத் கிள்ர், துல்கர்னைன், லுக்மான் அலைஹிஸ்ஸலாம் போன்றோரை ஏசுவதும் (தவறாக விமர்சிப்பதும், அன்றி நபிமார்களை ஏசினாலோ, தவறாக விமர்சித்தாலோ அது கு.'.ப்ராகும். ) தக்க காரணமின்றி சாட்சியத்தை மறைப்பதும்,

கையூட்டு (லஞ்சம்) வாங்குவதும், ஆண், பெண்ணுக்கிடையில் குழப்பத்தை இழுத்து விடுவதும், அரசரிடம் (ஆட்சியாளர், அதிகாரியிடம்) கோள் மூட்டி விடுவதும், தன் மனைவியிடமோ, தனது மஹ்ரமான (தாய், மகள், சகோதரி போன்ற)வர்களிடமோ தவறாக வந்து போகிறவர் மீது ரோஷப்படாமல் இருப்பதும், ஜகாத்தை கொடாமலிருப்பதும், நன்மையை ஏவி, தீமையைத் தடுக்க முடிந்தும் செய்யாதிருப்பதும், குர்ஆனைக் கற்ற பின் மறப்பதும், உயிரோடு ஒரு வஸ்தை தீயில் சுடுவதும், காரணமின்றி மனைவி கணவரை விட்டு விலகுவதும், மனைவி கணவரை பணிவிடை செய்யச் சொல்வதும், தகப்பனை பிள்ளை பணிவிடை செய்யச் சொல்வதும், ஆலிம்கள், ஹாஃபிள்களை தூஷிப்பதும், தாய் அல்லது மஹ்ரமானவர்களோடு மனைவியை ஒப்பிடுவதும், தக்க அவசியமின்றி (தானாக) செத்ததின் கறியை, பன்றி இறைச்சியை, ரத்தத்தை உண்பதும், கோள் சொல்வதும், புறம் பேசுவதும், முகத்தாட்சண்யம் பார்ப்பதும், சிறு பாவத்தில் (தொடர்ந்து) நிலைப்பதும் பெரும்பாவங்களாகும்.

இமாம் இப்னு ஹஜர் ரஹிமஹுல்லாஹ் தமது ஜவாஜிர் என்கிற நூலில் பெரும்பாவங்கள் 467 என அவற்றைக் குறிப்பிட்டுள்ளனர்.

இந்த பாவங்களில் குஃப்ருக்கு (ஈமான் நிராகரிப்பிற்கு) அடுத்தது கொலை, அடுத்தது ஜினா (விபச்சாரம்), ஜினா கடும் நரக வேதனைக்கும் வறுமைக்கும் வழி வகுக்கும். ஜினாவும், வட்டியும் அதாபு இறங்கிட காரணமாவது நிச்சயம். ஜினா செய்தோரின் அப நாற்றம் நரகவாதிகளுக்கு பெரும்

நோவினை தரும். நரகின் 7 வாசல்களில் விபச்சாரம் புரிந்தோர் நுழையும் வாசலே ஆக நாற்றம் பிடித்தது. மிக சூடானது.

அதில் மிக கடுமையானது மாற்றான் மனைவியை ஜினா செய்வது. அது 10 பெண்களை ஜினா செய்வதை விட பயங்கரமான குற்றம்.

பெரும்பாவமாக குறிப்பிடப்படாத, அதன் எல்லையை அடையாத மற்ற மார்க்கம் பாவமெனக் கூறும் யாவும் சிறு பாவமாகும்.

ஒரு ∴பர்ளையோ, வாஜிபையோ ஷரீஅத் கூறும் காரணமின்றி ஒரு தடவை விட்டாலும் அது பெரிய பாவமே. ஹரமானதை செய்வதும் இது போல் தான்.

சுன்னத்தை சோம்பேறித்தனத்தால் விடுவது சிறு பாவமாகும். மக்ரூஹை செய்வதும் அப்படித்தான்.

தொடர்ந்து சுன்னத்தை விடுவதும், தொடர்ந்து மக்ரூஹை செய்வதும் பெரும்பாவமாகி விடும்.

பொய் பாவங்களனைத்தின் தலை. அது மனத்தை கலங்கப்படுத்தி விடும். அருள்கொணரும் மலக்குகள் அவன் கூறிய பொய்யின் நாற்றம் தாங்காமல் அவனை விட்டு ஒரு மைல் தூரம் போய் விடுவார்கள்.

சிறுபிள்ளையின் அழுகையை நிறுத்த எதையாவது வாங்கித்தருகிறேன் என சும்மா சொன்னாலும் அது பொய்யாக எழுதப்படும்.

எனினும் படையில் (தந்திரமாக செயல்பட வேண்டியிருப்பதால்)அதே போல இரு நபருக்கிடையே

சண்டை, வழக்கை நீக்கி சமாதானம் செய்யவும், மனைவியை தனக்கு பிரியமானவராக ஆக்கவும் பொய் சொல்லலாம்.

அதே போல

## 6 இடத்தில் புறம் பேசலாம் :

1.தீங்கைவிட்டு சம்பந்தப்பட்ட மனிதர் நீங்குவார் எனும்போது அவர் தீங்கை பிறரிடம் சொல்லிக்காட்டலாம்.

2. அநியாயமாக அகப்பட்டுக் கொண்டவன் தன்னைக் காப்பாற்ற அநீதம் செய்தவன் குறித்து புறமாக கூறலாம்.

3. ஒருவரது தீங்கை நீக்க முடிந்தவரிடம் அவரைப்பற்றி புறம் பேசி அதை சீர்செய்ய கேட்பது.

4. பகிரங்கமாக, வெட்கமில்லாமல் பாவம் செய்பவனது பாவத்தை புறத்தே பேசுவது.

5. ஒருவரைப் பற்றி பேச வேண்டி வந்து அவரின் ஊனம் போன்ற குறைகளைக்குறிப்பிட்டால் தான் தெரியும் என்றால் அதை கூறுவது.

6. ஃபத்வா (தீர்ப்பு) தேடுவதற்காக பிறரைப் பற்றி அவர் செய்த தீமை குறித்து குறிப்பிடுவது.

மற்றபடி சாடையாக, சைக்கினையாகவும் புறம் பேசலாகாது. புறம் பேசல் 30 தடவை ஜினா செய்வதை விடக் கொடியது. எனினும் தனிநபர் ஒருவரைக் குறிப்பிட்டு அவர் இல்லாத இடத்தில் குறை பேசுவது புறமாகும்.

தவிர பொதுவாக ஒருவர் இப்படி பாவம் செய்கிறார். அல்லது ஒரு கூட்டம் இப்படிச் செய்கிறது என்று குறிப்பிட்டால் அது புறமாகாது.

புறம் பேசுவது போல் அதை காது தாழ்த்தி (கேட்க வேண்டுமென்றே) கேட்பதும் பாவமாகும்.

அது போல் தான் ஹராமான யாவற்றையும் சொல்வது போல் கேட்பதும், பார்ப்பதும் ஹராம்.

அதன் தெண்டம்- யாரைப்பற்றி புறம் பேசினாரோ அவருடைய பாவமன்னிப்பிற்காக துஆச் செய்வது.. அதாவது புறம் பேசிய அந்த சபையை விட்டு கிளம்பும் முன்பே

اَللّٰهُمَّ اغْفِرْ لَهٗ وَارْحَمْهُ وَتَجَاوَزْ عَنْهُ وَاجْعَلْ مَا قُلْنَا فِيْهِ كَفَّارَةً لِذُنُوْبِهٖ وَقُرْبَةً وَزُلْفٰى بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ

“அல்லாஹும்மங் .·.பிர்லஹு வர்ஹம்ஹு வதஜாவஜ் அன்ஹு வஜ்அல் மாகுல்னா .·.பீஹி க.·.ப்பாரத்தல் லிதுனூபிஹி வகுர்ப(த்)தவ் வ ஜுல் .·.பா பிரஹ்மத்திக யா அர்ஹமர்ராஹிமீன்“ என 3 முறை கூறுவார்.

எனினும் புறம் பேசியமைக்காக அவரிடம் மன்னிப்பு கேட்க முடிந்தால் மன்னிப்பு கேட்பார்.

ஆக அவர் சம்பந்தப்பட்ட நபரில்லாத போது அவர் (வெளியில்) விரும்பாத அவரது குறைகளைப் பேசுவது புறம். அன்றி அவரிடம் இல்லாததைச் சொன்னால் அது பொய் (அவர் மீது இட்டுக்கட்டுவதாகும்.)

கோள் என்பதாவது ஒருவரது ரகசியத்தை அவர் அதை யாரிடம் வெளிப்படுத்தக் கூடாதென நினைக்கிறாரோ அவரிடம் வெளிப்படுத்துவது. கோள் மூட்டியவர் சுவனம் புகார் என்கிறது ஹதீஸ்.

முஸ்லிம் சகோதரனை நாவால் குறை பேசக் கூடாது என்பது அவசியம். அதே போல மனதாலும் குறை நினைக்காமல் இருக்க வேண்டியது அவசியம்.

# ஏவல், விலக்கலின் விளக்கம்

மனித சகவாசத்தில் மிக முக்கியமானது நன்மையை ஏவுவது. அந்த நன்மை ஃபர்ளாக இருந்தால் அதை ஏவுவது ஃபர்ளு கிஃபாயா. முஸ்தஹப்பெனில் ஏவுவது முஸ்தஹப். தீமை ஹராமெனில் அதை விலக்க வேண்டியது ஃபர்ளு கிஃபாயா. மக்ருஹை விலக்குவது முஸ்தஹப்.

(கூட்டத்தில்) ஒருவராவது ஏவல், விலக்கல் செய்ய வேண்டும். விட்டால் அத்துணை நபர்களையும் வேதனை அடையும். ஏவல், விலக்கலுக்கு திராணி பெற்ற ஒருவர் மனிதர்களின் உவப்பை நாடி அதை செய்யாமலிருக்கக் கூடாது.

அதற்கு காரியங்களில் சரி, தவறை அறிந்திருக்க வேண்டியது அவசியம். அதே போல தடுக்கப்பட்டவைகளை விட்டு தான் தவிர்ந்திருக்க வேண்டியதும்.

நற்குணம் உடையவராக இருக்க வேண்டியதும் அவசியம். ஏவல், விலக்கலுக்கு தகுதி பெற நன்மை யாவும் செய்பவராக இருக்க வேண்டியது அவசியமில்லை. எனினும் தீமை யாவையும் செய்யாதவராக இருக்க வேண்டியது மிக அவசியம். இல்லாவிட்டால் உபதேசிப்பது பயனளிக்காது.

**அதன் ஃபர்ளுகள் :** நோக்கம் தூய்தாக இருக்க வேண்டும். அல்லாஹ்வின் கலிமாவை வெளியாக்குவது நோக்கமாக இருக்க வேண்டும். ஏவல், விலக்கலுக்கான ஆதாரங்களை அறிந்திருக்க வேண்டும். அதனால்

அவருக்கு நேரும் துன்பங்களை பொறுத்துக் கொள்ள வேண்டும்.

ஆக (ஏவல், விலக்கல் பற்றிய) சட்டம் தெரியாதவர் அதைச் செய்ய அனுமதியில்லை. துன்பத்தை (எதிர்ப்பை) அஞ்சுபவர் மீது அது வாஜிபில்லை (அவசியமில்லை) எனினும் அத்தகையவருக்கு அது முஸ்தஹப்பாகும்.

தீமையை தடுக்க முடியாதவர் அதை வெறுத்து ஒதுங்கிட வேண்டும். அதில் கலந்திடக் கூடாது. தான் ஏவல், விலக்கல் புரிந்து மற்றவர் பாதிக்கப்படுவார் எனில் அவர் செய்யக் கூடாது. ஆக தகுதியுள்ளவர் அதைச் செய்தால் பொறுமையோடு அல்லாஹ்விடம் அதற்கான கூலியை ஆதரவு வைக்கட்டும். அவர் கல்லடி, சொல்லடியைப் பொறுத்துக் கொள்ளட்டும். அதற்கஞ்சலாகாது. ஏன் மரணத்திற்குக் கூட பயப்படலாகாது.

நன்மையை ஏவப்பட்டால் அதற்கு வழிப்படுவது வாஜிப். அன்றி என்னை ஏவாதே. வாயைப் பொத்திக் கொண்டு போ. எங்களுக்கு தெரியும் என்றெலாம் பதில் கூறுவது பெரிய பாவமாகும்.

## ஏவல், விலக்கலுக்கு 5 படித்தரங்கள் உண்டு.

1. பாவத்தின் கெடுதியை அறிவிப்பது.
2. மென்மையாய்ப் பேசி அல்லாஹ்வின் அச்ச மூட்டுவது. பிள்ளை பெற்றோருக்கோ, வேலைக்காரர் முதலாளிக்கோ,

மனைவி கணவருக்கோ, குடிமகன் ஆட்சி புரிபவருக்கோ ஏவல், விலக்கல் செய்தால் இந்த இரண்டில் ஒரு முறையையே பின்பற்றுவா். எனினும் அவா்களுக்காக துஆ செய்வா். பிழை பொறுக்கத் தேடுவா்.

3. கடுமையாக பேசி ஏசுவது. எனினும் கா.்.பிரே, யஹூதியே, நஸ்ரானியே, கின் ஜீரே, நாயே பாவியே என பேச மாட்டார். முட்டாளே, மடையனே எனப் பேசுவார்.

4. அந்த கெட்ட காரியத்தை பாழாக்கி விடுவது. உதாரணமாக மதுவைக் கொட்டி, மதுபாட்டிலை உடைத்துப் போட்டு அக்காரியத்தை தடுப்பது

5. அடித்து செயல்படு(த்து)வது.
அடிக்க முடியாவிடில் நாவால் தடுப்பது.

முடியாவிடில் மனத்தால் வெறுப்பை வெளிப்படுத்துவது. ஏவல், விலக்கல் செய்பவா் புத்தியுள்ள, பருவமடைந்தவராக இருக்க வேண்டியது ஷா்த்தாகும்.
எனினும் இதற்கு பருவமடைய வேண்டியது கட்டாயமல்ல. புத்தி தெளிவு வரும் வயது முதலே இதைச் செய்யலாம். அவ்வாறாகச் செய்தால் மிகப்பெரிய நன்மை உண்டு.

அதே போல தவறை புத்தியுள்ள, பருவமடைந்தவா் செய்தால் மட்டுமே திருத்த வேண்டும் என்றில்லை. புத்தியில்லா பைத்தியக்காரன் தவறிழைத்தாலும், சிறு பிள்ளை தவறு செய்தாலும் திருத்துவார். அது வாஜிப்.

# தவ்பா விளக்கம்

தவ்பா என்பது பாவத்தை கை விட்டு (ஷரீஅத் தின் உத்தரவிற்கு முற்றிலும்) வழிப்படுவதாகும். அது யாவர் மீதும், எல்லா சமயமும், எல்லா நிலையிலும் ஃபர்ளு.
மு.்.மின்களே! நீங்கள் யாவரும் அல்லாஹ்விடம் தவ்பா செய்யுங்கள் என்கிறது குர்ஆன்.
மக்களே அல்லாஹ்விடம் தவ்பா செய்வீர். நான் ஒரு நாளைக்கு 100 முறை தவ்பா செய்கிறேன் என்றார்கள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள்.

**தவ்பாவின் ருக்னுகளாவது...** பாவத்தை கை விடுவதும், செய்த பாவத்திற்காக வருந்துவதும், இனி ஒரு போதும் அதைச் செய்ய மாட்டேன் என உறுதி கொள்வதும், அல்லாஹ்வுடைய ஹக்குகளில், அடியாருடைய ஹக்குகளில் இடம்பாடானதை எத்திக் கொள்வதுமாகும். இதில் கை சேதப்படுதல் மிக முக்கியம். கை சேதமே தவ்பா என்கிறது நபிகளாரின் ஹதீஸ். அதாவது ரப்பின் தண்டனையை நினைத்து கல்பு நொம்பலமாவதாகும்.

**அல்லாஹ்வின் ஹக்கை எத்திக்கொள்வதென்றால்:**
விட்ட தொழுகை, நோன்பை போன்றதை கழா செய்வது. க.்.ப்பாராவை நிறைவேற்றி விடுவது.

**அடியாரின் ஹக்கை எத்திக் கொள்வதாவது...** அடுத்தவர் முதலை (சொத்தை) பொருளை அநியாயமாக அபகரித்திருந்தால் அதை ஒப்படைப்பது அல்லது அவரிடம் மன்னிப்புக் கேட்டு அவர் மன்னிப்பது. சம்பந்தப்பட்ட நபரை அடைந்து கொள்ள முடியாதென்றால் அந்த முதலளவு அவர் பெயரில் சதகா செய்து விடுவது. பிறரை நோவினை செய்திருந்தால் அவரிடம் மன்னிப்புக் கேட்பார். அதற்கு இயலாது போயின் அவருக்காக பிழை பொறுக்க துஆச்செய்வார்.

பொதுவாக பாவத்தை மன்னிப்பாயாக என்றாலும் போதும். பாவத்தை தனித்தனியே குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

**தவ்பாவின் பயனாவது..** அல்லாஹ் அவனை உவப்பதும், வணக்கத்தில் அவனுக்கு நல்வழி காட்டுவதும், வணக்கத்தை அவனுக்கு இன்பமாக்குவதும், அதை ரப்பு கபூல் செய்வதுமாகும்.

தவ்பாவை அல்லாஹ் விரும்புகிறான். தவ்பாவின் ஷர்த்துகள் சரியாக இருந்தால் அதன் அங்கீகாரம் சந்தேகத்திற்கிடமற்றது.

தவ்பாவின் ஹக்காவது அதன் பின் இஸ்திங்.பார் செய்வது. அதாவது பிழை பொறுக்கத் தேடுவது. ஒரு நாளில் 70 முறை பாவத்தளவில மீண்டாலும் தவ்பா செய்து , பிழை பொறுக்கத் தேடியவர் பாவத்தில் தரிபட்டவராகார் என்கிறது ஹதீஸ்.

நியாயமாக இஸ்திங்.ஃ.பார் செய்வது இஸ்லாத்தின் சுன்னத்துகளிலுள்ளதாகும். இது பெரும் பாவத்தை சிறியதாக்கி விடும், பரகத்தை தருவிக்கும். குழந்தை பாக்யத்திற்கு வழிகோலும்.

அல்லாஹ் பாவத்தை வெளியாக்குவதை விட அதை மறைப்பதையே விரும்புகிறான். எனினும் ஹத்தை (தண்டனையை)நிலைநாட்ட பாவத்தை விண்ணப்பம் செய்தால் அது பழிப்பல்ல.

ஹழ்ரத் மாஇஜ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் குறித்து அவர்கள் தாமாகவே பாவத்தை விண்ணப்பம் செய்து தண்டனை பெற்றது குறித்து அவர்கள் அல்லாஹ் அளவில் செய்த தவ்பாவை சமுதாய மக்கள் யாவர்க்கும் பங்கிட்டாலும் தாராளமாக போதும் என்றனர் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்கள்.

இன்னும் தவ்பாவின் ஹக்காவது, பின் தொடர்ந்து நன்மை செய்ய ஆரம்பிப்பது. பாவத்தைப் பேசியது. கேட்டதற்காக குர்ஆனை ஓதி, கேட்டு நன்மை செய்வார். பாவத்தில் வாழ்நாள் கழிந்ததற்கு பகரமாக பள்ளியில் இ.ஃ.திகா.ஃ.ப் இருந்து வணக்கம் புரிவார். மது அருந்தியதற்காக ஹலாலான குடிபானங்களை சதகா செய்வார். கொலைக்கு பகரமாக அடிமையை உரிமை விடுவார். புறம் பேசியமைக்காக அவர் மீதான நற்கருத்தை பிரசங்கம் செய்வார். கோபத்துக்கு சதகாவை பகரமாக்குவார். நன்மைகள் பாவங்களை அழித்து விடும்.

இன்னும் பாவம் செய்தவர் பாவம் செய்தபோது அணிந்திருந்த ஆடைகளையும் கழுவி தானும் குளிப்பார். பின் யாரும் பாரா நிலையில் 4 ரக்அத் தொழுது கண்ணீரோடும் மன நொம்பலத்தோடும் சப்தமாக தரையில் நெற்றியை வைத்து தான் செய்த பாவங்களை ஒவ்வொன்றாக நினைத்து நினைத்து தன்னைப் பழித்து இரு கைகளையும் உயர்த்தி அல்லாஹ்வைப்புகழ்ந்து, சலவாத் ஓதி தனக்காகவும், பெற்றோருக்காகவும், உலக முஸ்லிம்கள் யாவர்க்காகவும் (பிழைபொறுக்க)துஆ செய்வார்.

رَبِّ اغْفِرْلِيْ وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِيْنَ يَوْمَ يَقُوْمُ الْحِسَابُ

“ரப்பிங்.ஃ.பிர்லீ வலிவாலிதய்ய வலில் மு.ஃ.மினீன யவ்ம யகூமுல் ஹிஸாப்“ என (ஹழ்ரத் இப்ராஹீம் நபியவர்கள் தமக்காகவும், மு.ஃ.மினான தம் தாய், தந்தையருக்காகவும், இதர மு.ஃ.மின்கள் யாவர்க்காகவும் பிழை பொறுக்க துஅ செய்தது போல) துஆச்செய்வார். அதிகம் இஸ்திங்.ஃ.பார் செய்வார்.

رَبِّ ظَلَمْتُ نَفْسِيْ وَعَمِلْتُ سُوْءً فَاغْفِرْلِيْ ذُنُوْبِيْ

“ரப்பி ளலம்(த்)து ந.ஃ.ப்ஸீ வஅமில்(த்)து சூஅன் .ஃ.பங்பிர்லீ துனூபீ“ என்பார்.

(இந்த கிதாபில் ஆரம்பத்தில் வந்த) சய்யிதுல் இஸ்திங்பாரை அதிகம் செய்வார்.

ஓர்மையோடு தவ்பா செய்துகொண்டும், வேதனையை பயந்தும், ரப்பின் மன்னிப்பை ஆதரவு வைத்தும், பள்ளியில் 2 ரக்அத் தொழுதும், 70 முறை இஸ்திங்.ஃ.பார் செய்தும், 100 முறை தஸ்பீஹ் செய்தும், ரகசியமாகவும்,

பகிரங்கமாகவும் தர்மம் செய்தும், ஒரு நாள் நோன்பு வைத்தும் தவ்பா செய்தால் அது ஏற்கப்படுவதை மிகுந்து ஆதரவு வைக்கப்படும்.

தவ்பா குறித்த வசனங்களை, ஹதீஸ்களை படிப்பதும், கேட்பதும் அதற்கு முடுகுதலாக்கும்.

மவ்த்தை, ஆகிரத்தை, கியாமத்தை, கேள்வி, கணக்கை, நரகை நினைப்பதும் பாவம் செய்யாதிருக்க வழி கோலும். பாவத்திற்கு காரணமாக அமைவது உலகப்பற்றும், பேராசையுமாகும்.

தவ்பா செய்பவர் மேற்கண்ட இரண்டையும் உதறுவதோடு தவ்பா செய்ததில் உறுதியாக இறுதி வரை நிலைத்திருக்க வேண்டும்.

அன்றி தவ்பா செய்யாமலேயே மரணித்து விடுபவரின் கதியை அல்லாஹ்வே நன்கறிந்தவன். மேலும் தவ்பாவும் செய்யாமல் தொடர்ந்து பாவம் செய்து கொண்டு, நன்மையும் புரியாமல் அல்லாஹ்வின் மன்னிப்பை எதிர்பார்ப்பது மடத்தனம். (அல்லாஹ் மடத்தனத்திலிருந்து நம்மை பாதுகாத்தருள்வானாக.)

## இபாதத்-வணக்கம் குறித்த விளக்கம்

எனையறிந்து வணங்கவே மனு-ஜின் வர்க்கத்தை நான் படைத்தேன் என அல்லாஹ் தன் மறையில் திட்டவட்டமாக குறிப்பிடுகிறான்.

## இபாதத் 6 வகை:

1. **தொழுகை:** அதில் ஆக முக்கியமானது தொழுகை. ஈமானுக்கடுத்து ஃபர்ளான வணக்கத்தில் முதன்மையானது தொழுகை. அதன் ஹக் உள்ரங்கம், வெளிரங்கம் இரண்டையும் துப்புரவாக்குவது.

2. **குர்ஆன் ஓதுதல்:** என் உம்மத்தின் இபாதத்தில் மிக சிறப்பானது குர்ஆன் ஓதுதல் என்கிறது ஹதீஸ். அதை அல்லாஹ்வின் வசனங்கள் எனும் கண்ணியத்தை மனதிற்தாங்கி அவன் உவப்பை நாடி ஆசையோடு, ஆர்வத்தோடு ஓதுவது.

(குர்ஆனை தொட வுளு அவசியம். ஓத அவசியமில்லை. எனினும்) வுளு செய்து, தூய ஆடை உடுத்தி, அத்தர் பூசி, கிப்லா நோக்கி அமர்ந்தோதல் ஒழுக்கம். இருகால்களையும் மடக்கிக் கொண்டால் ஒருக்கணித்து படுத்தவாறும் ஓதலாம்.

குர்ஆனை தொழுகையில் நின்றோதினால் ஒரு எழுத்துக்கு 100 நன்மைகள் உண்டு. அமர்ந்தோதினால் 50 நன்மைகள். தொழுகைக்கு வெளியே வுளுவோடு ஓதின் 25 நன்மைகள் . வுளுவின்றி ஓதின் ஒரு எழுத்துக்கு 10 நன்மைகள்.

இரவில் ஓதுவது சிறப்பு. பார்த்து ஓதுவது சிறப்பு. இரட்டிப்பு கூலி உண்டு. கொட்டாவி வந்தால் ஓதுவதை நிறுத்தி கொள்வார்.

குர்ஆனை (ஒரு நபர்) 3 நாளைக்கு குறைவாக முடிக்க வேண்டாம். 7 நாட்களில், 40 நாட்களில் முடிப்பது குறித்து ரிவாயத் பேசுகிறது.
7 நாட்களில் முடிப்பவர் 7 மன்ஜிலாக முடிப்பார்.
இதுவெலாம் புற நிலை உடையவருக்கே.
அகநிலை உயர்ந்தோருக்கல்ல.
குர்ஆனை நிறுத்தி நிறுத்தி ஓதுவதும், ஓதும் போது அழுவதும் முஸ்தஹப். இல்லாவிட்டால் அழுவது போல் பாவனையாவது செய்யுங்கள் என்கிறது ஹதீஸ் ஷரீப்.
அஊது கூறி துவங்குவார்.

குர்ஆனை நிறைவு செய்தால் மறு துவக்கம் செய்து அதாவது நாஸ் சூராவில் முடித்து மீண்டும் பாத்திஹா சூரா ஓதி முதலாம் ஜுஸ்உ சூரா பகராவின் முதல் 4 ஆயத்துகளை ஓதி நிறைவு செய்வார். முடிக்கும்போது கத்தம் துஆ (குர்ஆனில் இறுதியில் இடம்பெறும் துஆக்கள் அல்லது சிறிய துஆவாவது) ஓதி முடிப்பார்.
கத்தம் துஆ வில் பங்கேற்பதை பெரிய பாக்யமாக எண்ணுவார்.
புகழ்ச்சியை பயந்தாலோ, தொழுபவருக்கு இடைஞ்சலாக இருக்குமென்றாலோ குர்ஆனை மெதுவாக ஓதுவார். இல்லாவிட்டால் சப்தமாக ஓதுவார். ஓதும்போது இதயக்கண் கொண்டு பார்த்தோதுவார். அழகிய தொணியில் ஓதுவார். அதை சங்கை செய்வார். ஹழ்ரத் இக்ரிமா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் குர்ஆனைத் திறந்தால் ஆசை ஆசையாய்

“ஹுவ கலாமு ரப்பீ, ஹுவ கலாமு ரப்பீ“ இது என் ரப்பின் வேதம். என் ரப்பின் வேதம் என்பார்கள். குர்ஆனை மேலே உயரமான இடத்தில் வைப்பதும், அதற்கு மேல் எதையும் வைக்காதிருப்பதும் அதற்கு சங்கை செய்வதாகும். சூரா தீனில் ஹாகிமீன் என முடிந்தபின் “பலா வ அன அலா தாலிக மினஷ் ஷாஹிதீன்“ என்பது, கியாமா ஓதி முடிந்த பின் “பலா இன்னஹு அலா குல்லி ஷைஇன் கதீர்“ என்று கூறுவது வல்முர்சலாத் கடைசி ஆயத்திற்குப் பின் “ஆமன்னா பில்லாஹ்“ என்றும் கூறுவது.

ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு வாகிஆ சூராவில் வரும் அஃபரஐத்தும் மாதுனூன், அஅன்தும் தக்லுகூனஹு அம்நஹ்னுல் காலிகூன் என ஓதிய போது “பலா அன்த யா ரப்பீ” என 3 முறை சொன்னார்கள். அதே போல அம் நஹ்னுஜ்ஜாரிஊன், அம் நஹ்னுல் முன்ஜிலூன், அம் நஹ்னுல் முன்ஷிஊன் ஓதிய போதும் அதைச் சொன்னார்கள்.

அலம்யஃனிலில்லதீன ஆயத்தை ஓதிய ஹழரத் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு தேம்பித்தேம்பி அழுது “பலா ரப்பீ” என்றார்கள். யா அய்யுஹல் இன்சானு மா ஙர்ரக பிரப்பிகல் கரீம் என்ற வசனத்தை ஓதிய பின் பெருமானார் சல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் “ஙர்ர ஜஹ்லுஹு” என்றார்கள். இன்ன லதைன அன்காலவ் வஜஹீமா என்ற வசனத்தை ஓதிய போது கவலை கொண்டார்கள். சூரா தஹ்ரின் முதல் வசனத்தை ஓதிய ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு “வஇஜ்ஜதிக ஜஅலதஹு சமீஅம் பசீரன் ஹய்யவ் வமய்யித்தா” என்றார்கள்.

## சிம்துஸ் ஸிப்யான் (ஹனபி)

குல்ஹுவல்லாஹு அஹத் ஓதி அன்த அல்லஹு அஹத். அல்லாஹு சமத் என்று கூறவும். குல் அஊது பிரப்பில் ஃபலக் என்றோதியதும் “அஊது பிரப்பில் ஃபலக்” என்றும், குல்அஊது பிரப்பின்னாஸ் என்றதும் “அஊது பிரப்பின்னாஸ்” என கூறவும்.

வ யப்கா வஜ்ஹு ரப்பிக துல் ஜலாலி வல்இக்ராம் என்றோதினால் ஹாஜத்தை துஆ செய்யவும்.

அஃபஅமின அஹ்லுல் குரா ஆயத் சுப்ஹானஹு பல்லஹு மாஃபிஸ்ஸமாவத்தி வல்அர்ழி குல்லுல்லாஹு கானிதூன், வமா யம்பஙீ லிர்ரஹ்மானி ஆகிய ஆயத்துக்களை சப்தத்தை வெளிப்படுத்தி ஓதுவது முஸ்தஹப்

சூரா யாசீனில் மம்பஅசனா மிம்மர்கதினா என ஓதி மூச்சை விடாமல் வக்ஃபு செய்து பின் ஹாதா என ஓதத் துவங்குவர்.

குர்ஆனை ஒவ்வொரு ஆயத்திலும் வக்ஃபு செய்து ஓதுவது சுன்னத்.

மேலும் ஒவ்வொரு ஆயத்தின் முடிவிலும் நிறுத்துவது சுன்னத். ரஹ்மத்துடைய வசனத்தில் (அதை ஓதிய பின்) ரஹ்மத்தை துஆ செய்வார். அதாபு குறித்த ஆய்த்தில் அதை விட்டும் காவல் தேடுவார்.

அல்லாஹ்வின் அற்புதம், ஆற்றலைக் குறிக்கும் ஆயத்தில் தஸ்பீஹ் செய்வார். துஆ ஆயத்தில் துஆ செய்வார். இஸ்திங்.்.பார் ஆயத்தில் இஸ்திங்.்.பார் செய்வார். இவையாவும் தொழுகைக்கு வெளியிலும், அல்லது தனியாக நபில் தொழும் போதுமாயிருக்கும்.

குர்ஆனை பிறரை ஓதிச் சொல்லிக் கேட்பது சுன்னத். எனினும் பிறர் குர்ஆன் ஓதினால் காது தாழ்த்திக் கேட்பது வாஜிப்.

**3. சலவாத் :** பெருமானார் மீது சலவாத் கூறுபவருக்கு ஷ.்.பாஅத், சொர்க்கத்தில் பெருமானாரின் தோழமை உட்பட அநேக நற்பலன்கள் சொல்லப்பட்டுள்ளது.
அதன் ஹக்காவது: அதை சலாமோடும், மற்றுமுள்ள நபிமார்கள் பேரிலும், அஹ்லு பைத்கள், சஹாபிகள் பேரிலும் சொல்வது.
எனினும் சலவாத்தை தும்மும் போதும், பிராணிகளை அறுக்கும்போதும், புதுமையாகும் போதும் சொல்ல மாட்டார். ஜும்ஆ வின் இரவு, பகலில் அதிகம் சலவாத் ஓதுவார்.

**4. ஹதீஸ்களில் வரும் திக்ர், அவ்ராதுகளை ஓதுவது:**
.்.பஜ்ருக்குப்பின் இஷ்ராக்வரையும், அசர் முதல் மக்ரிபு வரையும் திக்ர், அவ்ராதில் ஈடுபடல். அதுபோது 4ம் கலிமா 10 முறை, சலவாத் 10 முறை, முசப்பஆத்துல் அஷ்ர் ஓதுவார்.

**அதாவது-** 1. சூரா .்.பாத்திஹா, 2. கா.்.பிரூன், 3. இக்லாஸ் 4. .்.பலக் 5. நாஸ் 6. ஆயத்துல் குர்ஸி , 7. சலவாத் ஓதி 8. அல்லாஹும்மங்.்.பிர்லீ வலிவாலிதய்ய வலில் மு.்.மினீன வலில் மு.்.மினாத் ஓதி 9. 3-ம் கலிமா

ஓதி பின் 10.

اَللّٰهُمَّ افْعَلْ بِيْ وَبِهِمْ عَاجِلًا وَّ اٰجِلًا فِي الدِّيْنِ وَالدُّنْيَا وَالْاٰخِرَةِ،

مَا اَنْتَ لَهُ اَهْلٌ، وَلَا تَفْعَلْ بِنَا يَا مَوْلَانَا مَا نَحْنُ لَهُ اَهْلٌ،

اِنَّكَ غَفُوْرٌ حَلِيْمٌ، جَوَادٌ كَرِيْمٌ رَؤُوْفٌ رَحِيْمٌ

அல்லாஹும்ம.்.ப்அல் பீ வ பிஹிம் ஆஜிலவ் வஆஜிலன் .்.பித்தீனி வத்துன்யா வல் ஆகிர(த்)தி. மா அன்(த்)த லஹு அஹ்லுன் வலா த.்.ப்அல் பினா யாமவ்லானா மா நஹ்னுலஹு அஹ்லுன் இன்னக ஙு.்.பூருன் ஹலீம். ஜவாதுன் கரீம், ரஊ.்.புர் ரஹீம் ஆகிய பத்தையும் ஏழேழு முறை ஓதுவது.

தினமும் 10 முறை அஊது சொல்வது. 100 முறை இஸ்திங்.்.பார் செய்வது. “அஸ்தங்.்.பிருல்லாஹல் அளீமல்லதீ லாஇலாஹ இல்லாஹுவல் ஹய்யுல் கய்யூம் வ அத்தூபு இலைஹி“ என்பார். “சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி“ 100 முறை கூறுவார். 3ம் கலிமா முந்தைய பகுதி 100 முறை கூறுவார். ஒருவர் பகலில் அல்லது இரவில் அல்லது ஒரு மாதத்ததில்

“லா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்.

லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹ்

லாஇலாஹ இல்லல்லாஹு லாஷரீகலஹ்

லாஇலாஹ இல்லல்லாஹு லஹுல்முல்கு வலஹுல் ஹம்து.

லா இலாஹ இல்லல்லாஹு வலா ஹவ்ல வலாகுவ்வ(த்)த இல்லா பில்லாஹ் என்று ஓதி அந்த இரவு அல்லது

பகலில் அல்லது அந்த மாதத்தில் மவ்த்தானால் பாவமன்னிப்பு பெறுவார்.

மேலும் இரவு, பகலில்

اَللّٰهُمَّ اِنِّيْ اَسْئَلُكَ صِحَّةً فِيْ اِيْمَانٍ وَاِيْمَانًا فِيْ حُسْنِ خُلُقٍ وَنَجَاةً يَتْبَعُهَا فَلَاحٌ وَ
رَحْمَةً مِنْكَ وَعَافِيَةً وَمَغْفِرَةً مِنْكَ وَرِضْوَانًا

"அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக சிஹ்ஹத்தன் .:.பீ ஈமான். வ ஈமானன் .:.பீ ஹுஸ்னி குலுக். வநஜாத்தன் யத்பஉஹா.:.பலாஹ். வரஹ்மத்தம் மின்க. வ ஆ.:.பியத்தவ் வமங்.:.பிரத்தம் மின்க வரிழ்வானா" என்பார்.

.:.பஜ்ருக்குப்பின் கல்வி கற்பது சிறப்பு. அந்நேரம் உள்ளம் தெளிவாக இருக்கும். கல்வி கற்பது 1000 ரக்அத் நபில் தொழுவதை விடச் சிறந்ததென்றும், உங்களில் வணக்கசாலியை விட ஆலிமின் சிறப்பு சாதாரண நபரை விட என் சிறப்பை போன்றதென ஹதீஸில் வருகிறது. கல்வியை குழந்தைப் பருவம் முதல் கப்ர் குழி புகும் வரை கற்பார்.

மேலும் மக்கள் காரியங்களில் ஈடுபட்டவரும், தொழில், வியாபாரமென சம்பாத்தியத்தில் ஈடுபட்டவரும் இடையிடையே திக்ர் செய்வார்.
இரவு உறங்கும்முன் வித்ர் தொழுவார். தஹஜ்ஜுத்திற்கு எழுவதில் உறுதியாக இருப்பின் அதை (தஹஜ்ஜுத்திற்குப்

பின்) பிற்படுத்துவார். இரவு யாசீன், அலிப் லாம் மீம் சஜ்தா, தபாரக் (சூரா முல்க்), துகான், ஜுமர், வாகிஆ, சப்பஹ லில்லாஹி போன்றதை ஓதுவார்.

நித்திரை மிகைக்கும்போது உறங்குவார். அப்போது தொழ மாட்டார். அவ்ராதுகளை தொடர்ந்து பேணி வருவார். அமல்களில் அல்லாஹ்விற்கு மிக பிரியமானது கொஞ்சமானாலும். தொடர்ந்து செய்து வருவது. நாளுக்கு நாள் நன்மைகளை, ஓதுவதை அதிகமாக்குவார். நோயாளியை நலம் விசாரிப்பது, ஜனாஸாவை தயார் செய்வது போன்ற நற்செயல்கள் பிழை பொறுக்கப்பட சுவனம் புக வழிகோலும்.

## 5. துஆ செய்வது:

துஆ வணக்கத்தின் மூளை என்கிறது ஹதீஸ்.
அதற்காக துஆ துரிது அங்கீகரிக்கப்படும் சமயங்களை முறையாக பயன்படுத்திக் கொள்வது. துஆவை ஹம்து, சலவாத் கொண்டு துவக்கி ஹம்து, சலவாத்தோடு முடிப்பார்.

## 6. அல்லாஹ்வின் படைப்புகளில் யோசனை செய்வது:

ஒரு மணி நேர யோசனை 60 வருட இபாதத்தை விடச் சிறந்தது. யோசனை என்பதின் நோக்கம் அல்லாஹ்வின் மகத்தான ஆற்றலை அறியத்தேடுவது. அதாவது மஃரிபா எனும் ஞானத்தேடல். அதன் ஆரம்ப நிலை அல்லாஹ் செய்துள்ள அருட்கொடைகளை மனதில் நிலை நிறுத்திப்பார்ப்பது.

# மஹப்பத் எனும் நேசத்தின் விளக்கம்

அல்லாஹ்வின் உவப்பிற்காக வணக்கத்தை தொடர வேண்டியது அடியார் மீது வாஜிப். "அல்லாஹ்வை நேசிப்போரெனில் நீங்கள் எனைப்பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான் எனக் கூறுங்கள் நாயகமே!" என்கிறது மறை.

அல்லாஹ்வின் நேசத்தை விட உயர்ந்தது எதுவுமே கிடையாது. அல்லாஹ்வின் திருப்பொருத்தம் கிடைக்காது எந்த ஈடேற்றமும் கிடைக்காது. அல்லாஹ்வின் நேசம் பெற வழி.. ஷரீஅத், தரீகத், ஹகீகத் உடையோரின் (இறைவனது நேசம் மிக்க நபிமார், வலிமார்களின்) பாதையில் நடப்பதாகும். அடியாரை நான் உவந்திட்டால் அவரது கேள்வியாய், பார்வையாய், சொல், செயலாய், நடையாய் நானிருப்பேன் என்கிறான் ரப்பு.

ஆகவே அல்லாஹ்வின் நேசம் பெற ஃபர்ள், வாஜிப், சுன்னத்துகளோடு நபிலான வணக்கங்களிலும் அதிகம் ஈடுபடுவார். அதில் ஆரம்ப நிலை திக்ர். அடுத்த நிலை திலாவத் (குர்ஆன்). கடை நிலை தொழுகை. திக்ரில் சிறந்தது லாஇலாஹ இல்லல்லாஹ். துஆவில் சிறந்தது அல்ஹம்து லில்லாஹ்.

# ஒடுக்கத்து புதன் பற்றிய விளக்கம்

சில ஆரி.ஃ.பீன்கள் கூறியுள்ளனர்.. ஒவ்வொரு வருடமும் 3,20,000 முசீபத்துகள் இறங்கும். ச.ஃ.பர் மாத கடைசி புதனில் அவை இறங்கும். அந்நாளில் ..ஃ.புாத்திஹாவுக்குப் பின் இன்னா அ.ஃ.த்தைனா 17 முறை, குல்ஹுவல்லாஹு அஹத் ஒவ்வொரு ரக்அத்திலும் 5முறை ஓதி, 4 ரக்அத் தொழுத பின் பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர் ரஹீம். அல்லாஹும்ம யாஷதீதல்குவா யாஷதீதல் மிஹால். யா அஜீஜ் தல்லத் லி இஜ்ஜதிக ஜமீஉ கல்கிக. இக்.ஃ.பினீ மின் ஜமீஇகல்கிக. யா முஹ்ஸின்; யா முஜ்மில் யா மு(த்)த.ஃ.பழ்ழில் யா முன்இம், யா முக்ரிம் யாமன் லாஇலாஹ இல்லா அன்(த்)த பிரஹ்மத்திக யா அர்ஹமர் ராஹிமீன். அல்லாஹும்ம பிஸிர்ரில் ஹஸனி வ அகீஹி வஜத்திஹி வ அபீஹி. இக்.ஃ.பினீ ஷர்ர ஹாதல் யவ்மி வமா யன்ஜிலு .ஃ.பீஹி யாகா.ஃ.பீ .ஃ.பஸயக் .ஃ. பீகஹுமுல்லாஹ் வஹுவஸ்ஸமீஉல் அலீம். வ ஹஸ்புனல்லாஹு வ நி.ஃ.மல்வகீல். வலா ஹவ்ல வலா குவ்வ(த்)த இல்லாபில்லாஹில் அலிய்யில் அளீம். ஸல்லல்லாஹு அலா சய்யிதினா முஹம்மத் வ ஆலிஹி வசஹ்பிஹி வசல்லம் என்ற துஆவை ஓதினால் அல்லாஹ் அந்த முசீபத்திலிருந்து பாதுகாப்பான்.

# நஹ்சுடைய நாட்கள்

மார்க்க சட்ட மேதைகளான இமாம்களைப் பொறுத்தமட்டில் ஃபர்ளை (கடமையை) பாழாக்கிய நாள் தான் நஹ்சுடைய நாள். மற்ற நாள் நஹ்சல்ல.

முஜர்ரபாத்துத் தைரபிய்யில் வருகிறது..

ஒவ்வொரு மாதமும் பிறை 3,5,13,16,21,24,25 மற்றும் ஸஃபர் மாத கடைசி புதன் ஆகிய 8 நாட்கள் நஹ்ஸ்.

# பெரிய நஹ்ஸ்

ஒவ்வொரு மாதத்திலும் இரு நாட்கள் பெரிய நஹ்ஸ். முஹர்ரம் 14,15. ஸஃபர் 1,2. ரபீஉல் அவ்வல் 10,20. ரபீஉல் ஆகிர் 1,15. ஜமாதுல் அவ்வல் 10,15. ஜமாதுல் ஆகிர் 1,15. ரஜப் 13,15. ஷஃபான் 14,20. ரமழான் 3,20, ஷவ்வால் 8,20. துல்கஃதா 2,3. துல்ஹஜ் 6,20.

# கொடிய நஹ்ஸ்

ஒவ்வொரு மாதமும் ஒரு நாள் கொடிய நஹ்ஸ்.

முஹர்ரம் 12, ஸஃபர் கடைசி புதன், ரபீஉல் அவ்வல் 4, ரபீஉல் ஆகிர் 12, ஜமாதுல் அவ்வல் 28, ஜமாதுல் ஆகிர் 22, ரஜப் 22, ஷஃபான் 23, ரமழான் 4, ஷவ்வால் 7, துல்கஃதா 27, துல்ஹஜ் 7.

திங்கள், செவ்வாயில் ஹஜாமத் செய்வீர். புதனில் தவிர்ப்பீர் என அல்லாமா முல்லா அலீகாரீ ரஹிமஹுல்லாஹ் கூறியிருப்பதை வைத்து நஹ்ஸ் பார்ப்பது குற்றமல்ல என்பது தெரிய வருகிறது.

காரணம்., சம்பந்தப்பட்ட அந்த நஹ்சுடைய நாட்களில் நபிமார்கள் சிரமத்திற்காளானார்கள். எனினும் இது தவக்குல் எனும் அல்லாஹ்வின் மீதான நம்பிக்கை குறைந்தவர் நிலையாயிருக்கும்.
அல்லாஹ்வின் நாட்டமின்றி எதுவுமில்லை என்ற உறுதியோடு உள்ளவருக்கு இந்த நஹ்சுகள் எந்த ஒரு பாதிப்பையும் ஏற்படுத்திவிடாது.

∴.பதாவா கலீலீயில் இவ்வாறே கூறப்பட்டுள்ளது.



لا إله إلا الله محمد رسول الله

هذه رسالة لطيفة لتعليم الصبيان ما لا بد لهم من
التبيان على مذهب سيدنا أبي حنيفة النعمان توجه الرحمان
بتاج الرحمة والرضوان اعني بها

# سمط الصبيان

من تاليفات العلامة مولانا الشيخ محمد يوسف الحنفي
المذهب القادري المشرب الإمام فطني المولد والمدراسي
المرقد افاض الله علينا بركاته

فقيه واحد اشد على الشيطان من الف عابد

كتبه خليل محمد يعقوب پيارم پيٹ

# பொருளடக்கம்

## இந்நூல் பற்றி

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சிம்துஸ் ஸிப்யான் |
| மொழி | : | தமிழ் |
| நூலின் ஆசிரியர் | : | அபுல் பர்காத் ஆலிம் |
| தமிழில் | : | மௌலவி M.இப்னு முஹ்யித்தீன் |
| முதல் பதிப்பு | : | 15.11.2015 சபர் 2 (ஹிஜ்ரி 1437) |
| வெளியீடு | : | இரட்டை மஸ்தான் வெளியீட்டகம் |
| தேவைக்கு | : | இரட்டை மஸ்தான் வெளியீட்டகம் 74/1, ஆப்ரஹாம் பண்டிதர் ரோடு, தஞ்சாவூர். |
| தொடர்புக்கு | : | email:abdulrazack415@yahoo.com Cell : 9940586090 |
| நன்கொடை | : | ₹ 200/- |

பொருளடக்கம்

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

பொருளடக்கம்

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

# பொருளடக்கம்





# பொருளடக்கம்

## முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் துவக்கம். அகிலத்திற்கோர் அருள் பிழம்பாய் அவதரித்த அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தினர்கள், தோழர்கள், இறைநேசர்கள், அனைவர்களின் மீதும் கருணையும் ஈடேற்றமும் உண்டாவதாக.

தமிழ் கூறும் நல்உலகில் பழம்பெரும் ஆலிம்கள் அரபுத் தமிழ் எனும் மொழியை உருவாக்கி அதன் மூலம் மார்க்க சட்டங்களையும், இஸ்லாமிய ஷரீஅத்தையும் கற்றுக் கொடுத்தார்கள். எத்தனையோ ஞான நூல்கள், தப்ஸீர்கள் அரபுத் தமிழில் வெளிவந்துள்ளது. அரபுத் தமிழ் படிப்பதை இஸ்லாமிய மக்கள் கட்டாயமாக்கிக் கொண்டிருந்தார்கள். இஸ்லாமிய பெண்கள் கூட அரபுத் தமிழில் சரளமாக படிக்கவும், எழுதவும் கற்றிருந்தார்கள். இஸ்லாமிய ஆரம்ப பாடசாலையில் குர்ஆனை ஓதி முடித்ததற்கு பின்னால் பராயினில் முஃமினீன், சிம்துஸ் ஸிப்யான், அஹ்காமுல் ஹனபியா, நூர்நாமா போன்ற அரபுத்தமிழ் நூல்கள் வாசிப்பது நடைமுறையில் இருந்தது. இதனால் மக்கள் இஸ்லாமை மிகத் தெளிவான முறையில் அறிந்து வைத்திருந்தனர். வஹ்ஹாபிகள் மார்க்கத்தில் குழப்பத்தை ஏற்படுத்த இடம்பாடு இல்லாதிருந்தது. ஆனால் தற்காலத்தில் அரபுத் தமிழை உதாசீனப்படுத்தியதின் விளைவு மக்தப் மதரஸாக்களில் குர்ஆன் ஓதுவதோடு நின்றுபோனது. இதனால் இஸ்லாமிய சிறுவர்கள் அடிப்படை சட்டங்களைக்கூட தெளிவு பெறாத சூழலில் வஹ்ஹாபிகளின் பொய்யான விளக்கவுரைகளை நம்பி ஈமானை இழந்து வருவதை, இஸ்லாம் தன் தன்மானத்தை இழந்து வருவதை

கண்கூடாக பார்க்கின்றோம். இந்தப் பிரச்சனைக்கு தீர்வு காணும் விதமாக அரபுத் தமிழை மீண்டும் இஸ்லாமிய மக்களுக்கு மத்தியில் நிலை நிறுத்திட இஸ்லாமிய குழந்தைகளுக்கு கற்றுத்தர வேண்டி அரபுத் தமிழில் உள்ள சிம்துஸ் ஸிப்யான் எனும் இந்நூலை அப்படியே தமிழில் வெளியிட்டு இருக்கிறோம்.

இதில் நூல் ஆசிரியர் எப்படி எழுதியிருக்கிறார்களோ அப்படியே தொகுத்து இருக்கிறோம். இதில் உள்ள அடிப்படை சட்டங்கள், கொள்கைகளைப் படித்து மனதில் நிறுத்தி நபிகளாரும், சஹாபாக்களும், தாபியீன்கள், தபஅதபியீன்களும் வலிமார்களும் எந்த இஸ்லாத்தை கற்றுத் தந்தார்களோ அந்த இஸ்லாத்தின்படி வழி நடப்போம். இஸ்லாமிய பெயர் தாங்கிகளான யூத, நஸாராக்களின் முகமூடியை கிழித்தெறிவோம்.

இரட்டை மஸ்தான் வெளியீட்டகம்
தஞ்சை

# பொருளடக்கம்

## ஆசிரியர்களின் கவனத்திற்கு...

இந்நூல் பாரம்பரியமாக நம்முடைய சுன்னத் வல் ஜமாஅத் உலமாக்களின் கொள்கை, கோட்பாடுகள் படி உருவாக்கப்பட்டு காலம் காலமாக, வாழையடி வாழையாக மக்தப் என்னும் அரபி ஆரம்ப பாடசாலையில் நடத்தப்பட்ட அரபுத் தமிழ் நூலின் பதிப்பாகும். உஸ்தாதுமார்கள், ஆசிரிய பெருந்தகைகள் தயவு கூர்ந்து தன்னுடைய மாணவர்களுக்கு அரபுத்தமிழை படித்துத் தரும்படி தாழ்மையோடு வேண்டுகிறோம். அரபுத்தமிழை படிக்கும்போது இந்த தமிழ் பதிப்பை உதவி நூலாக வைத்துக் கொள்ள வேண்டுகிறோம். இன்று வஹ்ஹாபிகள் பிள்ளைகளுக்கு பாடம் சொல்லித்தருகிறோம் என்று சுன்னத் வல் ஜமாஅத் கொள்கைகளுக்கு மாற்றமான நூல்களை கொடுத்து மதரஸா பாடத்திட்டம் என்ற பெயரில் ஏமாற்றுகின்றார்கள். எனவே உஸ்தாதுமார்கள் இந்த விஷயத்தில் கவனமாக இருந்து இஸ்லாத்தை அடுத்த தலைமுறையிடம் சேர்க்க உதவி புரியுங்கள். வஸ்ஸலாம்.

மௌலவி
**M.இப்னு முஹ்யித்தீன்**